## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1 உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.

2 விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Th ough Action] செய்து காண்பித்தார்)

3 திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)

7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி 9:1-6) இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்று (அப். 1 · 1; 10·40-43).

CHIEF PASTOR N LAZAR

### இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

மதங்களின் சரிவை, ஆத்மீக நிலையின் வீழ்ச்சியை கடந்த ஆண்டு கடைசியில் இந்தியாவில் கண்டோம். இந்திய மதங்கள் மனிதனை பாவம் செய்யத் தூண்டி, கல்லெறிய கற்பித்து, பொய் சொல்லச் சொல்லுகின்றன, மக்களை நரக அக்கினிக்கு நேராக வழி நடத்துகின்றன என்று ஏற்கெனவே நாம் எழுதியபடி நிரூபித்துவிட்டன. என்னே, அம்மதங்களின் சிறப்பு. இந்த நாட்களில் கிறிஸ்தவம் தான் தெய்வீக ஒளியை வீசி உயர்ந்து காணப்படுகிறது. தவறான மதக்காரர்கள் கூடுகிறார்கள் என்றால் முதலாவது அங்கே பொய்யும், கலகமும், கூச்சலும், பதஷ்டமும், தீமையும், கொலையும், சாவுகளும் காணப்படும். பாஷை, மதம், ஜாதி என்ற விஷத்தைத் தூண்டினால் புத்தியில்லாத மிலேச்ச மனிதர்கள் மதுவுண்ட மந்தி போல் குதித்து கூச்சலிட்டு, அடித்து, பிடித்துக் கடித்து, கொலை செய்து, கொள்ளையடித்து, தீக்கொளுத்துவார்கள் என்பதை அறிவுள்ள சில புத்திசாலியான மனிதர்கள் அறிந்து இவைகளைத் தூண்டிவிட்டு தங்களுக்கு பெயரும், புகழும், பதவிகளையும், பொருளையும் சேர்த்துக் கொள்ளுகின்றனர். அந்த மதத்தின் எல்லாத் தலைவர்களும் கூடினபோது வெளிப்பட்டதே அதனுடைய உண்மையான சுரூபம், அதின் சிறப்பு ஆகும். அவர்கள் தீமை செய்ய அறிவாளிகள், நன்மை செய்யவோ அறிவில்லாதவர்கள் என்று வேதம் நன்றாய்ச் சொல்லியிருக்கிறது. கிறிஸ்தவர்களாகிய நாமும் தேவனுடைய பிள்ளைகளாய் தேவ சித்தப்படி அவ்வப்பொழுது நடந்து நன்மை செய்வோமாக. அந்தந்த காலத்துக்கும், சமயத்துக்கும் தேவன் எதைக் கட்டளையிடுகிறாரோ, ஏவுகிறாரோ அதுவே நன்மை. கிறிஸ்தவம் ஒன்றே உலகத்திற்கு மெய் மதம், வழி. இதனால் ஜீவன் உண்டு. இந்த வழியில் மரணம் இல்லை என்பது நிரூபணம். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு ஸ்தோத்திரம். அவர் நம்முடைய வல்லமையை உலகத்தில் காண்பிப்பாராக!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிருபை வரங்கள் (தொடர்ச்சி)

வரங்கள் எல்லாம் ஒரே தன்மையில் முக்கியம் வாய்ந்தது என்றும், சிறந்தது என்றும், ஒன்று மற்றொன்றை விட சிறந்தது அல்ல என்றும் நாம் அறிய வேண்டும். அப்படியிருக்க முக்கியமான வரங்களை நாடுங்கள் (I கொரி. 12:31) என்று எழுதப்பட்டிருப்பது ஏன்? முக்கியமான வரம் ஒன்றுண்டோ? நிச்சயமாக உண்டு. அப்படியெனில், ஒன்பது வரங்களில் எது முக்கியமானது? இதை நாம் சரியாக புரிந்து கொள்ள வேண்டும்.

உடலின் எல்லா அவயவங்களும் முக்கியமாகவும், சிறந்ததாகவும் இருப்பது போன்றே வரங்களெல்லாம் முக்கியத்துவம் வாய்ந்ததும், சிறந்ததுமாய் இருக்கின்றன. சிறந்த வரம் என்றோ சிறப்பற்ற வரம் என்றோ இல்லை. ஆனால், முக்கியமான வரம் உண்டு.

இந்த முக்கியமான வரம் எது?

ஒரு தனிப்பட்ட கூட்டத்திற்கு அல்லது ஒரு தனிப்பட்ட சமயத்திற்கு மிகவும் பிரயோஜனமாயிருப்பது எந்த வரமோ அது தான் அந்த சந்தர்ப்பத்திற்கு முக்கியமான வரம். அதனால் சந்தர்ப்பத்திற்கேற்றாற் போல முக்கிய வரங்களும் மாறிக்கொண்டே இருக்கும். தாகத்தால் நாவறண்டு வனாந்திரத்தில் சோர்ந்து போயிருக்கும் மனிதனுக்கு, சுற்றிலும் அவன் தேடுவது தண்ணீரே. அச்சமயம், ஒரு மனிதன் ஒரு கோப்பையில் தண்ணீரும், இன்னொருவர் ஒரு தங்கக்கட்டியும் அவனிடத்தில் கொண்டுவந்தால் அவனைப் பொறுத்த மட்டில் அப்பொழுது மிகவும் முக்கியமான பொருள் எதுவென்றால் தண்ணீர் தான். தங்கக்கட்டி நல்லது தான். ஆனால், தாகத்தால் மரிக்கும் நிலையில் இருக்கும் ஒருவனுக்கு தங்கத்தைக் காட்டிலும் முக்கியமானது தண்ணீரே. அதைப் போன்றே எதையும் பார்க்க முடியாமல் இருட்டில் கஷ்டப்படுகிறவர்களுக்கு அப்பொழுது கட்டுக் கட்டான ரூபாய் நோட்டுகளல்ல ஒரு சிறிய தீபமே அவசியமாக இருக்கிறது.

சரீரப்பிரகாரமாகவும், ஒருவர் பேசும் பொழுது மிகவும் முக்கியமான அவயவம் நாவாகும், கால்களல்ல. பிரசங்கத்தைக் கேட்க உதவும் முக்கியமான அவயவம் காதாகும், நாவல்ல. ஒரு இடத்திற்குச் செல்ல உதவும் அவயவம் கால்களே, கைகளல்ல. ஆனால் ஒரு பொருளை எடுக்க முயற்சிக்கும் பொழுது முக்கியமான அவயவம் கைகளே. கால்களோ, காதுகளோ வல்ல. ஆகவே, எல்லா அவயவங்களும் சிறந்ததுதான். அதே சமயத்தில், ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் ஒரு குறிப்பிட்ட அவயவம் முக்கியமாகவே இருக்கிறது. இதைப்போன்றே ஆத்மீக வரங்களும், ஒரு தருணத்தில் அவசியமாயிருப்பது எவ்வரமோ அதுவே அந்த சமயத்திற்கு முக்கியமான வரம். சில உதாரணங்களைப் பார்ப்போம்.

பக்தி வேஷக்காரர்களாகிய அனனியாவும், சப்பீராளும் சபையில் உட்பிரவேசித்தபொழுது, பேதுருவினிடத்தில் குணமாக்கும் வரம் கிரியை செய்திருக்குமென்றால், பிரகாசித்திருக்கும் என்றால் அதனால் பிரயோஜனம் என்ன? பக்தி வேஷக்காரர்கள் எளிதில் தப்பியிருக்க முடியும். அங்கு அறிவை உணர்த்தும் வரம், இருதயத்தை பகுத்தறியும் வரம் கிரியை செய்தது. ஆகவே, அந்த சமயத்திற்கு அந்த வரம் முக்கியமானதாக இருந்தது.

எலிசாவின் காலத்தில் கோடரி தண்ணீரில் அமிழ்ந்த பொழுது தீர்க்கதரிசன வரம் அந்த இடத்தில் கிரியை செய்திருந்தால் எந்த பிரயோஜனமும் இருந்திருக்காது. எல்லோரும் ஏமாந்தே போயிருப்பார்கள். அப்பொழுது அந்த இடத்தில் அற்புதங்களின் வரம் தேவைப்பட்டது.

அந்த வரத்தின் மூலமாக கோடி அவர்களுக்குக் கிடைத்தது. ஒரு நோயாளியின் முன் நாம் ஜெபிக்கும் பொழுது அந்நிய பாஷை வரம் முக்கியமானதல்ல, குணமாக்கும் வரமே முக்கியமானது.

தேவ ஊழியர்கள் கூட்டத்தில் முக்கியமாகத் தேவை ஞானத்தின் வரமே. ஆகையால், ஒரு இடத்தில் மிக அவசியமாகவும், உபயோகமாகவும், பக்தி விருத்திக்கு ஏதுவாகவும் இருக்கக் கூடியது எந்த வரமோ அவ்வரமே அந்த இடத்திற்கு முக்கியமான வரம். தனிப்பட்ட எந்த வரமும் முக்கியத்துவம் பெறவில்லை. எனினும், அவசியம், உபயோகம் இவற்றின் அடிப்படையில் முக்கிய ஸ்தானம் ஒவ்வொன்றுக்குமுண்டு. முக்கியமான வரத்தை நாடுங்கள் என்று குறிப்பிடுவது, நீங்கள் இருக்கும் கூட்டத்திற்கு மிக அவசியமாக இருப்பது எந்த வரமோ [ஆவியானவருக்கு மாத்திரமே அது சரியாகத் தெரியும்] அந்த வரமே உங்கள் மூலம் கிரியை செய்ய ஆவியானவரை நாடுங்கள் என்பதே நீங்கள் செய்ய வேண்டிய காரியம். மற்றவைகளை பரிசுத்த ஆவியானவர் பார்த்துக் கொள்ளுவார்.

சிலர் எப்பொழுதும் தீர்க்கதரிசனம் சொல்லுவதையே விருப்பமாய்த் தேடுகிறார்கள். குறி சொல்லுகிற ஆவியைப் போல், ஜோசியக்காரரைப்போல் தாங்கள் விரும்புகிற காரியங்கள் தெரிய வரவேண்டுமென்று விரும்புகிறார்கள். இந்த வரத்தை முக்கியப்படுத்துகிறார்கள். இதனாலே தவறான கூட்டங்களும் தவறான ஆட்களும், தவறான வரங்களும் கிரியை செய்கின்றன. ஆனபடியினால், ஆவிக்குரிய வரங்களைப் பற்றி தேவஜனங்கள் அறிந்து கொள்ள வேண்டிய அறிவுரைகளும் எச்சரிப்புகளும்:

1. வரங்களைக் குறித்து அறிவுடையவர்களாக இருக்கவேண்டும் [I கொரி. 12:1].

2. வரங்களைப்பற்றி வாஞ்சையாய் இருக்க வேண்டும். முக்கியமான வரங்களை நாடுங்கள்; ஆவிக்குரிய வரங்களில் விசேஷமாய்த் தீர்க்கதரிசனத்தை விரும்புங்கள், தீர்க்கதரிசனம் சொல்ல நாடுங்கள். வரங்களைப் பற்றிய அறிவைப் பெற்ற நாம் அதற்காக வாஞ்சையாய் இருக்க வேண்டியது அவசியம். வாஞ்சையாயிருக்கிறவர்களுக்கு மட்டுமே ஆவியானவர் அதைக் கொடுக்கிறார். அறிவுள்ளவர்களும் அநேகர் வரங்களை வாஞ்சிப்பதில்லை. ஆனபடியினால் வரங்களை வாஞ்சிக்க வேண்டும்.

3. வியாக்கியான வரத்திற்காக ஜெபம் பண்ணவேண்டும். வியாக்கியான வரம் உண்டாயிருக்குமென்றால் பிறருடைய ஆவியை அறிந்து கொள்ளுகிறதும் அவர்கள் மூலமாய் கிரியை செய்கிறது என்னவென்றும் தெரியவரும். மிகவும் பிரயோஜனமாக இருக்கும்.

4. வரங்களை உபயோகிக்கவேண்டும். வரங்கள் பிறரின் பிரயோஜனத்திற்காகவே அருளப்படுகிறது. அந்த நோக்கம் தடைபடாதபடி ஆவிக்குரிய வரங்களை நாடுகிற நாம் சபை பக்திவிருத்திக்கு ஏதுவாக அதில் தேற வேண்டும், அதை உபயோகிக்க வேண்டும்

5. வரங்களை அற்பமாக எண்ணக் கூடாது. வரங்களைப்பற்றி அசதியாயிராதே இவைகளில் நிலைத்திரு என்றும் எழுதப்பட்டுள்ளது. அசட்டையாய் வரங்களை நினைக்கிறவர்கள் அதை தகுந்த இடத்தில் தகுந்த விதமாய் உபயோகிக்கிறதில்லை. இவ்வித அசதி மனப்பான்மை பெரிய தவறாகும். அதற்காகவா ஆவியானவர் உங்களுக்கு வரங்களைக் கொடுக்கிறார்? வரத்தை பொது நன்மைக்காக உபயோகிக்கிறதில் நாம் கவனமாய் இருக்க வேண்டும்; தேவன் மகிமைப்படட்டும்.

6. வரங்களை சுடர் விடச் செய்யுங்கள். இதினிமித்தம், நான் உன் மேல் என் கைகளை வைத்ததினால் உண்டான தேவ வரத்தை நீ அனல் மூட்டி எழுப்பி விடும்படி உனக்கு நினைப்பூட்டுகிறேன் [ II தீமோ.

1:6]. கிருபை வரம் சுடர்விச சிலர் விரும்பாததின் காரணம் அல்லது சோர்வடைந்து இருப்பதின் காரணம் பயம் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது. சிலர் துன்பத்துக்குப் பயந்து, சிலர் நபர்களுக்கு பயந்து, சிலர் ஆட்களின் விருப்பு வெறுப்புகளுக்கு பயந்து சிலர் வெட்கத்தாலும், தங்களிலுள்ள வரங்களை ஒளிர் வீசச் செய்யாமல் இருந்து விடுவதுண்டு. இது பெரிய தீமையாகும். அதனால் தான் பவுல், தேவன் நமக்குப் பயமுள்ள ஆவியைக் கொடுக்கவில்லை (II தீமோ. 1:7) என்று நினைப்பூட்டுகிறார். ஆகையால், எந்நேரத்திலும் நம்மிடத்திலுள்ள கிருபை வரத்தை ஒளிர் வீசச் செய்வதில் நாம் கவனமாய் இருக்க வேண்டும். அது பிரகாசிக்காவிடில், எரியாவிடில் அது மிக விரைவில் அணைந்து விடும்.

### 7. நலமானவைகளை பிடித்துக் கொள்ளுங்கள்!

எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்து நலமானதை பிடித்துக் கொள்ளுங்கள் [I தெச. 5:21]. பல காரியங்கள் நடைபெறும் போது சில தவறுகளும், குறைபாடுகளும் ஆங்காங்கே உண்டாகலாம். துர் உபதேசங்கள்; தவறான வியாக்கியானங்கள் மூலம் உண்மையுள்ள ஜனங்களை வஞ்சனையில் ஈடுபடுத்த சாத்தான் முயற்சிப்பான். அவ்வாறு நடைபெறும் போது எல்லாவற்றையுமே தவறு என்று நினைத்து விடாமல் தேவ வசன ஒளியில் எல்லாவற்றையும் சோதித்து, நலம் என விளங்குகிறதை நாம் பிடித்துக் கொள்ள வேண்டும். அது தான் உன்னதமான வழி. வசனத்தின் உபதேசம் அதுவே. இந்தப் பொருளின் அடிப்படையில் வேத வசனம் கூறும் எச்சரிப்புகளை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

#### 1. தடைபண்ணாதிருங்கள் (I கொரி. 14:39).

ஆவியில் நிறைந்து அந்நிய பாஷை பேசுகிறதை தடைபண்ணவோ, கண்டிக்கவோ முயற்சிக்கிறவர்களுக்கு எதிராகவுள்ள வலிமையுள்ள எச்சரிப்புத்தான் இது. எக்காரணத்தாலும் அந்நியபாஷை பேசுவதை தடை செய்வதோ, அவர்களை அருவருப்பாய் எண்ணுவதோ கூடாது. அவர்களை பக்குவப்படுத்த வேண்டும்.

#### 2. அவித்துப் போடாதிருங்கள்.

தவறை திருத்துவதற்கு தவறான வழி இதுவே. ஆவியை அவித்துப் போடுவது ஆவியானவருக்கு விரோதமாகச் செய்யும் மிகப்பெரிய தவறாகும். ஆவிக்குரிய கிரியைகளை எம்முறையிலாவது அவித்து விடாமல் அல்லது கீழ்ப்படுத்த முயற்சிக்கிறவர்களுக்கு இது எச்சரிப்பாகும். ஆவியானவருடைய கிரியைகளை நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் அதை ஒரு போதும் அவித்துவிட முடியாது.

#### 3. அற்பமாய் எண்ணாதிருங்கள் (I தெச. 5:20).

இது ஆவியானவருடைய கிரியைகளைப் பற்றிய தவறான சிந்தையாகும். ஆவியானவர் உங்களோடு பேசும் போது அவருக்கு பூரணமாகக் கீழ்ப்படிய வேண்டும். அவ்வாறு செய்யாதபடி அதை அற்பமாக எண்ணி தள்ளிவிடவோ, இழிவாகவோ கருதக் கூடாது. இதுவும் ஆவியானவருக்கு விரோதமான பாவமே. இவ்வசனத்தை இதர மொழி பெயர்ப்புகளில் கவனிக்கும் பொழுது தீர்க்கதரிசனத்தை கீழான நிலையில் நினைக்கக் கூடாது என்றும், தீர்க்கதரிசன வெளிப்படுத்தல்களை மதிப்பற்றதாக எண்ணக் கூடாது என்றும், தீர்க்கதரிசன அறிவுரைகளை தள்ளிவிடக்கூடாது என்றும், சொந்த மனதோடு தீர்க்கதரிசனத்தை நிதானிக்கக்கூடாதென்றும், தீர்க்கதரிசன வெளிப்படுத்தல்களை ஒரு போதும் ஏற்றுக் கொள்ளாமலிருக்கக் கூடாது என்றும், அது கொடுக்கின்ற செய்திகளை கேவலமாக எண்ணக் கூடாது என்றும், வெவ்வேறு மொழி

பெயர்ப்புகளில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினுல், ஆவியினுல் அருளப்படுகின்ற செய்திகளை கேவலமாக நினைத்து புறக்கணித்து விடுகிறவர்களுக்கு எதிராக உள்ள தேவ எச்சரிப்பை நாம் மறக்காமல் இருப்போமாக.

இந்தக் காலத்தில் வரங்கள் தீவிரமாகக் கிரியை செய்ய வேண்டியதாயிருக்கிறது. சிலர், தீர்க்கதரிசன வரத்தை மாத்திரம், சிலர் குணமாக்கும் வரத்தை மாத்திரம் தேடிக் கொண்டு அலைகிருர்கள். அப்படியில்லாமல், ஆவியின் வரங்கள் எல்லாவற்றினுலும் நாம் நிறைந்திருக்க பிரயாசப்படுவோமாக. சரியானபடி இவைகளை திருச்சபையின் ஆளுகையிலே கற்றுக் கொண்டு பயிற்சி பெற்று சரியானபடி அதை உபயோகிக்க வேண்டும். தனி சம்பாத்தியத்திற்கோ, ஆதாயத்திற்கோ வரங்களை உபயோகிக்கக் கூடாது. அப்படிச். செய்கிறவர்கள் சீக்கிரமாக அந்த வரங்களை இழந்து போவார்கள்.

சிலர் ஒருவரமும் வேண்டாம். அன்பு தான் முக்கியம் என்று சொல்லிக் கொள்வார்கள். அன்பு இருந்தால் எல்லா வரமும் இருக்கும் என்ருே. அன்பு மாத்திரம் முக்கியமானது என்ருே வேதாகமத்தில் ஒரு இடத்திலும் சொல்லப்படவில்லை. வரங்கள் கிரியை செய்யும் போது அன்புடனே கூட வரங்களை உபயோகிக்க வேண்டுமென்றே சொல்லப்பட்டுள்ளது. கறிக்குழம்பு இல்லையென்ருல் சாதத்தால் பிரயோஜனமில்லையென்று கூறினுல் சாதம் வேண்டாம், குழம்பு போதும் கறி இருந்தால் எல்லாம் இருக்கிறது என்று அர்த்தமல்ல; சாதத்துடன் கறிக்குழம்பும் தேவை. ஆகவே வரங்களுடன் அன்பு இருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது.

சிலர் அன்பே பிரதானம். அன்பே பிரதானம் என்று பாடிக்கொண்டு ஏணியின் ஏழாவது படியே போதும் என்று சொல்லுவார்கள். ஏழாவதுபடி போகிறதற்கு ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறுபடிகளும் தேவை என்பதை அறியாமல், பரிசுத்த ஆவியின் அபிஷேகமே பெருமல் அன்பு, அன்பு என்று வீம்பு பேசித் திரிவார்கள். அப்படிப்பட்டவர்களை விட்டு தேவ ஜனங்கள் விலக வேண்டும். இவர்கள் எல்லாரும் வேதப்புரட்டர்களே. பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்று, கீழுள்ள ஆறுபடிகளின் வழியாக ஏழாவது நிலையை நாம் பூரணமாக அடைய முடியும் என்றே வேதாகமம் போதிக்கிறது [I கொரி. 12,13,14 அதிகாரங்கள்.]

வரங்களைப் பெற்றவர்கள் ஆவியிலோ, பரிசுத்தத்திலோ பூரணமடைந்தவர்களாகவோ இருப்பார்கள் என்று சொல்லப்படவில்லை. பலன்கள் தான் அளவு கோலாக இருக்க வேண்டும். தெய்வீக அன்புடன் செயல்பட வேண்டும் என்பதை அறிந்து கொள்ளுங்கள் [மத்.7:15-23]. வரங்களுக்காக வாஞ்சையுள்ளவர்கள், வரங்களைப் பெற்றுக் கொண்டவர்கள் அவைகளைச் சுடர்விசச் செய்யுங்கள். தேவ சமூகத்தில் உண்மையுள்ளவர்களாயிருங்கள். அதற்குரிய கணக்கை தேவ சமூகத்தில் ஒப்புக் கொடுக்க வேண்டுமென நினைத்துக்கொள்ளுங்கள்.

☐ முற்றும். ☐

"முக்கியமான வரங்களை நாடுங்கள்".
I கொரி.12: 31

## பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Pastor கிறிஸ்துதாஸ் | Sis. அமலா | வள்ளியூர் | 22-12-1992 |

# இந்து மதம்

(தொடர்ச்சி)

விக்கிரகாராதனைக்காரரும் ஆதியிலே இப்படி தான் தோப்புகளிலும், மலைகளிலும், பச்சையான சகல மரத்தடிகளிலும், மேடுகளிலும், பீடங்களைக் கட்டி, விக்கிரகங்களை வைத்து சேவித்துக் கொண்டார்கள். இது தொடங்கி அக்கியானத்திற்கு அலங்காரமும், ஆடம்பரமும், பெருமையும் அதிகரித்தது. மகா சிறப்பான கோயில்கள் ஆசாரியக் கூட்டங்கள், உற்சவ முதலியக் கிரியைகள் மற்றும் அநேக நியமங்கள் இவைகளெல்லாம் ஏற்பாடாகி விட்டன. தொகையாய்ச் சொல்லின் மனிதனுடைய கண்ணுக்கு அலங்காரத்தையும், காதுக்கு இனிமையும்,, துர்இச்சைகளுக்கு ஏற்க மருளும் இருளுமுள்ள மனதுக்கு பயத்தையும், முக்கியத்தையும் கொடுப்பதற்கு வேண்டியவைகள் எவைகளோ அவைகளெல்லாம் விக்கிரக பர்த்தியினுடைய சிறப்பில் காணலாம்.

இவ்வித சிறப்புகளினூடே விக்கிரக பத்தி உலகெங்கும் பரவிப் போய்விட்டது. யெகோவாவின் சந்ததியார் கல்தேயர் நாட்டிலிருக்கையில் அது முளைத்தது என்று சிலர் சொல்லுகிறார்கள். எப்படியும் மனிதனுடைய ஆத்துமா இறைவனை விட்டு சோரம்போன நிலையே விக்கிரக பக்தியாகும். மேலும் விக்கிரக பக்தி தேசத்துக்கும், காலத்துக்குக் காலம் வேறுபாடாகக் கண்டாலும் அது எங்கும் ஒரே தன்மையுள்ளது என்பதைக் குறித்து நாம் அறிந்து இருக்கத்தக்கதாக இருக்கிறது. அதில், தேவர்களுக்கு வணங்கும் முறைகளும் பெரிதும் வகை மாறுபட்டிருந்தாலும், அதின் ஆதாரம், குணம், பலம் முதலிய விஷயங்கள் ஒரே விதமாக இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

விக்கிரக பர்த்தியும் அதன் காரணமும் அதில் சில பிரதான காரியங்கள் மேற்கோளாகக் கொண்டதே அந்த மேற்கோளாவது யூதருக்கு பூர்வீக ஞானம் தானே. எக்காலத்திலும் எந்த மதஸ்தரும் சில சத்தியங்களை பொதுவாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ஆதியிலே சகலருக்கும் பொதுவான ஒரே வேத விதியுண்டென்று எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். இந்து மதஸ்தரின் செய்கைகளில் பூர்வ ஞானமாகிய யூதர்களுடைய சிதைவுகளை அறியலாம். அதுபோல பூர்வீக எகிப்திய, கிரேக்க, ரோம, தற்கால சீனர், சிங்களவர் முதலிய விக்கிரகாராதனைக்காரர்களுடைய மதங்களிலும், ஆசாரங்களிலும் அச்சினதனைக் காணலாம். கற்றோர் இவைகளை அறிந்து கொள்வார்கள். வேதாகமத்தில் எசேக்கியேல் புஸ்தகத்திலும், உபாகமம், யாத்திராகமத்தில் காணப்படுகிற சில குறிப்புகள் விக்கிர பக்திகளில் காணப்படுகின்றன. இஸ்ரவேலர்கள் வீழ்ச்சியடைந்த போது விக்கிரக பக்தியிலே விழ்ந்தார்கள்.

இந்துக்களின் பல தெய்வங்கள் முனிவர்களால் படைக்கப்பட்டன. அவைகள் தெய்வங்களல்ல. மனிதன் உலகத்தில் பல்வேறு தன்மைகளுள்ள நிலங்களில் வாழ்கிறான். சில மண்களில் சில செடி மரங்கள் வளராது. இதற்கு இன்னொரு காரணமும் உண்டு. கிரகங்களுக்கும் பூமிக்கும் உள்ள தொடர்பாகும். உலகத்தில் அவ்விதமாக பல்வேறு மக்கள் காணப்படுகிறார்கள். ஒவ்வொரு பாஷை (சத்தம் ஒரு வித இனங்களை உருவாக்குகின்றது. கிரகங்கள் மனிதனுடைய வாழ்க்கையின் மேல் ஆளுகை செய்கிறது என்று எண்ணி ஒவ்வொருவரும் பிறக்கும் பொழுது அப்பொழுதிருந்த ராசிக்கு ஏற்ப அவர்களுக்கு பெயர் சூட்டுகிறார்கள். அந்தப்பெயர் ஒரு ஆளையும் அந்த ஆளுடைய குணநலன்களையும், பழக்கவழக்கங்களையும் குறிப்பிடுகின்றன. அதே பேருள்ள இன்னொருவரும் அப்படியே இருப்பார். (உ.ம்) கிருஷ்ணன் என்று பெயருடைய எல்லா

ரும் இப்படியே இருப்பார்கள். இன்ன பெயருடைய எல்லாரும் இப்படியே இருப்பார்கள் என்று பொதுவாக நாம் சொல்லக் கேட்டிருக்கிறோம் இதனால் தான் பெயருக்கேற்றாற்போல் அவரவருக்கு ஒரு குல தெய்வம் உண்டாக வேண்டுமென்று முனிவர்கள் தெய்வங்களை படைத்தார்கள்.

ஒரு மனிதன் மனதிலே தெய்வம் என்று சொல்லப்படுகிறதை எண்ணி, மந்திரம் என்று சொல்லப்படுகிறதை உச்சரித்தால் அந்த தெய்வ உருவம் தோன்றும். இது சத்தத்தினால் உண்டாகிற உருவமாகும். ஒவ்வொருவரும் அவரவருடைய பெயருக்கு ஏற்றாற்போல் ஒரு ஒத்த தெய்வத்தை வணங்கும்படியாக நியமிக்கப்பட்டது. சிலருக்கு காளி தெய்வம், சிலருக்கு அங்காளம்மன் தெய்வம் சாதகமாக அமையாது. அதனால் இந்த தெய்வங்களை துஷ்ட தேவதைகள் என்கிறார்கள். பலருக்கும் இந்தத் தெய்வங்கள் சாதகமாக அமையாததன் காரணம் இந்த தெய்வங்களின் பெயர் உச்சரிப்பின் சத்தம். அவர்களுடைய பெயர் உச்சரிப்பின் சத்தம் பொருந்தி அமையாததினால் மனிதனுக்கு பெயர் உச்சரிப்பு முக்கியமானது என்று சொல்லி அந்த பெயர் உடையவர்களுக்கு வெவ்வேறு உருவங்களை, தெய்வங்களை படைத்தார்கள். உதாரணமாக தமிழ் நாட்டில் மருதம், குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை என்று ஐந்து வகையாக நிலங்களைப் பிரித்தார்கள். ஐந்து வகை தெய்வங்களை, உருவங்களைக் கொடுத்தனர். வடிவம் என்பது சத்தத்தின் தோற்றம் என்பதை இங்கு நினைவு கொள்ள வேண்டும். ஆனால் இப்படி வகுத்துக் கொடுத்த தெய்வங்களை அல்லது வடிவங்களை விட்டு அவர்கள் பெயருக்கொத்த தெய்வங்களை வணங்காமல் வெவ்வேறு தெய்வங்களை வணங்குகின்றனர். இது சரியல்ல. கிறிஸ்தவர்களானால் கண்டிப்பாய் பெயர் மாறிக் கொள்ள வேண்டும்.

இதன் மூலமாக, மனிதன் கிரகங்களினால் ஆளப்படுகிறான் என்று அவர்கள் நம்புகிறபடியினால் அதற்குத்தக்கபடி தெய்வங்களைப் படைத்தார்கள் அவைகள் தெய்வங்களல்ல. உதாரணமாக, சமீபத்தில் திருச்சியில் குஷ்பு எனப்பட்ட வட இந்திய சினிமா நடிகைக்கு 'குஷ்பு தேவாலயம்' என்று ஆலயம் கட்டித் தொழுது கொள்கிறார்கள். நவக்கிரகத்தைக் கட்டியாளும் ராணியே, சக்தியே, தேவியே பாவங்களை நீக்க வந்த மகிமை மிகு தாயே! போற்றி, போற்றி என்றும், இன்னும் பலவிதமாய்வக்கணைத்தும் கும்பிடுகிறார்கள். அவரவர்களுடைய விருப்பத்தின் பிரகாரம் அவரவர்களுக்குத் தெய்வங்களை உண்டு பண்ணிக் கொண்டார்கள். இவைகள் சாட்சாத் பரமேஸ்வரனோ தெய்வங்களோ அல்ல.

இந்து மதத்தின் பிரகாரம் தெய்வம் என்று ஒன்றுமில்லை. தெய்வம் என்று சொல்லப்படுகிறது "அகம் பிரம்மாதத்துவ மசி" நீயே அது. தெய்வம் என்று ஒன்றும் கிடையாது நீயே கடவுள், உன்னை உன்னுடைய உருவத்தை வடித்தோ போட்டோ எடுத்தோ அல்லது ரசம் பூசப்பட்ட கண்ணாடி முன்னே இருந்து பார்த்து வணங்குங்கள் அப்பொழுது சக்தி பிறக்கும் என்று உபதேசம் கொடுக்கப்படுகிறது. உதாரணமாக, இராமலிங்க அடிகளார் கண்ணாடியில் தன் உருவத்தையே உற்றுப் பார்த்து, அதை வணங்கி, அதைத் தியானித்து ஞானமடைந்ததாக சொல்லப்பட்டுள்ளது. எனவே, விக்கிரகாராதனை பேயின் மாறுபாடே. அவர்களுக்கு தேவன் இல்லை. அவைகளில் ஒன்றும் மெய்யான தெய்வமுமில்லை.

(தொடரும்).

அஞ்ஞானிகள் பலியிடுகிறவைகளை தேவனுக்கு அல்ல, பேய்களுக்கே பலியிடுகிறார்கள். I கொரி. 10:20.

கவிசேஷம்

# பாவ கடன்

"எவனுக்கு கடன் அதிகம் மன்னிக்கப்படுகிறதோ அவன் அதிகம் அன்பு கூறுவான்" லூக். 7:40-43.

பாவம் என்று சொல்லுவது சுய சித்தமே மனிதன் தன்னுடைய சுயசித்தத்தை நிறைவேற்றுவதே பாவமாக இருக்கிறது. தேவனுடைய சித்தம் இன்னதென்று அறியும் அறிவு அவனுக்குள்ளே மனசாட்சியின் மூலமாக உணர்த்தப்படுகிறது. ஆனல் இந்த மனச்சாட்சி பாரம்பரியத்தினுலும் இன்னும் பல அந்தகார சக்திகளினுலும் தீட்டுப்பட்டு இருளடைந்திருக்கிறதினல் சில வேளைகளில் மனசாட்சி என்பது வேலை செய்கிறதில்லை.

தேவசித்தம் இன்னதென்று அறிந்தபோதும் அதை மீறி பாவம் செய்கிற அநேக மக்களை பார்க்கிறோம். ஆனபடியினல் சுயசித்தம் பாவம் அன்று. ஆனல், தேவ சித்தம் இன்னதென்று அறிந்தும் அதற்கு மாருய் தன்னுடைய சுய சித்தத்தை செய்வதே பாவமாகும். மனிதன் பகுத்தறிவு உடையவன். மிருகங்கள், பிராணிகள், பறவைகளிலிருந்து இவனை வித்தியாசப்படுத்திக் காட்டுகிறது அது. நன்மை தீமை இன்னதென்று அறியும் அறிவு அவனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. நன்மை செய்வதும், தீமையை வெறுப்பதும் இவனுடைய கடமையாகும்.

தேவன் மனிதனை பாவம் செய்யாதே என்று எச்சரித்துள்ளார். பாவம் என்பதை வெவ்வேறு மதங்கள் வெவ்வேறு விதமாக சொல்லுகின்றன. பாவத்தைப் பற்றிய தெளிவை, இன்னது பாவம் என்று அறிந்து கொள்ளும் அறிவை வேதாகமத்தின் (Bible) மூலமாய் மாத்திரம் தான் தெளிவாய் அறிந்து கொள்ள முடியும். கலாச்சாரம், மதம் என்றெல்லாம் சிலர் பிதற்றுகிருர்கள். இந்திய தேசத்தை எடுத்துக் கொண்டால் ஒவ்வொரு இடத்திற்குத் தக்கபடி கலாச்சாரம் வேறு படுகின்றது. எந்தக் கலாச்சாரத்தை இவர்கள் சொல்லுகிருர்கள் என்று சரியாக இவர்கள் விளங்கிக் கொள்ளவில்லை.

தென் இந்தியாவை பொறுத்த மட்டில் ஒரு ஸ்திரீ ஒரு புருஷனுக்கு விவாகமாகி தன் கணவனுக்கு உண்மையாயிருக்கிறது கற்பு என்றும், நல்லது என்றும் எண்ணுவார்கள். வட இந்தியாவில் ஒரு ஸ்திரீ தன் புருஷனைப்போல தன் புருஷன் உடன் பிறந்தவர்களுக்கும் உண்மையான மனைவியாய் இருக்கிறது அங்குள்ள கலாச்சாரமாகும். ஆகையினுல், இந்திய கலாச்சாரம் என்று எதை சொல்லுகிருர்கள் என்று அவர்களுக்கே தெரியாது.

வேதாகமத்தில் மிகவும் தெளிவாய் பாவத்தைப் பற்றிய விபரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. செய்ய வேண்டிய நன்மையை செய்யாவிட்டாலும் அது பாவமே. [நியா. 5:23; மத். 25:25,27,45]. ஆனபடியினல் மற்ற மதங்கள் பாவத்தைப் பற்றி தெளிவாய் சொல்லவில்லை என்று நாம் தீர்க்கமாய் அறைகூவி அறிவிக்க முடியும். வேதாகமமானது பாவத்தை பெரும் கடன் என்று மத். 18:23-35; லூக். 7:40-48ல் சொல்லுகிறது. கடன்படுகிறது என்ருல் மனிதனுக்கு மிகவும் தர்மசங்கடமான காரியம். கடன் உள்ளவர்களுக்கு சரியாக நித்திரை வராது அந்தக் கடன் அடைக்கப்படும் மட்டும் அவர்களுக்கு நிம்மதி இல்லை.

கம்பராமாயணத்திலே இப்படி ஒரு கவிதை வருகிறது. இராமனுடைய மனைவி சீதையை களவாய் இராவணன் கொண்டு போனன். இதினிமித்தம் அவனுடைய இருதயத்தில் கலக்கமுண்டாயிருந்தது.

"கடன் பட்டார் நெஞ்சம் போல
கலங்கினன் இலங்கை வேந்தன்"
என்று சொல்லப்பட்டுள்ளது.

கடன் கொடுத்தவர்கள் எதிரே வருகிறார்கள் என்றால் கடன் வாங்கினவர்கள் உடனே சந்துக்குள்ளே எங்கேயாவது நுழைந்து கொள்ள, அவர்களுடைய கண்களுக்குத் தப்பி மறைந்து போக விரும்புவார்கள். கடன் கொடுத்தவன் வழித்தெருவில், சந்தை, கடை வீதியிலும் கையைப் பிடித்து என் கடனுக்கு பதில் சொல்லிவிட்டு போ என்று கேட்பான்.

ஆகவே, பாவம் என்று சொல்லப் படுவது தேவனுக்கு விரோதமாய் செய்யப் படுகிறதே. பாவத்தை கடன் என்று வேதாகமம் குறிப்பிடுகிறது. மனிதன் செய்ய வேண்டிய கடமையை செய்யாமல் மாறாய் தீமை செய்து தன்னுடைய கடனை பெருக்கிக் கொண்டு போகிறான். இப்படியாய் ஆயிரம், லட்சம், கோடாக்கோடியாய் அவனுடைய கடன் பெருகிப் போகிறது. நம்முடைய கடனை நாம் அடைத்துத் தீர்க்க முடியாதவர்களாக இருக்கிறோம்.

ஒருவர் கடையிலே வழக்கமாய் கடன் வாங்கிக் கொண்டிருக்கிறார். கடன் அதிகமாகிவிட்டது. 5000 ரூபாய் ஆகிவிட்டது என்று வைத்துக் கொள்ளுவோம். அவர் ஒரு நாள் உட்கார்ந்து ஆலோசித்து, உணர்வடைந்து ஒரு தீர்மானத்திற்கு வந்து கடைக்காரனிடத்தில் போய் இனிமேல் நான் கடன் வாங்க மாட்டேன், ரொக்கம் கொடுத்து வாங்கிக் கொள்ளுகிறேன் என்று சொல்லுகிறாரென வைத்துக் கொள்ளுங்கள், அப்பொழுது கடைக்காரன் சொல்லுவான்: நீ ரொக்கம் கொடுத்து வாங்குகிறது இருக்கட்டும் முதலாவது நீ வாங்கிய கடனை அடை. அதை அடைத்து விட்டு மறு வேலையைப் பார் என்று சொல்லுவான்.

அப்படியே சில மதங்கள் மனிதன் திருந்திவாழ முடியுமென்றும், அல்லாவினிடத்திலே ஒரு தரம் மனந்திரும்பி தன்னுடைய பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்டு அறிக்கை செய்து விட்டால் மன்னிப்பு உண்டாகி விடும். மறுபடியும் பாவம் செய்தால் அதற்கு மன்னிப்பே கிடையாது. அதற்கு தண்டனை நரகம் தான் என்றும் இன்னும் சில மதங்கள் மனிதன் யோகாப் பியாசம் செய்து குண்டலினி சக்தியை மேலே எழுப்பி மேலாதாரங்களுக்குப் போனால் பாவம் செய்யாமல் ஜீவிக்க முடியும் என்றும் பலவிதமாய்ச் சொல்லுகின்றன. சரி அது இருக்கட்டும். ஏற்கெனவே பாவம் பரம்பரையாக தொக்கி வருகிறது. அவனுடைய கரும பாவமுமுண்டு. அதைத் தீர்க்கத் வழி என்ன? கடனை அடைக்க வேண்டும். கடனை அடைத்த பின்பு ரொக்கத்தை செலுத்தி யோக்கியமாய் நடக்கிறதை பின்னாலே பார்க்கலாம்.

ஆனபடியினால், மனிதன் செய்த பாவத்திற்கு சரியாக அவன் நன்மை செய்து அதை சரி செய்ய முடியாது; கடன் அடைபடாது. மேலும் மேலும் அது கடனாகிக் கொண்டே போகும். கடனை அடைக்க ஒரே வழி, பாவத்தை நிவிர்த்திக்க உனக்கு நிர்வாகம் இல்லை என்பதை முதலாவது கண்டு கொள்ள வேண்டியது (மத். 18:25,27). வழி என்ன என்றால் ஒரே வழி தான் மன்னிப்பு கேட்பதன் மூலமாக எஜமான் இரங்கி மன்னித்து விடலாம் (மத். 18:26). மனிதர்களுக்கு விரோதமாக, பிற பிராணிகளுக்கு விரோதமாக பல விதத்திலும் மனிதன் பாவம் செய்கிறான். தனக்கு விரோதமாக தன்னைத் தானே கெடுத்துக் கொள்ளுகிற தவறை செய்கிறான், ஆனால் உலகமும் அதனுடைய பொருட்களும் சகலமும் இறைவனுடையது. அதற்கு குந்தகம் விளைவிப்பது இறைவனுக்கு விரோதமான பாவம், இறைவனுக்கே இவன் கடன் படுகிறான். ஆனபடியினால் இவன் இறைவனிடத்திலே கடனை மன்னிக்கும் படியாய் கெஞ்சி மன்னிப்பை பெற்றுக் கொள்ளலாம் (லூக். 7:41.42.)

இயேசுவானவர் மன்னிக்கிறார் லூக். 7:48), இரட்சிக்கிறார் (லூக். 9:56; யோ.

12:47). மகளே [மகனே], உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்றார் இயேசு லூக். 7:48). யாருக்கு விரோதமாய் பாவம் செய்யப்பட்டதோ அவரே மன்னிக்க முடியும். இயேசுவானவர் இறைவன் ஆனபடியினால் பாவ மன்னிப்பு அருளுகிறார். இந்த மன்னிப்பைப் பெற்றுக் கொண்டவர்கள் பெரு மகிழ்ச்சியடைவார்கள். அவர்களுக்கு தேவ சமாதானம் இருதயத்தில் நிரம்பும். தேவ சந்தோஷம் உண்டாகும். இவ்விதமாய் பாவ மன்னிப்பைப் பெற்றவர்கள் இரட்சிக்கப்படுகிறார்கள், அது முதற்கொண்டு அவர்கள் தேவன் மேல் அன்புள்ளவர்களாய் மாறுகிறார்கள். நன்றியுள்ளவர்களாக, பக்தியுள்ளவர்களாக மாறிவிடுகிறார்கள் (லூக். 7:47). பாவம் செய்யாமல் ஜீவிக்கிறதற்கான வல்லமையும், கிருபையும் இயேசுவினால் அருளப்படுகிறது [யோ. 5:14; 8:11). இதுவே இரட்சிப்பின் மார்க்கம்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து அவரிடத்தில் வந்து, தன்னுடைய கடன்களை, பாவங்களை அறிக்கையிட்டு மன்னிப்பை நீ கேட்பாயானால் தேவன் உன்னுடைய பாவங்களை மன்னித்து விடவும், அதிலிருந்து உன்னை விடுதலையாக்கவும், உன்னை ஆசீர்வதிக்கவும் ஆயத்தமாயிருக்கிறார்.

இயேசுவை நேசி
இயேசுவை விசுவாசி
இயேசுவை தொழுது கொள்!
இறை ஆசீர், மன்னிப்பு உனக்கு
உண்டாகும். ஆமென்!

எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறது போல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும் மத். 6:12

என் தேவனாகிய கர்த்தருக்கு விலையின்றி பலி செலுத்த மாட்டேன்." II சாமு. 24:21.

கிறிஸ்துவுக்குள் அன்பான புதிய எருசலேம் செய்தி வாசகர்களின் கவனத்துக்கு:- பத்திரிக்கைக்கு உங்கள் பங்கை [சந்தா, நன்கொடை] அனுப்பி விட்டீர்களா? "கொடுங்கள் அப்பொழுது உங்களுக்கு கொடுக்கப்படும்"

27.12.1992 அன்று சென்னை-கிளை சபையில் 27 பேர்களும், 15.12.1992 அன்று 13 பேர்களும் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமானார்கள்.

சிறுவர் பகுதி

# முதலாவது அப்பம்

மாலையில் கதிரவன் தனது கதிர்களை குறைத்துக் கொண்டு கடலில் குளிப்பதற்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தான். அதன் பொன்னிறக் கதிர்களால் வானம் மஞ்சள் பூசிக் கொண்டிருந்தது. அந்த மஞ்சள் வண்ணம் 'சல சல வென்று' ஓடிக்கொண்டிருந்த கேரீத் ஆற்றின் தண்ணீர்களில் பிரதிபலித்தது. நதியின் அருகில் அடர்ந்து வளர்ந்திருந்த மரங்களிலிருந்து தென்றல் காற்று மன்திற்கு இதமாக வீசிக்கொண்டிருந்தது. ஆங்காங்கே பறவைகள் பயணத்தை முடித்துக் கொண்டு தங்கள் தங்கள் கூடுகளை நோக்கித் திரும்பிக்கொண்டிருந்தன.

ஜோசப் தம்பதிகளின் அருமை மகள் எலிசபெத்தும் அப்பொழுது தான் மாலை ஞாயிறு பள்ளியிலிருந்து வீட்டிற்குத் திரும்பிக் கொண்டிருந்தாள். "அப்பா நான் வந்து விட்டேன்" என்று சொல்லிக் கொண்டே வீட்டிற்குள் நுழைந்த சிறுமி எலிசபெத்தை, அன்புடன் உச்சிமோந்து அரவணைத்துக் கொண்டார் அவளது தந்தை. ஜோசப் தனது மகளிடம் "என் பிரியமுள்ள மகளே! இன்று உனக்கு ஞாயிறு பள்ளியில் என்ன பாடம் கற்றுக் கொடுத்தார்கள் நீ என்ன கற்றுக் கொண்டாய்?" என்று வினவினர். அதற்கு அச் சிறுமி, அப்பா இன்று தீர்க்கதரிசியாகிய எலியாவைப் பற்றிய வேத பாடத்தை எங்களுக்கு நடத்தினர்கள் என்று பள்ளியில் நடத்தியதை கிள்ளை மொழியில் தெள்ளன விளக்கமாக தந்தையிடம் எடுத்துக் கூறினள். நாமும் அன்று ஞாயிறு பள்ளியில் நடந்த பாடத்தை அறிந்து கொள்ளுவோமா?

ஞாயிறு பள்ளி ஆசிரியர் பிள்ளைகளை நோக்கி, "நாம் இன்று எலியா தீர்க்கதரிசியைப்பற்றி வேதம் சொல்லுவதை அறிந்து கொள்வதற்கு கர்த்தர் கிருபை செய்வாராக" ஆகாப் என்னும் இஸ்ரவேலின் ராஜா காலத்தில் அத்தேசத்திலே மிகக் கொடிய பஞ்சம் உண்டாயிருந்தது. அப்பொழுது எலியா என்ற தேவ மனிதர் சாறிபாத் என்னும் பட்டணத்திற்கு தேவனால் அனுப்பப்பட்டார்.

அங்கு அவர் வந்த போது, பட்டணத்து ஒலிமுக வாசலில் ஓர் ஏழை விதவைப் பெண்ணொருத்தி விறகு பொறுக்கிக் கொண்டிருப்பதைக் கண்டார். தேவ மனிதர் அப்பெண்ணைப் பார்த்து, நான் குடிப்பதற்கு கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா என்றார். கொண்டு வர அவள் போகிற போது அம்மனிதர் அவளை நோக்கிக் கூப்பிட்டு கொஞ்சம் அப்பமும் உன் கையில் எனக்கு கொண்டு வா என்றார். அதற்கு அந்த விதவை: பானையில் ஒரு பிடி மாவும், கலயத்தில் கொஞ்சம் எண்ணையுமே அல்லாமல் என்னிடத்தில் ஒரு அடையும் இல்லையென்று கூறினள். இதோ, நானும், என் குமாரனும் சாப்பிட்டு செத்துப்போக அதை எங்களுக்காக ஆயத்தப் படுத்த இரண்டு விறகு பொறுக்குகிறேன் என்றாள். அப்பொழுது எலியா அவளைப் பார்த்த: பயப்படாதே நீ போய் உன் வார்த்தையின் படி ஆயத்தப்படுத்து: ஆனலும் முதலாவது அப்பத்தை என்னிடத்தில் கொண்டுவா: பின்பு உனக்கு உன் குமாரனுக்கும் பண்ணலாம்.

கர்த்தர் தேசத்தின் மேல் மழையைக் கட்டளையிடும் நாள் மட்டும் பானையில் மா செலவழிந்து போவதும் இல்லை கலசத்தில் எண்ணெய்குறைந்துபோவதும்இல்லை என்று இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் சொல்லுகிறார் என்றார். அவள் போய் எலியாவின் சொற்படி செய்தாள். அவளும், அவள் குமாரனும், அவள் வீட்டாரும் எலியாவும், அநேக நாட்கள் பஞ்சம் முடியும் மட்டும் திருப்தியாய் சாப்பிட்டார்கள். கர்த்தர்

எலியாவைக் கொண்டு சொன்ன வார்த்தை யின் படியே பானையிலே மா செலவழிந்து போகவும் இல்லை, கலசத்தின் எண்ணெய் குறைந்து போகவும் இல்லை (I இரா. 17: 10-16) அந்தக் குடும்பத்துக்கு சம்பூரணம் இருந்தது.

கிறிஸ்துவுக்குள் அன்பான குழந்தை களே! இதிலிருந்து நாம் அறிந்து கொள் வது என்னவென்றால்: நம்முடைய குறை களை நீக்கி நிறைவுபடுத்தி நம்மை தேவன் ஆசீர்வதிக்கும்படியாக, கர்த்தர் தம்முடைய பரிசுத்தவான்களை நமது வீட்டிற்கு அனுப் கிறார். நாமும், அந்த சாறிபாத் விதவைப் பெண் செய்தது போல தேவன் நமக்கு கொடுத்திருக்கும் ஆகாரத்தை நன்மைகளை முதன்மையானவைகளை தேவ மனிதர்களி டத்திற்கு கொண்டு வருவோமானால் கர்த்தர் நம்மையும் ஆசீர்வதிப்பார். அப்பொழுது சமாதானக் கர்த்தர் மீண்டும் வருமளவும் நமது ஆத்துமா குன்றிப் போவதும் இல்லை. ஆவியானது தொய்ந்து போவதும் இல்லை; நாம் பரிபூரணத்தின் மேல் பரிபூரணம் அடைந்து கர்த்தரின் வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவோம், மறுருபப்படுவோம்.

நமது உலக வாழ்க்கையில் மட்டுமல் லாது, நம்முடைய ஜெப வாழ்க்கையிலும் தேவ மனிதர்களுக்கு முதலிடம் கொடுக்க வேண்டும். அதாவது நாம் நம்முடைய தேவைகளுக்காக ஜெபிப்பதற்கு முன்பாக முதலாவது விண்ணப்பத்தை பரிசுத்தவான் களுக்காக ஏறெடுக்க வேண்டும். அன் பான கிறிஸ்தவப் பெற்றோர்களே! நாம் இவ்விதமாக ஜெபித்து, நம்முடைய அரு மையான பிள்ளைகளுக்கும் இவ்வாறு நற் கிரியை செய்ய கற்றுக் கொடுப்போமாக.

இயேசு நாதர் சொல்கிறார், "சிறு பிள்ளைகள் என்னிடத்தில் வருவதற்கு இடங்கொடுங்களென்று" (மாற். 10:14). நாம் அவ்வாறு செய்தால், நம்முடைய பிள்ளைகள் இறைவனாகிய இயேசு கிறிஸ் துவை இன்னும் கிட்டிச் சேர்ந்து, அவ ரால் உண்டாகும் எல்லா ஆசீர்வாதங்க ளையும் பெற்று இனிதாய் வாழ்வார்கள்.

இயேசு அவர்களை நோக்கி: ஜீவ அப்பம் நானே, என்னிடத்தில் வருகிறவன் ஒருக்காலும் பசியடையான்" என்றார்.
யோ. 6:35

# வேலை செய்

தேவனாகிய கர்த்தர் மனிதனை ஏதேன் தோட்டத்தில் அழைத்துக் கொண்டு வந்து அதைப் பண்படுத்தவும், காக்கவும் வைத் தார் [ஆதி. 2:15].

மனிதன் பாவத்தில் விழுமுன்பே தேவன் அவனுக்கு வேலை திட்டத்தைக் கொடுத்தார். அவனைத் தோட்டத்துக்குள் அழைத்துக் கொண்டு வந்து அதைப் பண் படுத்தவும், காக்கவும் வைத்தார் பண் படுத்த-கொத்தி எருபோடுதல், பதப்படுத் தல், தண்ணீர் பாய்ச்சுதல், நடுதல், களை பிடுங்குதல், வேலியடைத்தல், கிளை கழித் தல், தேவையானவைகளுக்கு ஊன்று கால் விடுதல், பலனை பறித்தல் அல்லது அறு வடை செய்தல் போன்ற பல பணிகள் அவனுக்குக் கொடுக்கப்பட்டது. அத்துடன் அதை பாதுகாக்கவும் (Watch man). பாதுகாக்கிறவனாகவும் வைத்தார். இதன் மூலம் முதலாவது எதிரியைக் குறித்த எச் சரிப்பு ஆதாமுக்குக்கொடுக்கப்பட்டிருந்தது. மனித ஜாதிக்கு ஒரு எதிரி உண்டென்று ஆதாமுக்கு இறைவனால் எச்சரிப்பு கொடுக்கப்பட்டதை இதன் மூலம் அறிகி

றோம். எதிரியில்லாத இடத்தில் காவல் காக்கவேண்டிய அவசியமில்லை. காக்கவும் என்கிறதில்– பணிவிடை செய்தல், பாது காப்பளித்தல், எதிரியைத் தடுத்தல், அவ னோடு போரிட்டு விரட்டுதல், கர்த்தரு டைய கற்பனையைப் பாதுகாத் துக் கொள்ளுதல், எஜமானை பாதுகாத்தல் இராஜாவை பாதுகாத்தல் முதலிய வேலை கள் இதில் அடங்கும். தோட்டத்தைப் பாது காக்கவும் தேவன் அவனுக்குக் கட்டளை கொடுத்தார்.

புதிய ஏற்பாட்டிலும் அப். பவுல் நல்ல வேலை செய்யும் படியும் [எபே.4:28]. வேலை செய்யாதவர்கள் உணவு அருந் துதல் தவறு என்றும் I தெச. 3:10,11; 4:11,12). அறிவுறுத்தியுள்ளார். ஆதாம் தன் கடமையில் தவறினன். இக்காலத் திலும் சிலர் வேலைச் செய்யாமல், தன் கட மையை செய்யாமல், பணிவிடை செய்யா மல், காவல் காக்க வேண்டியவைகளை, காவல் காக்க வேண்டியவர்களை காவாமல், தன்னை தன் இருதயத்தை, நடபைக் காவாமல் சோம்பேறிகளாய் இருக்கிறார்கள். இதினிமித்தம் சாத்தானால் வஞ்சிக்கப்படுகிறார்கள்.

காயீன் : "நான் என்ன காவ லாளியோ ஆபேலுக்கு" என்றான் என்று பார்க்கிறோம். ஆம்! காவலாளியா கத்தான் தேவன் நம்மை நியமித்திருக்கிறார். வேலை செய்வதே மகிழ்ச்சி. உயர்வுக்கு வழி இதுவே. விடாமுயற்சி பெரும்பலனை அளிக்கும். அந்தந்த சமயத்தில் கிடைக் கும் வேலையை முழு பலத்தோடு செய்ய வேண்டும் [பிர. 9:10]. மனுஷர் காண வேண்டும் என்று அல்ல இறைவன் பார் வையில் [எபே. 6:8]. நல்மனதோடு உற் சாகமாய் உழைக்க வேண்டும். ஊழியம் செய்ய வேண்டும் [I கொரி. 9:17.] சிலர் வேலை செய்யாமலே ஓய்வெடுக் விரும்புகி றார்கள். இது தவறு. உடல் உழைப்பு செய்ய பெலன் இல்லை, பெலவீனம் என் றால் வரும் பலனையும் இழந்துபோவோம். நாம் வேலை செய்தால் பலம் பெருகும். சுறுசுறுப்பு உண்டாகும்.

அப்படியே வேலை செய்ய முடியாத அள வுக்குப் பெலவீனம் என்றால் வேறு தொழிலை செய்யலாம். இசைக் கற்றல், வாத்தியகருவி களை இசைக்கக் கற்றுக் கொள்ளுதல் கற்றுத் தருதல், எழுதுதல், படம் வரைதல், வியா பாரம் செய்தல். இவ்விதம் முளை உழைப் பினால் ஊதியம் பெறும் அளவுக்கு முயற் சிக்கலாம். வேலை செய்யவில்லை என்றால் வறுமை உண்டாகும். உடல் பலவீனப் படும். இச்சைகள் பெருகும். நோய்வாய்ப் பட நேரிடும். சந்தர்ப்பங்களை இழந்து போவார்கள் சந்தர்ப்பங்களை இழந்தால் உயர்வு இல்லை. ஆனபடியினால் தேவனு டைய பிள்ளைகள் நமக்கும், பிறருக்கும் பிரயோஜனம், நன்மை பயக்கிற ஏதாவது ஒரு வேலையில் எப்பொழுதும் ஈடுபடுவீர் களாக அப்பொழுது சாத்தான் வந்து கூப் பிட்டால் பக்தனாகிய நெகேமியாவைப் போல நான் பெரிய வேலையில் ஈடுபட்டி ருக்கிறேன், நான் வரக்கூடாது, நான் வரு வதால் அந்த வேலை மினக்கெட்டு போவா னேன். நான் வரவில்லை என்று சொல்லி எச்சரித்து சாத்தானை விரட்டி விடலாம்.

இந்த ஆண்டு நாம் அதிகமாய் உழைக்கும் ஆண்டாக இருக்க இறைவன் அருள் புரிவாராக! ஆத்துமத்திற்காகவும் அப்படி செய்வோமாக யோ. 6:27.

அவரவர்களுடைய கிரியைகளின்படி அவரவர்களுக்கு பலன் அளிக்கும்படி இயேசு வருகிறார் வெளி. 22:12. களைக் கும் அளவுக்கு உழை.



"சகல பிரயாசத்தினாலும் பிரயோஜன முண்டு: உதடுகளின் பேச்சோ வறுமையை மாத்திரம் தரும்" நீதி. 14:23



# கிறிஸ்தவம் (மார்க்கம்)

கிறிஸ்தவம் என்று சொல்லும் பொழுதே அது கிறிஸ்துவின் பெயரோடு கூட சம்பந்தப்பட்டுள்ளது என்று நாம் அறிந்து கொள்கிறோம். கிறிஸ்து [Christ] என்றால் அபிஷேகம் பண்ணப்பட்டவர் என்று அர்த்தம் கொள்ளும் கிரேக்க மொழியாகும்.

இறைவன் இந்த உலகத்தில் மனிதனாய் அவதாரம் எடுத்து மனுமக்களுக்காய் தன்னை பரித்தியாகம் செய்த சம்பவமானது உலகத்தின் மையப்பொருளாக இருக்கிறது. அவர் இந்த உலகத்தில் தோன்று முன்பே அவருக்கு இயேசு என்று பேரிடும்படியாக இறைவனால் தேவ தூதன் மூலமாக கட்டளை கொடுக்கப்பட்டது [மத். 1:21].

இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் வந்தது முதற்கொண்டு கிறிஸ்தவ மதம் உலகில் முடிவான மதமாக வெளிப்பட்டது. அதற்கான ஆயத்தம் மனித தோற்றமுதற்கொண்டே செய்யப்பட்டு யூத மதத்தின் முன்னோடிகளுக்குள் எழும்பின முனிவர்கள் [தீர்க்கதரிசிகள்] மூலமாக (தெய்வீக வெளிப்படுத்தல்) தேவன் உலக உற்பத்தியையும், மனிதனுடைய சிருஷ்டிப்பையும், அவனுடைய வீழ்ச்சியையும், அவனை மீட்கும்படி தேவன் கொண்ட திட்டங்களையும், அதனுடைய வழிமுறைகளையும். அதில் முடிவாக இறைவன் இந்த உலகத்தில் இரட்சிப்பை மனுமக்களுக்குக் கொடுக்கும் படி வெளிப்படப் போகிறதையும் அறிவித்துக் கொண்டு வந்தார். யூத மதமானது கிறிஸ்தவ மதத்திற்கு முன்னோடியாய் வழிவகுத்ததாக இருக்கிறது.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் பிறந்தது முதற்கொண்டு கிறிஸ்தவ மதம் உலகெங்கும் பரவி வருகிறது. உலகத்தில் பல மதங்கள், பல தத்துவங்கள், பலக்கருத்துக்கள், பலக்கூட்டங்கள் பல அபிப்பிராயங்கள் தோன்றியுள்ளன. தோன்றிக் கொண்டு இருக்கின்றன. ஒவ்வொருவரும் தங்கள் மதத்தையே மேன்மையானது என்றும், அதுவே மதங்களுக்குத் தாய் மதம் என்றும், அதுவே மதங்களின் கருத்தென்றும் சொல்லிக் கொண்டாலும், அவைகளினால் உண்டாயிருக்கிற மாற்றங்கள் மூலமாக அது பொய்யோ, மெய்யோ என்பதை நாம் உய்த்து உணரலாம்.

கிறிஸ்தவ மதத்தைப்பற்றி சுருக்கமாய் ஆராயும் முன்பாக கிறிஸ்தவன் என்கிற பெயரைப் பார்ப்போமாக.

### கிறிஸ்தவன்:

கிறிஸ்துவை விசுவாசிக்கிறவன். இந்த நாமம் அந்தியோகியா பட்டணத்தில் கி.பி. 42-ம் வருஷத்திலே கிறிஸ்து நாதருடைய சீஷர்களுக்குக் கொடுக்கப்பட்டது (அப். 11:26). ஆதிக் கிறிஸ்தவர்கள் தங்களுக்குள்ளே வழங்கிக் கொண்ட பெயர்கள்: சகோதரர்கள், விசுவாசிகள், பரிசுத்தவான்கள், நசரேயர்கள் என்றும் வழங்கிக் கொண்டார்கள். ஆனால் மற்ற அந்நியர்களாலே அவர்கள் நசரேயர்கள் என்றும், கலிலேயர்கள் என்றும் அழைக்கப்பட்டார்கள்.

1. கிறிஸ்தவன் என்பது ஒவ்வொரு விசுவாசிக்கும் பொதுப் பெயர். இந்தப் பெயரை தரித்துக் கொண்டவர்களுக்குள் வித்தியாசங்கள் இருக்கக் கூடாது (I கொரி. 1:12-15; கொலோ. 3:11; சக. 14:9). ஆதிக் கிறிஸ்தவர்களில் ஒருவன் அஞ்ஞானி, நியாயாதிபதிக்கு முன்பாக தன் மார்க்கத்துக்காக துன்பப்படுத்தப்பட்டு நியாயந்தீர்க்கப்பட்டபோது நியாயாதிபதி அவனை நோக்கி உன் பேர் என்ன என்று கேட்க கிறிஸ்தவன் என்றான், உன் ஊர் என்னவென்று கேட்க கிறிஸ்தவன் என்றான், உன் தொழில் என்னவென்று கேட்க கிறிஸ்தவன் என்றான். கிறிஸ்தவன் என்

கிற கனமான நாமத்தைப் பார்க்கிலும் உலகில் வேறொரு கனமான நாமம் இல்லை. **A Christian is the highest Style of man**

முன்னே அஞ்ஞானிகளாயிருந்து பின்பு கிறிஸ்து மார்க்கத்தில் பிரவேசித்த கல்விமான்களாகிய யூஸ்தனிஸ், அத்தேனே, தெர்த்துல்லியான், ஊரிதூன் முதலியவர்களும், தங்கள் தங்கள் காலத்தில் அஞ்ஞானிகளுக்கு எழுதின மாறுத்தரவுகளுக்குள் பூர்வ காலத்து கிறிஸ்தவர்களைக் குறித்து விசேஷித்த சாட்சிகள் சொல்லப்பட்டுள்ளது. அவர்களில் யூஸ்தனிஸ் எழுதினது: முன்னே விபசாரத்தின்மேல் பிரியமாயிருந்த நாங்கள் இப்பொழுது சற்புத்தியுள்ளவர்களாயிருக்கிறோம். முன்னே பில்லிசூனியம் செய்த நாங்கள் இப்பொழுது எங்களை மெய்யான தேவனுக்கு ஒப்புக் கொடுத்திருக்கிறோம். முன்னே பணத்தின் மீதும், ஆதாயத்தின் மீதும் மிகவும் ஆசையாயிருந்த நாங்கள் இப்பொழுது எங்களுக்குண்டாயிருக்கிறவைகளை பொதுவாக அநுபவித்து யாவருக்கும் வேண்டியவைகளை பகிர்ந்து கொடுக்கிறோம் என்று எழுதினார்.

(தொடரும்].

இயேசுவானவர் தமது மாம்சமாகிய திரையின் வழியாய்ப் புதிதும் ஜீவனுமான மார்க்கத்தை நமக்கு உண்டு பண்ணினார்.
எபி. 10:19.

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

ஊழியத்திற்கு தகுதியில்லாதவர்களை முதலாவது பார்ப்போம்.

**ஊழியத்திற்குத் தகுதியில்லாதவன் [லேவி. 21:17-20]**

கர்த்தருடைய ஊழியக்காரன் என்பவன் கர்த்தருடைய வல்லமையை போதிக்கிறவன். அவயவங்களில் ஊனமுள்ளவன் தைரியமாய் தேவ வல்லமையை வெளிப்படுத்த முடியாது. மற்றவர்கள் குற்றங்கூற, அற்பமாய் நினைப்பதற்கு ஏதுவான குறை இவனில் இருந்தால் இவனை ஊழியக்காரனாக அல்ல, பொதுவான இஸ்ரவேலனாக ஏற்றுக் கொள்ளலாம். பொதுவான கிறிஸ்தவனாக அவன் ஜீவிக்கலாம். இங்கே ஊழியத்திற்குத் தகுதியில்லாதவன் குருடன், சப்பாணி, நீண்ட, குறுகின அவயவம் உடையவர்கள், காலொடிந்தவன், கையொடிந்தவன், குள்ளன், பூ விழுந்த கண்ணன், சொறியன், அசறுள்ளவன், விதை நசுங்கினவன் போன்றவர்கள் ஊழியத்திற்கு ஆகாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. இது ஆவிக்குரிய ஜீவியத்தில் உண்டாகும் தோல்விக்கு ஒப்பிடக்கூடியதாக இருக்கிறது.

சப்பாணி - ஊழியத்தில் அசதியாயிருக்கும் சோம்பேறி [எரே. 48:10].

குறுகின அவயவமுடையவன் - மந்த புத்தி, உபதேசத்திலோ, பரிசுத்தத்திலோ, வாஞ்சையில்லாதவன் [நீதி. 14:14].

நீண்ட அவயவம் - இது மிஞ்சின நீதிமான். வேதத்தில் இல்லாத பரிசுத்தம் பேசுகிறவன் [பிர. 7:10].

காலொடிந்தவன் - இது பாவத்தில் விழுந்தும் எழுந்திருக்க மாட்டாதபடி பாவமே போதுமென்று இருக்கிறவன் [I தீமோ. 1:19].

கையொடிந்தவன் - இது நற்கிரியை செய்வதை விட்டு விட்டவன் [நீதி. 25:14].

கூனன் - இது உலகத்தையே ஆசித்துக் கொண்டு, மேலானதை நோக்காமல் பூமிக்குரியதிலே திருப்தியாயிருக்கிறவன் [2 தீமோ. 4:10].

குள்ளன் - இது மகிமையின் மேல் ஆசையில்லாதவன்; இரட்சிப்பில் திருப்தியடைந்து, இரட்சிப்பே போதுமென்று சொல்லித்திரிகிறவன் [சங். 78:41].

பூ விழுந்த கண்ணன் - இது மகிமையின் பிரகாசத்தை இழந்தவன், அன்பில்லாதவன் [I யோ. 2:11].

சொறியன் - இவன் எப்போதும் மற்றவர் குற்றத்தையே பேசி நடக்கிறவன். அதாவது, அலப்புகிறவன் (நீதி. 10:10; ரோ. 2:1).

அசறுள்ளவன் - இது தன் ஜீவியம் நாறும் வண்ணம் அசுத்த ஜீவியம் உள்ளவன் [ரோ. 2:21-24].

விதை நசுங்கினவன் - இது ஆத்தும தாகம் இல்லாதவனைக் குறிப்பிடுகிறது [எசே. 34:18]. இப்படிப்பட்ட சுபாவம் உள்ளவர்களும் ஊழியத்திற்கு ஆகாதென்பதை தேவன் சுட்டிக் காட்டியுள்ளார்.

## ஊழியத்திற்குத் தகுதியுள்ளவன் யார்?

### 1. ஊழியக்காரன் அழைக்கப்பட்டவனாயிருக்க வேண்டும்.

ஆரோனைப் போல தேவனால் அழைக்கப்பட்டாலொழிய ஒருவனும் இந்தக் கனமான ஊழியத்திற்குத் தானாய் ஏற்படுகிறதில்லை. ஆரோனைக் கர்த்தர் ஊழியத்திற்காக அழைத்தார் (எபி. 5:4 யாத். 4:16,17), கர்த்தருடைய ஊழியத்திற்கு விசேஷ தெளிவான அழைப்பு வேண்டும். பேதுரு, (மத். 4:18,19), பவுல் (அப். 9:15; 1 தீமோ. 1·18) இவர்கள் திட்டமாக ஊழியத்திற்கு அழைக்கப்பட்டார்கள். நான் ஊழியத்திற்காக அழைக்கப்பட்டிருக்கிறேன், தேவன் என்னை அழைக்கிறார் என்ற தெளிவான தீர்ப்பு அவனுக்கு வேண்டும். அது பிறருக்கும் தெரியவரும். மற்றவர்கள் தேவ அழைப்பில்லாதவர்கள் ஊழியத்திற்கு பிரவேசிக்கலாகாது.

### 2. ஊழியக்காரன் பிரதிஷ்டையுள்ளவனாயிருக்க வேண்டும்.

லேவியர்கள் பிரதிஷ்டை செய்தார்கள். கர்த்தருடைய பட்சத்தில் நிற்கிறவன் யார் என்று மோசே கேட்டவுடன், கர்த்தருடைய பட்சத்தில் வந்து நின்றார்கள். இன, ஜன பந்துக்களை வெறுத்தவர்களாய், சகோதரர்களக இருக்கட்டும், பாவஞ்செய்தவர்களை வெட்டக்கூடியவர்களாக இவர்கள் இருக்கிறார்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து: யாதொருவன் என்னிடத்தில் வந்து தன் தகப்பனையும், தாயையும், மனைவியையும், பிள்ளைகளையும், சகோதரனையும், சகோதரிகளையும் ஜீவனையும் வெறுக்காவிட்டால் எனக்குச் சீஷனாயிருக்கமாட்டான் என்றார் (லூக். 14:26). ஊழியன் வெறுக்கும் சக்தியுள்ளவனாயிருக்க வேண்டும். அவனே பிரதிஷ்டையுள்ளவன். பிரதிஷ்டை இல்லாதவன் ஊழியனாயிருக்கக் கூடாது. அவன் கர்த்தருக்கென்று, ஊழியத்திற்கென்று தன்னை பிரதிஷ்டை பண்ணியிருக்க வேண்டும் தலையில் கைவைத்து ஜெபிக்கப் பட்டிருக்கவேண்டும்.

### 3. ஊழியன் சுதந்தரம் இல்லாதவனாயிருக்க வேண்டும்.

இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரத்தாருக்கும், கானானில் சென்றதும் சுதந்தரம் கொடுக்கப்பட்டது. லேவியர்களுக்கு சுதந்திரம் கொடுக்கப்படவில்லை. லேவியருக்கு சுதந்திரம் கர்த்தரே [உபா. 1:81; எண். 18:23,20). பன்னிரண்டு கோத்திரத்தாரும் தங்களுக்குள்ளே எல்லாவற்றிலுமிருந்து தசமபாகத்தைக் கர்த்தருக்கு கொடுக்க வேண்டும் [எண். 18:21) லேவியரோ கர்த்தருடைய எல்லாவற்றையும் அநுபவித்துக் கொள்ள வேண்டும். அவர்கள் விற்கவோ, மாற்றவோ, மற்றவர்களுக்குக் கொடுக்கவோ கூடாது [எசே. 48:14-18.] ஆகையால் புதிய ஏற்பாட்டு ஊழியரும் இவ்வாறே. அவர்களுக்கு பூமியில் சுதந்திரம் இல்லை, கர்த்தரே அவனுடைய சுதந்தரம் [மத். 4:20; 19:27; லூக். 18:26; 1 கொரி. 4:11; 2 கொரி. 6:10,11). ஆகவே, புதிய ஏற்பாட்டு ஊழியர்களும், சொத்து சுகம் சேர்க்கிறவர்களாக, பொருளாசையுள்ளவர்களாக தங்களுக்கும், தங்கள் பின் சந்ததிக்கும் சாபத்தை சேர்த்துவைக்கிறவர்களாக இருக்ககூடாது கர்த்தரை நம்பி ஜீவிக்க வேண்டும். அவ்வப்பொழுது கர்த்தர் தேவையானவைகளையும் கொடுத்தருள்வார். ஸ்திரமாக ஒரு இடத்தில் இருந்து கொண்டு எல்லா இடங்களிலும் ஊழியஞ் செய்ய அவர்களுக்கென்று இருப்பிடம் இருப்பது தவறில்லை (1 சாமு. 16:17; அப். 21:7,8; 1 கொரி. 16:19; ரோ. 16.3-5; பிலே. 22) விரத்தராக இருக்கிறவர்கள் ஜெபப்பறையிலே தங்களுக்காக ஒதுக்கப்பட்ட ஒருபகுதியில் இருக்கலாம். விவாகஸ்தர்கள் இவ்விதமாய் இருக்கக்கூடாது. அவர்கள் தனி வீட்டில் தங்கி இருந்து தேவனை மகிமைப்படுத்தலாம். ஆனால் இந்த சொத்து சுகங்களெல்லாம் சபைக்குரியதாக, தேவனுக்குரியதாக அவர்கள் பாவிக்க வேண்டும்.

### 4. ஊழியன் ஜலத்தில் ஸ்நானம் பண்ணி, வஸ்திரம் தரிப்பிக்கப்பட்டவனாயிருக்க வேண்டும். (லேவி. 8:6,9);

ஆசாரிய ஊழியம் செய்த ஆரோனும், அவனுடைய குமாரரும் அப்படியே ஸ்நானம் பண்ணி வஸ்திரம் தரிப்பிக்கப்பட்டார்கள். எனவே புதிய ஏற்பாட்டு ஊழியக்காரனும் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்துவை தரித்தவனாயிருக்க வேண்டும் (கலா.3:27] ஆசாரியனுடைய வஸ்திரங்கள் இவன் ஆசாரியன் என்பதை சுட்டிக்காட்டக் கூடியதாக இருக்க வேண்டும். இந்த நாட்களில் ஊழியர்கள் என்று சொல்லிக் கொள்கிற அநேகர் கறுப்புப் பேண்டும் சிவப்பு சட்டையும், கறுப்புக் கண்ணாடியும் தங்கள் இஷ்டப்பிரகாரம் உடுத்திக் கொண்டு அலைகிறவர்களாக இருக்கிறார்கள். அனைபடியினல் பிர்பாரிலும் இருக்கலாம், வேசிக்கடியிலும் இருக்கலாம், ஜெபப்பறையிலும் காணப்படலாம்.

இன்று உலகப்பிரகாரமாக அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டிருக்கிற போலீஸைக் கூட பார்த்தவுடன் இவர் Head Constable என்றும், இவர் இன்ஸ்பெக்டர் என்றும், இவர் போலீஸ் என்றும், இவர் இன்ன அதிகாரி என்று காட்டத்தக்கதாக அதற்குத்தக்கதாக உடையும், அடையாளங்களும், ஷூவும் (Shoe) அவர்களுக்குக் காணப்படுகின்றது. ஆனால் தேவனுடைய ஊழியக்காரன் என்று சொல்லுகிறவனுக்கும், உலகத்தானுக்கும் வித்தியாசம் இல்லாதபடி உடுத்துக் கொண்டு அலைகிறவர்களும் தங்களை தேவனுடைய ஊழியர்கள் என்று சொல்லிக் கொள்கிறது வேதத்துக்குப் புறம்பானதாகும்.

[தொடரும்.]

---

உன் சகோதரனாகிய ஆரோனுக்கு மகிமையும், அலங்காரமுமாய் இருக்கும் பொருட்டு, பரிசுத்த வஸ்திரங்களை உண்டுபண்ணுவாயாக யாத். 28:2.

'தேவன் ஒருவரே...'
THERE IS ONE GOD...
Regd No. 040088 84
Postal Regd. No MH BY NE-94/83
Tamil Monthly Magazine

## கிறிஸ்துமஸ் & 1993-ம் புதுவருட வாழ்த்துக்கள்.

சமாதானக் கர்த்தர் உலகத்தில் பிறந்து விட்டார். (ஆதி. 49:10) இயேசுவை தங்கள் வாழ்க்கையில் ஏற்றுக் கொண்டவர்களுடைய உள்ளத்திலும், வெளியிலும் சமாதானம். கர்த்தர் உங்களுக்கு சமாதானமருளி 1993-ம் ஆண்டிலும் தேவன் உங்களை நிரப்பும்படி புதிய எருசலேம் செய்தி வாசகர்கள் எல்லோரையும் இயேசுவின் நாமத்தில் வாழ்த்துகிறோம்.

புதிய எருசலேம் செய்தி

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   8 [திங்கள்] பிப்ரவரி 1993
   8 [திங்கள்] மார்ச் 1993
   7 [புதன்] ஏப்ரல் 1993
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078. INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 107 - FEB. '93

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்"

- மாற்கு 13 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து அன்பு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றும்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே. அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்று (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

### இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

அன்பான தேவ ஜனங்களே!

இந்நாட்களில் இந்து துன்மார்க்கர்களின் அட்டகாசத்தையும்,இஸ்லாமியர்களின் பரிதாப நிலையையும் காண்கிறோம். இந்து துன்மார்க்கர்கள் கொலை வெறிபிடித்து, அநியாயம் செய்து, கொலை செய்து இழிவான ஆதாயத்தின் மேல் இச்சையுண்டாகித் திருடி இந்தியாவில் விசேஷமாக பம்பாயில் நடப்பித்த அக்கிரமச் செய்கைகள் முற்காலத்தில் நடந்த சரித்திர சம்பவங்களையும் மீறிவிட்டது. இதை யாரும் மறுக்க முடியாது. இவர்கள் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து கொலை செய்ததையும், கொள்ளையடித்ததையும், தீக்கொளுத்தினதையும் கண்டோம். இதற்கான ஆதாரங்கள் உண்டு; கண்கூடாகக் கண்டதும் உண்டு.

மதம் என்ற போர்வையில் துஷ்டர்கள் ஒளிந்திருக்கிறார்கள். தென் நாட்டிலோ இந்து துன்மார்க்கர்கள் திட்டமிட்டு பத்திரிகைகளில் கிறிஸ்தவ ஊழியர்களைப்பற்றி, ஸ்தாபனங்களைப்பற்றி துர்ச்செய்தி பரப்பி வருகின்றார்கள். அச்செய்தி பொய் என்று விசாரித்தறிந்த பின்பும் அவர்களைத் தண்டிக்க அரசாங்கத்துக்கோ தகுதியில்லை. ஏன், நம்மைப்பற்றிக் கூட ஒரு இந்து துன்மார்க்கன்; இவர் ஏகப்பட்ட திருட்டு வழக்கில் சம்பந்தப்பட்டவர், விடுதலைப் புலிகளோடு புதிய எருசலேம் சபைக்கு சம்பந்தம் உண்டு என்று எழுதுகிறான். இதில் ஒன்றையாகிலும் இந்த இந்து துன்மார்க்கர்கள் நிரூபிக்க முடியாது. இந்த பொய்யின் மக்கள் ஏழு பிறவிகள் எடுத்தாலும் எம்மைப் போல் ஜீவிக்க முடியாது. எம்முடைய வாழ்க்கையில் முன்னாலோ, பின்னாலோ இவ்வித எந்த பாவமும் நிகழ்ந்ததில்லை.

ஏன் இவர்களை பொய்யின் மக்கள் என்று எழுதுகிறேன் என்றால்; பொய் சொல்கிற எவனும் பிசாசினால் பிறந்திருக்கிறான் என்று சத்திய வேதம் சொல்லுகிறது (யோ. 8:44). இந்த இந்து துன்மார்க்கர்கள் எழுதுகிற செய்தியைப் படித்து விட்டு பிசாசின் தாசன் ஒருவன் களிகூர்ந்து நமக்கு லட்டர் எழுதியிருக்கிறான். இவனுக்கு திண்டுக்கல்லில் ஒரு வைப்பாட்டி உண்டு என்று இவனே எழுதின லட்டர் ஒன்று என்னிடம் உள்ளது. மனைவியை அடிக்கிறவனும், பொருளாசைக்காரனும், கோயில் காணிக்கையைத் (உண்டியலை உடைத்து) திருடுகிறவனும், விபசாரக்காரனுமான இவனுக்கும், இவனைப் போன்றவர்களுக்கும், மேற்படி இந்து துன்மார்க்கர்கள் திட்டமிட்டு பரிசுத்தவான்களையும், திருச்சபையையும் தாக்கி பொய்யாய் உலகப் பத்திரிகைகளில் எழுதியதும் ரொம்ப குஷியாய் போய்விட்டதென்றால் இவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று பாருங்கள். "உன் சகோதரன் அந்நியர் வசமான நாளாகிய அவனுடைய நாளை நீ பிரியத்தோடே பாராமலும், யூதா புத்திரருடைய அழிவின் நாளிலே அவர்கள் நிமித்தம் சந்தோஷப்படாமலும், அவர்கள் நெருக்கப்படுகிற நாளிலே. . . அவர்கள் அனுபவிக்கிற தீங்கை நீ பிரியத்தோடே பாராமலும், அவர்கள் ஆபத்து நாளிலே அவர்கள் ஆஸ்தியில் கை போடாமலும் இருக்க வேண்டியதாயிருந்தது" ஒப.

1:12-15 என்று தேவன் எச்சரிக்கிறர்.

நீ சாபத்தை வாங்கிக் கொள்ளாதே. உன் செய்கைக்குத் தக்க தண்டனையை தேவன் உனக்கு அருள்வார். நேரடியாகவோ, லட்டர் மூலமாகவோ விசாரித்தறிய ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. அப்படிச் செய்யாமல் இந்து துன்மார்க்கர்கள் திட்டமிட்டு பரிசுத்தவான்களுக்கு விரோதமாக தூஷிக்கிறதை வைத்து தீர்மானிக்கிறவர்களுக்கு ஐயோ! மேற்படி இந்து துன்மார்க்கர்களோ, அல்லது அவர்கள் எழுதினதை உண்மை என்று நம்புகிறவர்களோ நேரடியாகவோ, நீதிமன்றத்திலோ சந்திக்கத் தயாரா?

கிறிஸ்தவர்கள் அறிய வேண்டியது, கிறிஸ்தவர்கள் ஒன்றுபட வேண்டும் இந்தியாவில் என்ன நடக்கப் போகிறது என்று தேவன் எங்களுக்கு 20 வருஷங்களுக்கு முன்பே வெளிப்படுத்தினர். அதன்படி நடக்கிறது. எமக்கு தேவன் கொடுத்த ஆலோசனையின்படி நாம் ஆயத்தப்படுகிறோம். ஆயத்தப் படுவோமாக! மெய் தேவ ['ஏலோகீம்"] வணக்கத்தை நிலை நாட்டுவதற்கு தேவ ஜனங்கள் எல்லோரும் சேர்ந்து ஒரு அணியில் திரள வேண்டும், செயல்பட வேண்டும், "யேகோவா நிசி" யாகிய, தேவன் நம்மோடிருக்கிறர், நாம் பயப்படோம். சத்துருக்களை எதிர்கொள்ளவும், உலக ஞானத்தை போதிக்கவும், சீக்கிரமாக வேறொரு பத்திரிகை ஆரம்பிக்க வாஞ்சிக்கிறோம். ஜெபிக்கவும், கரம் கொடுக்கவும், தாங்கவும் இயேசுவின் நாமத்தில் கேட்டு கொள்கிறேன்.

கிறிஸ்துவுக்குள்,

N. Iyer

(CHIEF PASTOR N. LAZAR)

அப்பொழுது வானத்திலே ஒரு பெரிய சத்தமுண்டாகி: இப்பொழுது இரட்சிப்பும் வல்லமையும் நமது தேவனுடைய ராஜ்யமும், அவருடைய கிறிஸ்துவின் அதிகாரமும் உண்டாயிருக்கிறது; இரவும் பகலும் நம்முடைய சகோதரர் மேல் குற்றஞ்சுமத்தும் பொருட்டு அவர்கள் மேல் குற்றஞ்சாட்டுகிறவன் தாழத்தள்ளப்பட்டு போனன். வெளி. 12:10.

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

ஊரியேல் என்பவர் சென்துனிக்கு எழுதின மாறுத்தரவில் சொன்னதாவது: நீர் எங்களில் சிலருடைய நடக்கைகளைக் குறித்து விசாரணை செய்யும். எங்களுடைய முந்தின நடக்கையையும், இப்பொழுது இருக்கிற நடக்கையையும் ஒத்துப்பாரும். கிறிஸ்தவ மார்க்கத்தின் உபதேசங்களை ஏற்றுக் கொள்கிறதற்கு முன்னே அவர்கள் நடப்பித்து வந்த அசுத்தங்களும், துன்மார்க்கங்களும் இன்னவைகள் என்றும் கிறிஸ்தவ உபதேசங்களை ஏற்றுக் கொண்ட பின்பு அவர்கள் நடப்பித்து வருகிற நீதிகளும், நல்லொழுக்கங்களும் இன்னவைகள் என்றும் அறிந்து கொள்வீர். மேலும், பரிசுத்தத்தின் மேலுள்ள மிகுந்த ஆசையினாலே சிலர் நியாயமாய் அனுபவிக்கத்தக்கவைகளை விட்டுவிட்டார்கள். ஆகையால், பொல்லாத துன்மார்க்கங்களிலிருந்து அநேகரை சன்மார்க்கிகளாக்கியிருக்கிறவர்கள் மனிதர்களுக்குள்ளே பெருவாரிக் காய்ச்சலாய் இருப்பது எப்படி என்று எழுதினர்.

அல்லாமலும் லெக்குந்தியோஸ் என்பவர் எழுதினதாவது கிறிஸ்தவர்களல்ல, விக்கிரகாராதனைக்காரரே தரையிலேயும், சமுத்திரத்திலேயும் கொள்ளையிட்டு தங்கள் மனைவிகளின் பரிசபணத்தையடையும்படி அவர்களுக்கு நஞ்சைக் கொடுக்கிறவர்கள், ஸ்திரீகள் தங்கள் சோர நாயகரைக் கலியாணம் பண்ணும்படிக்கு தங்கள் புருஷரைக் கொலை செய்கிறவர்கள், தங்கள் குழந்தைகளை அழித்து தங்கள் குமாரத்திகள், தங்கள் சகோதரிகள், தாய்மார்கள் முதலானவர்களோடு விபசாரம் செய்து பில்லி சூனியத்தினாலே மோட்சம் வரும் என்று எண்ணி சொல்லத்தகாத அசுத்தங்களை நடப்பித்து வருகிறவர்கள் என்று எழுதினர்.

அக்காலத்தில் இருந்த அஞ்ஞானிகள் பொறாமையினாலே கிறிஸ்தவர்களுடைய நடக்கைகளை புகழாமல் இருந்தாலும், அவர்கள் நடக்கை பரிசுத்தமாய் இருந்தது என்பதால் அவர்கள் கிறிஸ்தவர்களை நிந்திக்கும்படியாக முயற்சித்தவைகள் பலிதமாகவில்லை. கிறிஸ்தவர்களை குறித்து பல நற்சாட்சிகளும் கொடுத்தார்கள். அந்தக்காலத்தில் இருந்த விக்கிரகாராதனைக் காரர்கள் கிறிஸ்தவர்களைப்பற்றி கிறிஸ்தவனாயிருக்கிறது தவிர நல்ல மனிதனும் இருக்கிறான் என்று வழக்கமாய் சொல்லி வந்தார்கள்.

மேலும், துரைமாராகிய பிலினி என்பவன் ராஜாவுக்கு எழுதின காலத்தில் கிறிஸ்தவர்கள் கிறிஸ்துவைக் குறித்து சங்கீதம் பாடும்படிக்கு அதிகாலையிலே கூடி வருகிற குற்றத்தையல்லாமல் வேறொரு குற்றத்தையும் அவர்கள் மேல் சுமத்தவில்லை. அல்லாமலும், 43-ம் வருஷத்தில் இருந்த பதிதனாகிய யூலியு என்னும் ராஜா அர்ஸாக்கியூஸ் என்னும் ஆசாரியனுக்கு எழுதின நிருபத்திலே, அஞ்ஞானிகள் கிறிஸ்தவர்களுடைய நடவடிக்கையைப் பின்பற்றும்படி சொன்னதுமல்லாமல், கிறிஸ்தவர்கள் அந்நியருக்கும், பகைஞருக்கும் ஒத்தாசைகளை செய்கிறவர்களாயிருக்க விக்கிரகாராதனையைச் சார்ந்தவர்கள் வெட்கப்பட வேண்டியதாயிருக்கிறது என்று எழுதினான். இப்படி சிநேகிதர்களும் பகைஞர்களும் எழுதின சாட்சியினாலே கிறிஸ்தவ மார்க்கத்தை அணைத்துக் கொண்டவர்கள் அதினாலே நல்லவர்களானார்கள் என்று வெளியரங்கமாயிருக்கிது.

## உண்மையுள்ள கிறிஸ்தவன் என்றால்

1. பாவத்தை விலக்கியிருப்பதும் ( 2 தீமோ. 2:19; யாக். 2:7 ].

2. நம்மை நாம் வெறுத்து நம்முடைய சிலுவையை ஏற்றுக் கொண்டு கிறிஸ்துவைப் பின்பற்றுவதும் (லூா9:23; 14:25),

3. கிறிஸ்துவினுடைய மாதிரியைப் பின்பற்றி அவருடைய சிந்தையைப் போன்ற சிந்தையுடையவர்களாய் இருப்பதுமே (1 கொரி. 11:1). ஆதியிலே ஏழைகளும், அறிவீனர்களுமேயொழிய, கனமுள்ள அறிவுள்ளவர்கள் கிறிஸ்தவ மார்க்கத்தில் சேரவில்லை என்று சிலர் சொல்லிக்கொள்கிறது அபத்தமான காரியமாகும்.

இஸ்ரவேலில் ஒரு தலைவனாயிருந்த நிக்கொதேமு, ஐசுவரியவானான அரிமத்தியா ஊரானான யோசேப்பும், ஜெப ஆலயத் தலைவனாகிய யவீரும், எரிகோ பட்டணத்தில் இருந்த ஆயக்காரருக்குத் தலைவனான சகேயுவும், சாதுரியவானான அப்பொல்லோவும், கற்றுணர்ந்த பவுலும், சீப்புரு தீவானாகிய தீகிக்குக்கும், பிரதிப் பிரபுவாக இருந்த விவேகமுள்ள செர்கியு பவுலும், ரோம சேனைத் தலைவனான கொர்நெலியுவும் அத்தேனே பட்டணத்தின் நியாயாதிபதியும், அதிகாரப் புருஷனாயிருந்த தியோவிசியுவும், கொரிந்து பட்டணத்து உக்கிராணக்காரனாகிய எரஸ்தும், கொரிந்து பட்டணத்தில் இருந்த இலக்கண சாஸ்திரியாகிய திறன்னுவும், மெலித்தா தீவுக்கு முதலாளியாகிய புபிலியுவும், கொலோசே பட்டணத்து சிரேஷ்டனாயிருந்த பிலேமோனும், சமாரியாவிலிருந்த தர்க்கவாதியாகிய சீமோனும், நியாய சாஸ்திரியாகிய சேனாவும், அரண்மனையிலிருந்த அநேகரும், அப்போஸ்தலருடைய காலத்திலேயே கிறிஸ்தவர்களானார்கள்.

இன்றும், அறிவுள்ளவர்களும், படித்தவர்களும், பட்டாதாரிகளும், நன்மையை நாடுகிறவர்களும், மெய்தேவ பக்தியைத் தேடுகிறவர்களும், திருந்த விரும்புகிறவர்களும் கிறிஸ்தவர்களாகிறார்கள். மதவெறியுடையவர்களும், அடாவடித்தனம் செய்கிறவர்களும், பாவஞ்செய்ய விரும்பி துன்மார்க்கத்தைப் பற்றிக்கொண்டிருக்க விரும்புகிறவர்களுமே கிறிஸ்துவை பகைக்கிறார்கள்.

இயேசுவானவர் தெய்வமானபடியால் கிறிஸ்துவை பகைக்கிறவர்களுடைய உள்ளங்களையும் அவர் ஆட்கொண்டு தமக்கு தொண்டு செய்யும் பக்தர்களாக மாற்றிவிடுகிறார். அநேக பக்தர்களின் சரித்திரங்கள் அதை நிரூபிக்கின்றன. இன்று உலகமெங்கும் மெய்யாய் பரவி வரும் மார்க்கம் கிறிஸ்தவம் ஒன்றே.

கிறிஸ்தவர்களுக்கு, கிறிஸ்தவர்கள் (கிறிஸ்து+அவன்=கிறிஸ்தவன், கிறிஸ்து+அவள்=கிறிஸ்தவள்] என்கிற பெயர் வேதாகமத்தில் மூன்று, நான்கு இடங்களில் மாத்திரம் வருகிறது [அப். 11:26; 26:28; 1 பேது. 4:16). இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து அவரைத் தொழுது கொண்டு பின்பற்றின விசுவாசிகளைப்பார்த்து பிறர் சூட்டின பெயராகும் கிறிஸ்தவர்கள் என்பது.

கிறிஸ்து மார்க்கம் (Christianity) இயேசு கிறிஸ்துவினாலே ஸ்தாபிக்கப்பட்ட மார்க்கம். அதாவது, பல கிறிஸ்தவர்களைகள் கொண்டிருக்கிற பலக் கொள்கைகளல்ல, எல்லாக் கிறிஸ்தவர்களுக்கும் பொதுவாயிருக்கிற வேதத்திலடங்கிய சமயமே கிறிஸ்து மார்க்கமாம். கிறிஸ்தவ மதம் என்ற சொல் வேதாகமத்தில் இல்லாவிட்டாலும், மதங்கள் என்ற ஆராய்ச்சியின்படி கிறிஸ்தவ மதம் என்ற பெயரில் நாம் தொடர்ந்து கிறிஸ்து மார்க்கத்தைக் கவனிப்போம்.

(தொடரும்).

"...அவர் மரணத்தைப் பரிகரித்து ஜீவனையும் அழியாமையையும் சுவிசேஷத்தினாலே வெளியரங்கமாக்கினார்"

2 தீமோ. 1:10.

# இந்து மதம் (தொடர்ச்சி)

பொதுவாக தேவனையும், மனிதனையும் பிரிப்பது எதுவோ அது விக்கிரகபக்தியாகும். தேவனுடைய பிரமாணம்:

1. ஒரே தேவன்.

2. என்னைப் போன்ற, அல்லது எனக்கு ஒப்பாக, அல்லது என்னை அபிமானித்து வானத்திலோ, பூமியிலோ பூமியின் கீழ் உண்டான யாதொன்றின் சொரூபத்தையோ, மனித ருபத்தையோ உண்டாக்கவும் கூடாது, தொழுதுகொள்ளவும் கூடாது என்பது தேவனுடைய பிரதான கற்பனையாகும். அப்படியே,வெளியேயுள்ள வெளிபக்தி மாத்திரமல்ல, உள்பக்தி பாவ இச்சைகள், விக்கிரகாரதனையாகிய பொருளாசை, பின்மாற்றமான எண்ணங்கள், தேவனைவிட்டு மனிதனை பிரிக்கின்றது எவைகளோ அவைகளெல்லாம் விக்கிரக பக்தியே.

விக்கிரக பக்தியின் வரலாற்றையும், குறைதிசயங்களையும் விசாரிப்பவர் அதற்குக் காரணம் என்னவென்று அறிய விரும்புவாராகையால் அதற்குரிய சில காரணங்களைச் சொல்லுகிறோம்.

1. விக்கிரக பக்திக்கு, பிசாசு என்னும் சாத்தான் முதல் காரணன். சாத்தான் என்பதற்கு விரோதி என்று அர்த்தமாம். இவன், தேவனுக்குத் தூதனுயிருந்த தேவதூதன். கீழ்ப்படியாமையினிமித்தம் தேவன் அவனையும் அவனேடு கூடச் சேர்ந்த ஒரு கூட்டம் தேவ தூதர்களையும் மகிமையிலிருந்து அதாவது பரலோகத்திலிருந்து கீழே தள்ளி விட்டார். அவன் அது முதற்கொண்டு, தேவன் நேசிக்கிற அற்புத சிருஷ்டியாகிய மனிதனைக் கெடுத்து, அவனைத் தன்பக்கம் சேர்த்துத் தனக்கு நியமிக்கப்பட்ட நரகத்திற்கு அவனைக் கொண்டு செல்லும்படியாக தீவிரமாய்க் கிரியை செய்கிறன்.

தேவனுக்கு உண்டாயிருக்கிற அவருடைய மகிமையைக் குலைக்கவும், பாவ புண்ணியத்தைப் பற்றி அவருக்குண்டாயிருக்கிற ஆளுகை முறையை அழிக்கவும் எத்தனித்து அவருக்கு எதிராக தனக்கு ஓர் ஆளுகையையும், அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் சாத்தான் செய்து கொண்டான். இதனுல் அவனுக்கு இவ்வுலகத்தின் பிரபு என்றும் (யோ. 12:31), ஆகாயத்தின் அதிகாரப்பிரபு என்றும் (எபே. 2:2], இவ்வுலகத்தின் தலைவன் என்றும் [2 கொரி. 4:4) பேருண்டாயிற்று. அவன் செய்யும் ஆளுகையை இருளினுடைய அதிகாரம் என்று சொல்லப்பட்டுள்ளது (கொலோ. 1:11). இவ்வாறு பிசாசு தானே அக்கியானத்திற்கெல்லாம் ஆதிகாரணமாகி,

"கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத் தானும்
தன் பொல்லாச் சிறகை விரித்தாடினுற்
போலவே"

சத்தியக் கடவுள் தமக்குச் செய்ய வேண்டிய ஆராதனை நிமித்தமாகக் கற்பித்தைப்பின்பற்றி, அந்தந்த தேசங்களில் பேர் பெற்றவர்களை தனக்கு ஊழியஞ் செய்ய ஏவி, விக்கிரகாராதனையை இந்த லோகத்தில் கொண்டு வந்து அதன் மூலமாக தன்னை ஒரு கடவுள் போல் காண்பிக்கிறன்.

2. அஞ்ஞானத்திற்குப் பாவம் ஒரு காரணம். பாவம் என்ற போது கர்ம பாவத்தையல்ல, ஜென்ம பாவத்தையே குறிப்பிடுகிறோம். நமது ஆதி தந்தையர்கள் செய்தபாவத்தால் எல்லா மனிதரும், கெட்ட புத்தி, கெட்ட மனமுள்ளவர்களாய்ப் போய்விடும்படியாயிற்று; இருதயம் கெட்டதானுல் நடக்கையும் கெட்டதாயிருப்பது அதிசயமல்ல, மனிதனுடைய கெட்ட சுபாவம் விக்கிரகாராதனைக்குப் பொதுக் காரணமாகும். அதினின்று தோன்

றின அநேகத் துணைக் காரணங்களுமுண்டு. அவைகளில் பிரதானமானவை புலன்களுக்கு விஷயமான பொருட்களிடத்தில் ஆசை கொள்கிறதும், சத்தியத்தைக் காட்டிலும் கட்டுக் கதைகளை விரும்புகிறதும், ஆடம்பரங்களில் பிரியம் வைக்கிறதும், வெளிவேஷத்துக்கு சார்பாய் இருக்கிறதும் மனிதருடைய சுபாவமாகையால், சில விக்கிரகாராதனை இந்தக் காரணங்களினால் உண்டாயிருக்கக் கூடும் என்று கருதுகிறார்கள். அன்றியும், அரசரும், குருக்களும் தங்கள் யோசனைகளினாலே வீணராய்ப் போன வித்துவான்களும், சில தலைவர்களும் விக்கிரகாராதனைக்குக் காரணராய் இருக்கிறார்கள்.

சில விக்கிரகாராதனை, சிருஷ்டிகளிடத்தில் மனிதருக்குண்டாயிருக்கிற நன்றியறிதலினாலும், பற்றுதலினாலும் உண்டானதாகக் காணப்படுகிறது. இவைகளையெல்லாம் வேத எழுத்து ஒரே காரணத்துக்குள் அடக்கி, மனிதனுடைய இருதயத்தின் கேட்டினால் உண்டானதாகக் காண்பிக்கிறது [ரோ. 1:28].

3. கடைசியாக, சத்திய வேதத்தின் முக்கியமான சில சங்கதிகள் கிரியைகளைக் குறித்து எழுதப்பட்டிருக்கிற சரித்திரம் சிதைந்து விக்கிரகாராதனைக்கு ஒரு காரணமாயிற்று. விககிரகாராதனை எவ்விதத்திலும் தவறாகும். விக்கிரகாராதனை தேவனுக்கு விரோதமான பகையாகும். சிலர், விக்கிரகாராதனை பாஷையில் அ, ஆ, போன்ற ஆரம்பப்பாடம் என்றும், அதுவின்றி மெய்பக்தி உண்டாக முடியாது மெய்பக்தி உண்டான பின்பு விக்கிரகாராதனையை மனிதன் தள்ளி விடுவான் என்றும் தவறாகப் போதிக்கிறார்கள். பாஷையின் அகர எழுத்துக்கள் அ, ஆ, இ உயிர் எழுத்து, மெய் எழுத்து இவைகள் பாஷை முழுவதிலும் எப்பொழுதும் கடைசி மட்டும் நிலைத்திருக்கக் கூடியதாகும். அப்படியே, விக்கிரகாராதனையும் காணப்படுகிறது. இப்பொழுது சில மதக்காரர்கள் சிலையை வைத்துதான் பிழைக்கிறார்கள். கடவுளை வைத்து அல்ல, சிலைகளை வைத்து அவர்கள் கதைகள் ஓடுகிறது. சிலையினிமித்தம் தேசத்திலே இரத்தப்பழிகள் உண்டாகிறதையும், தேசத்திலே சீர்கேடு பெருகுகிறதையும் பார்க்கிறோம்.

பூஜை செய்து கொண்டிருக்கும் போதும், ஆரத்தி எடுத்துக் கொண்டு இருக்கும் போதும் தெருக்களில் ஓடிப் போய்க் குத்தவும், வெட்டவும், கொல்லவும், கொள்ளையடிக்கவும், கற்பழிக்கவும் செய்வான். இது தவறான மதத்தார்களின் சுபாவ நிலை. பக்தி, மனிதனை, தேவபக்தி மனிதனுடைய சுபாவத்தில் மாற்றத்தையுண்டாக்கி அவனை நல்லவனாக மாற்றக் கூடுமானால் அந்த மதமும், பக்தியும் சரியே. ஆனால், ஏட்டுச் சுரைக்காயாய் தத்துவம் பேசி, கிரியையிலே ஒன்றும் இல்லாதவைகளை பொய் மதங்கள் என்று நாம் தீர்ப்பிடுகிறோம். மதங்கள் மனிதனை மடையனாக்குகிறது என்று நாஸ்திகவாதிகள் சொல்லுகிற கருத்துகளிலும் சிலவை உண்மையாய் இருக்கிறதை நாம் நடைமுறையில் பார்க்கிறோம். நாஸ்திகவாதமும் ஒரு மதமே. அவர்களும் உத்தமர்களல்ல.

கடைசியாக, சத்திய வேதாகமம் இங்ஙனம் எச்சரிப்புக் கொடுத்துள்ளது: "காரியத்தின் கடைத்தொகையைக் கேட்போமாக. மெய் தேவனுக்குப் பயந்து, அவர் கற்பனைகளைக் கைக்கொள். எல்லா மனுஷர் மேலும் விழுந்த கடமை இதுவே. ஒவ்வொரு காரியத்தையும் நன்மையானாலும், தீமையானாலும் தேவன் நியாயத்திலே கொண்டுவருவார் என்பதாம்.

இந்து மதத்தின் காலக் கணிதங்கள் இந்து மதத்திலுள்ள சாஸ்திரங்கள், அவைகளுடைய தன்மைகள் பற்றி எழுதப் போனால் விரியும். அவசியமாகும் போது பின் எழுதுவோம்.

தத்துவமல்ல, மனம் மாற்றமே மனிதனுக்குத் தேவை. மனிதனுடைய உள்ளான நிலையிலே அவன் மறுபிறப்படைய

வேண்டும். அவன் இருபிறப்படையும் போதே அவனுக்கு தெய்வீகம் பிடிபடும். மற்றப்படி நாம் அடிக்கடி கருத்து சொல்வதுபோல் மனிதனுக்குள் பாவம் என்று சொல்லப்படுகிற விஷயம் இருக்கிறது. அவன் விரும்பாவிட்டாலும் அவனிலிருந்து அந்தப் பாவம் எழும்பி அவனைப் பாவஞ்செய்ய வைக்கும். இந்தப் பாவத்திலிருந்து விடுதலையாக்கும் மார்க்கமே மெய் மார்க்கம் மற்றதெல்லாம் பொய் மார்க்கம் என்பதாம்.

இயேசு கிறிஸ்துவினால் மனிதன் பாவத்திலிருந்து விடுதலையாகி இறைவனோடு ஐக்கியப் படுகிறான் இறைவனுடைய ஆவியைப் பெற்று இறைவனோடு பேசவும், இறைவனுடைய சத்தம் கேட்கவும் சித்தம் அறியவும் அதன்படி ஒழுகவும் முடிகிறது. கடைசியில் இவனுடைய சரீரமும் தெய்வ நிலை அடைகிறது; அவனுடைய ஆவி, ஆத்துமா, சரீரம் யாவும் முக்தியடைகிறது. ஆதலால் கிறிஸ்தவமே மெய் மார்க்கம். பாவத்திலிருந்து மனிதனை விடுதலையாக்குகிற மார்க்கமே மெய் மார்க்கம்.

முற்றும்



இயேசு: நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன். யோ. 14:6.



# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

**4. ஊழியன் ஜலத்தில் ஸ்நானம் பண்ணி, வஸ்திரம் தரிப்பிக்கப்பட்டவனாயிருக்க வேண்டும். (லேவி. 8:6,9): (தொடர்ச்சி)**

ஆசாரியனது வஸ்திரங்கள் அவனைப் பார்த்தவுடனே இவன் ஆசாரியன் என்று கண்டு கொள்ள உதவியாயிருப்பது போல ஊழியர்களும், காணப்பட வேண்டியது அவசியம். ஊழியம் எவ்விதத்திலும் குற்றமற்றதாய் விளங்க வேண்டும் (கொலோ. 3:10; ரோ. 13:14; யோ. 13:35 .

**5. ஆசாரியன் அபிஷேகம் பெற்றவனாக இருக்க வேண்டும்.**

பழைய ஏற்பாட்டுக் காலத்தில் ஒருவன் இராஜாவாக வேண்டுமானாலும், தீர்க்கதரிசியாக வேண்டுமானாலும், ஆசாரியனாக வேண்டுமானாலும் அவன் அபிஷேகம் பெற்றிருக்க வேண்டும் (லேவி. 8:12; 1 இரா. 19:15;19:16; லேவி. 8:12]. தைலத்தால் அபிஷேகம் பண்ணப்பட்டிருக்க வேண்டிய விஷயம் இது. அபிஷேகம் பண்ணப்படாதவர்கள் ஊழியத்தில் பிரவேசிக்க கூடாது, பிரவேசித்தால் அவர்கள் கொலை செய்யப்படுவார்கள் [எண். 3:10). புதிய ஏற்பாடு ஊழியமோ ஆவிக்குரிய ஊழியம். அபிஷேகமும் ஆவிக்குரிய அபிஷேகந்தான்.

இயேசு மாம்சத்தில் ஜீவித்த வேளையில் சீஷர்களைத் தெரிந்தெடுத்து மூன்றரை வருஷம் கூட வைத்துப் படிப்பித்த போதிலும், அவர்கள் இரட்சிக்கப்பட்டிருந்த போதிலும் (லூக். 10:20), அவர்கள் அபிஷேகம் பெற்றிருக்க வில்லை. ஆனால், அவர்கள் பிரசங்கம் பண்ணினார்கள், வியாதிஸ்தர்களை சுகப்படுத்தினார்கள், மரித்தோரை

உயிரோடெழுப்பினார்கள், அற்புத அடையாளங்கள் செய்தார்கள். ஆனால் அவர்கள் புதிய ஏற்பாட்டின் ஊழியர்களாக ஆகிறதற்கு பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றுக் கொள்ள வேண்டுமென கர்த்தர் கட்டளையிட்டார் (லூக். 24:49; அப். 1:4-8) அந்தக் கட்டளையின்படி அவர்கள் காத்திருந்து பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்டார்கள் [அப். 1:14,15;2:1-4.) அந்நிய பாஷை அடையாளத்தோடும், பரியாச உதடுகளோடும், வல்லமையோடும் பெற்றுக் கொள்வதே பரிசுத்த ஆவியின் அபிஷேகம். இந்த அனுபவத்தையுடையவர்களே புதிய ஏற்பாட்டின் ஊழியர்கள். அதன் பின்பே புதிய ஏற்பாட்டின் ஊழியம் ஆரம்பமாயிற்று (அப். 2:1-47].

## ·ஆசாரியன் ஜீவிக்க வேண்டிய மாதிரி:

**1. ஆசாரியன் தலைப்பாகையை கழற்றக் கூடாது:**

தலைப்பாகை என்று சொல்கிறதாவது ஆசாரியனுக்கும், பிறருக்கும் வித்தியாசம் காண்பிக்கும்படி கொடுக்கப்பட்ட அடையாளமாக இருந்தது. இது தலையை கனவீனப்படுத்தக் கூடாது என்று திட்டமாக அறிவிக்கப்படுகிறது. தலைப்பாகை, இரட்சிப்பின் தலைச்சீரா என்றும் [எபே. 6:14) காட்டப்பட்டுள்ளது. தலைப்பாகையை எடுக்கக் கூடாது. இரட்சிப்பை இழந்து போகக்கூடாது. இரட்சிப்பு கறைபடாதபடிக் காத்துக் கொள்ள வேண்டும் (பிலி. 2:12].

**2. வஸ்திரங்களைக் கிழிக்கக் கூடாது:**

முற்காலத்தில் துக்க வேளைகளில் வஸ்திரங்களைக் கிழித்தார்கள். அது துக்கத்திற்கு அடையாளமாக இருந்தது. தங்களைத் துக்கத்தால் தாழ்த்தி ஜெபிக்கும் போதும் அப்படியே செய்தார்கள் [எஸ்ரு 4:1-3; 1 இரா. 21:17-27]. வஸ்திரத்தைக் கிழிக்கக் கூடாது என்பது இரட்சிப்பின் வஸ்திரத்தைக் கிழிக்கக் கூடாது. இரட்சிப்பு தன்னை விட்டு எடுபட்டு போய்விடக் கூடாது என்றும், இழந்து போகக் கூடாது என்றும் காண்பிக்கிறது. மேலும், யாராவது மரித்தால் அவர்களுக்காக கலக்கமுற்று வஸ்திரங்களைக் கிழிக்கிற பழக்கம் உண்டு (எரே. 22:10). ஆனால், ஊழியக்காரன் அப்படி செய்ய முடியாது. செய்யக் கூடாது. அவன் திடமாக இருக்க வேண்டும். அவன் கலங்கினால் வஸ்திரம் கிறப்படுவது போல் ஆவிக்குரிய அனுபவம் கிறப்படும். மகிழ்ச்சி எடுபட்டு போம். சந்தோஷமாகிய கனியை அவன் இழந்து போவான். ஆதலால், எந்த சமயத்திலும், வஸ்திரம் கிழிக்கலாகாது. சஞ்சலத்திற்கு இடங்கொடுக்க கூடாது.

**3. ஆசாரியன் கூடாரத்தை விட்டு புறப்படலாகாது.**

ஊழியக்காரனுக்கு ஓய்வில்லாமல் வேலை இருந்தது. காலையும், மாலையும் பலியிட வேண்டும். குற்றநிவாரணபலி, போஜனபலி, சமாதானபலி, பாவநிவாரணபலி இவைகளைக் கொண்டு வருகிற மக்களுக்காக மாறி, மாறி அவைகளைச் செலுத்திக் கொண்டு இருக்க வேண்டும் எப்பொழுதும் ஆசாரியன் அங்கு இருக்க வேண்டும். அவன் அசதியாய் இருக்க முடியாது (எரே. 48:10]. கர்த்தருடைய ஊழியத்தில் உண்மையுள்ளவர்களும், உத்திரவாதமுள்ளவர்களும் இப்படியே ஓய்வில்லாமல் பணியாற்றுவார்கள். புதிய ஏற்பாட்டுக் காலத்திலும் இரண்டு எஜமானுக்கு ஒருவன் ஊழியஞ் செய்ய முடியாது (மத். 6:24 2 தீமோ. 2:4; அப். 6:2; 1 கொரி. 9:16,17].

**4. ஊழியக்காரன் திராட்சரசமும், மதுவும் குடிக்கக் கூடாது.**

திராட்சரசமும், மதுவும் குடிப்பது அது கீழான மக்களுடைய நிலை. இராஜாக்களுக்கு, பிரபுக்களுக்கு அது தகுதியல்ல (நீதி. 30:1–3). வேசித்தனமும் திராட்சரசமும், மதுபானமும் இருதயத்தை மயக்கும் (ஓசி. 4:11). ஊழியன் எப்பொழுதும் ஞானவானாக விளங்க வேண்டும். மயக்கத்துக்கு இடங்கொடுக்கக் கூடாது. தேவ நாமம் தூஷிக்கப்படக் கூடாது. முகஸ்துதியில் பிரியம் வைக்கக் கூடாது. ஏழை எளியவன் வழக்கை விசாரிக்க வேண்டும். மாம்சத்தில் சோர்பு உண்டாகிற போது போஜன பிரியனாகவும் மாறக்கூடாது. அப்படி ஆகும் பொழுது அவனுடைய புத்தி மயங்கி விட்டது என்று அர்த்தம். ஆதி அன்பு, கர்த்தர் மேலுள்ள நேசம் எப்பொழுதும் தெளிவாக இருக்க வேண்டும். ஊழியன் தியாகியாக ஜீவிக்க வேண்டும்.

**5. பரிசுத்தமுள்ளதற்கும், பரிசுத்த மில்லாததற்கும் வித்தியாசம் காட்ட வேண்டும்.**

ஆசாரியன் அல்லது ஊழியன், சபைக்குக் காவலாளி இன்னது தவறு, இன்னது தவறல்ல, இன்னது பாவம், இன்னது பாவமல்ல, இது சரி, இதுசரியல்ல என்று தீர்மானிக்கக் கூடிய தெளிவுள்ளவனாக இருக்கக் வேண்டும். குற்றத்தைக் கண்டிக்க வேண்டும். கண்ணை மூடிக்கொண்டு இருக்கக் கூடாது. அப்படி இருந்தால் அவன் தேவனை கனவீனம் பண்ணுகிறான் (எசே. 22:25,26). ஊழியன் உத்திரவாதமுள்ளவன் அவன் குருடனாகவோ, குரைக்க மாட்டாத நாயாகவோ, தூக்க மயக்கமாய் புலம்புகிற அவன், நித்திரை பிரியனாகவோ, பெருவயிற்றுச் சோம்பேறியாகவோ இருக்கக் கூடாது (ஏசா. 56:10.11). ஊழியக்காரன் உபதேசத்தில் சுத்தத்தையும் ஜீவியத்தில் சுத்தத்தையும், பின்பற்ற வேண்டும். பக்க வழியாய் பாவிகள் நுழைய இடங்கொடுக்கக் கூடாது. குற்றத்தைக்கூறி அறிவிக்க வேண்டும். மோசே தேவனுடைய வீட்டில் எங்கும் உண்மையுள்ளவராயிருந்தார் (எபி. 3:2). ஒப்புவிக்கப்பட்ட ஊழியத்திற்கு உண்மையுள்ளவனாய் விளங்க வேண்டும். எனக்கென்ன அவர்கள் பாடு என்று கண்சாடையாக இருக்கக் கூடாது. அப்படி இருந்தால் அவன் தப்பித்துக் கொள்ள முடியாது. சாபமே உண்டாகும் (எசே. 3:17–21).

**6. ஆசாரியன் புளிப்பில்லாததைப் புசிக்க வேண்டும்.**

புளிப்பு பாவத்தைக் குறிப்பிடுகிறது. புளித்த உபதேசத்தைக் குறிப்பிடுகிறது ஆசாரியன் புளிப்பில்லாததைப் புசிக்க வேண்டும். ஜீவியத்தில் புளிப்பில்லாதவனாகவும், உபதேசத்தில் புளிப்பில்லாதவனாகவும் அவன் இருக்க வேண்டும். ஊழியக்காரன் ஆரோக்கியமான உபதேசத்தை போதிக்கிறவனும், ஜீவியம் குற்றமற்றவனாயும், விளங்க வேண்டும் [2 தெச. 2:10,11; 1 தீமோ. 4:12.] புளிப்புக்கு சற்றும் இடங் கொடுக்கக் கூடாது.

[தொடரும்.]

"இவைகளை நடப்பிக்கிறதற்கு எவன் தகுதியானவன்" 2 கொரி. 2:16.

# நரகம்

நரகம் என்று ஒன்று உண்டா என்பது அநேகருடைய கேள்வி. நரகம், பாதாளம் என்றும், மரித்த துன்மார்க்கர்களின் ஆத்துமாக்கள் பாதாளத்தில் வேதனைப் படுகிறதாகவும் வேதாகமத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது [லூக். 16:22-24). வேதாகமம் எதைச் சொல்லுகிறதோ அதை நாம் நம்புகிறோம். இயேசுவானவரே நரகத்தைப்பற்றி பலமுறை சொல்லியுள்ளார். அது ஒரு நிலைமாத்திரமல்ல அது ஒரு இடம்.

சிலர், நரகமாவது மோட்சமாவது ஒன்றும் கிடையாது என்று சொல்லிக்கொண்டிருக்கலாம் அப்படிச் சொல்லி விட்டால் எந்தப் பாவத்தையும் நாம் துணிந்து செய்யலாம் நரகம் நம்மைக் கட்டுப்படுத்தாது என்பது இவர்களுடைய எண்ணம். தேவன் இல்லை என்பது இவர்களுடைய நினைவு [சங். 14:1]. இருக்கின்ற ஒன்றை இல்லை என்று சொல்வதால் அது இல்லாமல் போய்விடாது. சிலர் நாங்கள் பார்த்தால் தான் நம்புவோம் என்பர். எல்லாவற்றையும் நாம் இந்தக் கண்களினால் பார்க்க முடியாது. அனுபவிக்க; உணர முடியும்.

உதாரணமாக காற்று, மின்சாரம், உயிர் முதலியவைகளை நாம் இந்தக்கண்களினால் பார்க்க முடிவதில்லை. ஆனால் அவைகள் உண்டு, அவைகளின் செயல் பாட்டிலிருந்து அது இயங்குகிறது என்பதை நாம் அறிந்து கொள்கிறோம், இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறோம். தூர தேசத்தை நாம் பார்க்க முடியாது. ஆனால் அங்கிருந்து வரும் செய்திகள், ஆட்கள், பொருளை வைத்து இன்னும் டெலிவிஷன் காட்சிகள் மூலமாகவும் அதை உண்மை என்று நம்புகிறோம்.

பாதாளம் கீழே உள்ளது [எண். 16: 30-33; 1 சாமு. 2:6; ஏசா. 14:9; லூக். 8:31]. உலகில் துன்மார்க்கர் செழித்திருக்கிறதையும் நல்லவர்களில் அநேகர் கஷ்டப்படுகிறதையும் நாம் காணுகிறோம். துன்மார்க்கர்ருக்கு தண்டனை முடிவாகக் கிடைக்கவும், நல்லவர்களுக்கு அவர்களுடைய நற்கிரியைகளுக்கேற்ற நற்பலன்கள் கிடைக்கவும் ஒரு காலமும் இடமும் இருக்கத்தான் வேண்டும். தேவன் அதற்கான ஏற்பாடு செய்யாமல் விடார். நிச்சயமாகவே முடிவு உண்டு (1 பேது. 4:7].

நகரம் நித்தியமாய் இல்லை என்பது சிலரது எண்ணம். ஆத்துமா அழியாதது அதனால், மோட்சமோ நரகமோ நித்தியமானதுதான். நரகம் அது வேதனையுள்ள இடம். அது கந்தகமும் அக்கினியும் எரிகிற கடல் [வெளி. 20:13-15). பாதாளம் அதன்முன் பகுதியாகும். நரகம் மனிதர்களுக்காக ஏற்படுத்தப்பட்டதல்ல. பிசாசுக்காகவும் [சாத்தான்]. சாத்தானுடைய தூதர்களுக்காகவும் நரகம் தேவனால் ஏற்படுத்தப்பட்டது [மத். 25:41]. ஆனால் மனிதர்கள் சாத்தானுடைய கிரியைகளைச் செய்வதால், அவனைச் சேவித்து அவனைப் பின்பற்றுகிறதினால் மனிதர்களும் அவன் [சாத்தான்] சென்றடைகிற நரகத்திற்குச் சென்றடைகிறார்கள். அதனால் தேவன் பாதாளத்தை விரிவும் அகலமுமாக்கியுள்ளார்.

மனிதர்கள் வேண்டுமென்றே பிடிவாதமாய் நரகத்தை வாஞ்சிக்கிறபடியினால் நரகம் அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது [ஏசா. 14:15; 5:14]. தேவன் நீதியுள்ள நியாயாதிபதி. பாவஞ்செய்கிறவர்களை தேவன் நியாயம் விசாரித்து நரகத்திலே தள்ளப்போகிறார் [சங். 11:6;9:17].

*மரணம் மூன்று விதமாகும்.*

1. சரீர மரணம் (Physical death)

ஆத்துமாவும், ஆவியும் சரீரத்தை விட்டுப் பிரிந்து செல்லுதலே சரீர மரணமாகும் (யாக். 2:26).

2. ஆத்தும மரணம்.

ஆத்துமா தேவனை விட்டுப் பிரிந்து இழந்து வாழ்தலே ஆத்தும மரணம். இது பாவத்தினால் நிகழ்கிறது. ஒருவன் தொடர்ந்து பாவஞ் செய்யும் பொழுது அவனுடைய ஆத்துமா ஆத்தும மரணத்திலிருக்கிறது. அப்பொழுது சரீரப் பிரகாரமான மரணமும் அவனில் கிரியை செய்ய ஆரம்பிக்கிறது [மத். 8:22; கொலோ. 2:13; 1 தீமோ. 5:6). அவன் சரீரப்பிரகாரமாக மரிக்கும் நாள் வரும். அப்பொழுது நேரடியாக நரகத்திற்குப் போகிறான்.

3. இரண்டாம் மரணம், அல்லது நித்திய மரணம்.

மனிதனுடைய ஆவி, ஆத்துமா, சரீரத்துடன் தேவ சமூகம், தேவ ஆளுகை, ஆதரவை விட்டு நித்தியமாய் அவன் துரத்தப்பட்டு எரிகிற அக்கினிக் கடல், நரகத்திலே தள்ளப்படுவதே இரண்டாம் மரணமாகும் (லூக். 12:5; 2 தெச. 1:6,7,10; மத். 18:8,9). மனிதன் சரீரத்திலிருக்கும் போது பூமியில் நடப்பிக்கிற அக்கிரமங்களுக்கும், தேவ தூஷணங்களுக்கும், தேவ துரோகங்களுக்கும் வஞ்சனைகளுக்கும், துணிகரமான பாவங்களுக்கும், விக்கிரகாராதனைக்கும், பாவத்தை விட்டு மனந்திரும்ப மனமில்லாமல் அவன் பாவத்தை வாஞ்சிக்கிறபடியினால் தேவன் அவனுக்கு அளிக்கும் தண்டனை நரகாக்கினையாகும்.

இதற்கு முன்னடையாளமாக இந்த உலகத்திலே பல சம்பவங்கள் நிகழ்ந்து கொள்கின்றன. வேதனை, நோய், காயங்கள், துன்ப துக்கங்கள், மரணம் முதலியன நரகம் உண்டு என்பதற்கு முன்னடையாளமாக இருக்கின்றன. இப்பொழுது அவனுக்கு சரீரத்தில் உண்டாகிறதைக் காட்டிலும் கொடிதான வேதனை அவனுடைய ஆத்துமாவிலும், சரீரத்திலும் அவனுக்கு உண்டாகப் போகிறது. மனிதன் பாவத்தை விட்டு மனந்திரும்பி, மெய் தேவனை விசுவாசித்து, பாவ மன்னிப்பையும், பாவத்திலிருந்து விடுதலையையும் பெற்று, பரிசுத்த வாழ்க்கை வாழா விட்டால் அவன் ஆக்கினையடைவது நிச்சயம். நீ எங்கே செல்ல வேண்டுமென்பது, நரகத்திற்கா? மோட்சத்திற்கா? என்பதை நீயே தெரிந்து கொள். நீ விரும்பித் தேடுகிறதை தேவன் உனக்குத் தருவார் [சங். 109:7).

பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலை பாதகர்களும், விபசாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும், கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள் [வெளி. 21:8.]

எதை இழந்தாகிலும் மோட்சத்தைத் தேடு. இயேசு உனக்கு அந்த அருள்வார்.

உன் கை உனக்கு இடறல் உண்டாக்கினால், அதை தறித்துப் போடு; நீ இரண்டு கையுடையவனாய் அவியாத அக்கினியுள்ள நரகத்திலே போவதைப் பார்க்கிலும், ஊனனாய் ஜீவனுக்குள் பிரவேசிப்பது உனக்கு நலமாயிருக்கும். மாற். 10:43.

"ஜீவ புஸ்தகத்திலே எழுதப்பட்டவனாகக் காணப்படாதவனெவனோ அவன் அக்கினிக் கடலிலே தள்ளப்பட்டான்"

வெளி .20:15.

# சத்திய வேதம்

உலகத்தில் அநேக நூல்களை பரிசுத்த நூல்கள் என்று சொல்லிக் கொள்கின்றார்கள். ஆனால், அவைகளில் பொய்யும், புரட்டும் மனித அபிப்பிராயங்களும், கொள்கைகளும் உண்டு. பல ஆண்டுகளாக பலர் மூலமாக சொல்லப்பட்ட கருத்துக்களை யாதாமொருவர் சேகரித்து, தொகுத்து எழுதியிருப்பார். அதற்கு கடவுள் வெளிப்படுத்தினதாக முத்திரை குத்துவார்கள். அல்லது கடவுள் சொன்னதாக எழுதியிருப்பார்கள். ஆனால், அது கடவுள் சொன்னது இல்லை என்று, அது நடைமுறையில் செயல்படாததின் மூலமாகவும் அதிலே தவறு இருப்பதின் மூலமாகவும் நாம் அறிந்து கொள்கிறோம்.

உதாரணமாக மதங்களிலே ஒவ்வொரு கொள்கைக்கும் ஒவ்வொரு கலைக்கும் வெவ்வேறு நூல்கள் உண்டு. அதில் எந்த நூலை அவர்கள் முதன்மையாகக் கொள்ள வேண்டுமென்று அவர்களாலேயே தீர்மானிக்க முடியாது. மேலும் அவைகளிலே உண்மைக்கு புறம்பானதும், ஒன்றுக்கொன்று மாறுபட்டதுமான கருத்துக்களும், தத்துவங்களும் எழுதப்பட்டிருக்கும். ஆனால் புஸ்தகம் என்ற ஒரே தகுதி வேதாகமத்[Bible]திற்கேயுண்டு. பைபிள் என்றால் புஸ்தகம் என்று பெயராகும். வேறொன்றுக்கும் அந்த தகுதி பூரணமாயில்லை.

சத்திய வேதம், இது அதிசயதன்மையுள்ள நூலாகும். நாம் முதன் முதலில் வேத நூலின் அதிசய தன்மையைக் கவனிக்க வேண்டும். அது தேவ செயலால் உண்டாயிற்று என்றும், கடவுள் தாமே அதின் ஆக்கியோன்களை ஆட்கொண்டு நடத்தாவிடில் அது நமக்குக் கிடைத்திருக்காது என்றும் அதைப் படித்து அதன் அற்புத தன்மையைக் கவனித்திருப்பதினாலே அறிந்து கொள்ளலாம்.

இப்புத்தகம் பல்வேறு 40க்கும் மேற்பட்ட மனிதர்களால் பாகம் பாகமாக எழுதப்பட்டபோதிலும் எவ்வளவோ சிறந்ததும் ஒருவரே எழுதியது போன்ற மாட்சிமை தங்கிய நூலாகவும் இருக்கிறது. அதில் அடங்கியுள்ள ஆகமங்களை இயற்றினவர்கள் திறமை வாய்ந்தவர்களானபடியால் அவை மிகவும் மேன்மையான நூல்களாய் இருப்பது ஆச்சரியமன்று.

உதாரணமாக மோசே, தானியேல் ஆகிய இவ்விருவர், இவ்வுலகத்தில் தோன்றிய ஞானிகளில் மகா பெரியவர்கள். மோசே மனிதரில் தோன்றிய மகா பெரிய தலைவராகும். தானியேல் பிரதம மந்திரியாகும். தாவீது பெயர்போன கவிஞரான ஓர் அரசர். சாலொமோன் என்பவர் தத்துவ சாஸ்திரியான அரசர். எஸ்றா என்பவர் வேதபாரகன். ஏசாயா என்பவர் மிகவும் பெரிய தீர்க்கதரிசி. பவுல் கல்வி கற்ற ஒரு குரு. லூக்கா ஒரு வைத்தியர். ஆயினும் வேறு சில ஆகமங்களின் ஆக்கியோன்கள் சர்வசாதாரண மனிதர்களே.

உதாரணமாக வியப்புண்டாக்கும் நூலாகிய யோவானின் தரிசனம், அல்லது பேதுருவின் மிகவும் நேர்த்தியான நிருபங்கள் செம்படவர்களால் இயற்றப்பட்டது என்று யார் நினைப்பர்? அதைப் போல முதல் சுவிசேஷ ஆகமம் தீர்வை வாங்கின மனிதன் எழுதியது என்பதும் ஆமோஸ் தீர்க்கதரிசனம் ஒரு மேய்பனால் (இடையர்) இயற்றப்பட்டது என்பதும் அதிசயமே.

இன்னொரு விஷயத்தைக் கவனிப்போம். வேத புஸ்தகத்தின் பங்குகளெல்லாம் ஒரே காலத்தில் எழுதப்படாமல் வெவ்வேறு காலத்தில், வெவ்வேறு இடங்களில் அதை இயற்றினவர்கள் எழுதி வைத்து விட்டு காலஞ் சென்று

விட்டார்கள். கடைசியாக இயற்றப்பட்டதற்கும், முதலில் இயற்றப்பட்டதற்கும் இடையில் 1500 வருடம் சென்றது. அப்படியிருந்தும் ஒவ்வொரு பாகமும் இலக்கிய மேன்மையும், சரித்திர உண்மையும் உடையதாய் காணப்படுகிறது. இதுவும் சொல்லடங்கா ஆச்சரியமான விஷயமே.

அது நிற்க, சத்திய வேதம் எந்தப் பாஷையில் மொழி பெயர்க்கப் பெற்றாலும் அது மகா சிறந்த நூலாகவே இருக்கிறது. வேறு அநேக புத்தகங்கள் அவ்வாறு வெவ்வேறு மொழியில் மொழி பெயர்க்கப்படுமாயின் அவைகளின் மேன்மை அற்றுப்போகும். அவைகளின் மேன்மை விளங்காது. [உ.ம்] குரான், பகவத்கீதை இவ்விஷயத்தில் சத்திய வேதம் பிரதானமான சக்தியுள்ளதாக இருக்கிறது என்பதையும் நாம் அறிவோம்.

சத்திய வேதாகமமானது இத்தனை நூற்றாண்டுகளாக அழிந்து போகாமலிருப்பது வியப்புண்டாகும் காரியமே. முதலாவது நேபுகாத்நேச்சார் என்னும் பாபிலோனிய அரசனும், அதற்கப்புறம் அந்தியோகியாவில் எப்பிப்பானிஸ் என்பவனும் எருசலேம் நகரை அழித்து இஸ்ரவேலரை சிறையாக்னார்கள். தேவாலயமும், அதன் தட்டுமுட்டுகளும் முற்றிலுமாய் அழிக்கப்பட்டன. பாலஸ்தீனா நாடு வனாந்திரமாயிற்று. இருப்பினும், அநேக பழைய ஏற்பாட்டுப் பிரதிகள் இந்நாள் வரைக்கும் காப்பாற்றப் பெற்றிருக்கின்றன. மீண்டும் மற்றெல்லா பூர்வ கால புத்தகங்களும் இப்பொழுதே எழுத்து பிழை நிறைய காணப்பட்டதாயிருக்கின்றன. ஆனால் சத்திய வேதமாகிய இந்த ஒரே நூல் இவ் விஷயத்திலும் சொல்லரும் வகையாய் பாதுகாக்கப் பெற்றிருப்பது யாவரும் வியந்து போற்றத்தக்க காரியம்.

புதிய ஏற்பாட்டை எடுத்துக் கொள்வோம். அதின் மூலப்பிரதிகளில் ஒன்றும் தற்காலம் போதுமானபடி இல்லை. அவையெல்லாம், இற்றும் அழிந்தும் போயிருக்கின்றன. கையால் எழுதப் பட்ட பிரதிகள் அநேக நூற்றாண்டு காலம் ரோமன் மார்க்கத்தாரின் மடங்களில் ஒளித்து வைக்கப் பட்டிருந்தன. சாதாரண மக்களில் யாராவது அவற்றில் ஒன்றை வைத்துக் கொண்டால் அது மரண தண்டனைக்குரிய குற்றம் என்று ரோமன் மார்க்கத்தார் அறிவித்திருந்தனர்.

லூத்தர் முதலிய பக்தர்களோ அவைகளை தங்கள் தங்கள் சொந்த பாஷையில் மொழிபெயர்த்தனர். அதற்குப் பின்னர் வால்ட்டர், இங்கர்சால் முதலிய நாஸ்திக வாதிகள் சத்திய வேதத்தை அழித்து ஒழித்து விடுவோம் என்று சவால் விட்டனர். அதைக் கேவலப்படுத்திப் பார்த்தார்கள். அதற்கப்பால் நாஸியரும் (NAZIST) கம்யூனிஸ்ட்காரர்களும் அதைப் படிக்கக் கூடாது என்று கட்டளை பிறப்பித்தார்கள். ஏன், இந்துக்களில் சிலர் கிழித்து எரித்துப் பார்த்தனர்.

எனினும் இந்த அதிசய நூல் தேவ

இதன் தொடர்ச்சி 14ம் பக்கம்

## பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro செல்லம் இம்மானுவேல் | Sis. டெய்ஸி பிளாரன்ஸ் | மதுரை | 12-1-1993 |
| Bro. சேவியர் | Sis. ஜெயா | வள்ளியூர் | 18-1-1993 |

னால் இயற்றப்பட்டதால் இந்நாள் மட்டும் ஒழிக்கப்படாமல் இருக்கிறதை நாம் பார்க்கிறோம். அதை ஒழித்துப்போட ஒருவராலும் முடியாது. வானமும் பூமியும் ஒழிந்துபோம். சத்திய வேதாகமமோ, அதிலுள்ள எழுத்தோ வார்த்தையோ அதிலுள்ள உறுப்போ ஒழிந்து போவதில்லை. சத்திய வேதாகமத்தின் மாட்சிமை மிகவும் பெரியதாகும். அது ஒரு பெரிய தீர்க்கதரிசன புத்தகமாகும். சத்திய வேதாகமத்தைப்பற்றி நாம் தொடர்ந்து தியானம் செய்வோமாக. அறிந்து கொள்வோமாக.

(தொடரும்.)



"சத்திய எழுத்திலே கண்டிருக்கிறதை நான் உனக்குத் தெரிவிப்பேன்"

தானி. 10:21.



சுவிசேஷம்

## மெய்யான சுதந்தரம் (விடுதலை)

நியாயப் பிரமாணத்தினாலே, உங்கள் மதப்பிரமாணத்தினாலே எவைகளிலிருந்து நீங்கள் விடுதலையாகி நீதிமான்களாகக் கூடாதிருந்ததோ விசுவாசிக்கிற எவனும் அவைகளிலிருந்து இவராலே, இயேசு கிறிஸ்துவினாலே விடுதலையாகி நீதிமானாக்கப்படுகிறான் (அப். 13:39).

மனிதனுக்கு பாவ மன்னிப்பு வேண்டும். அவனுக்கு விடுதலை வேண்டும். பாவத்திலிருந்து விடுதலை வேண்டும். பல மதங்கள், பல தத்துவங்கள், முயற்சிகள், பயிற்சிகள், பூஜை பலிகள், நற்கிரியைகள், புண்ணிய தான தர்மங்கள், யோகாப்பியாசங்கள், தியானங்கள் மூலம் மனிதன் நீதிமானாக முயற்சிக்கிறான். பாவத்திலிருந்து விடுதலையாக, குற்றமனச் சாட்சியினின்று விடுதலைபெற விரும்புகிறான், தேடுகிறான்; ஆனால் அடையவில்லை. அடைய முடியவில்லை.

அற்புதங்கள், அதிசயங்கள், செப்படி வித்தைகள் மனிதர்களில் பெருமையாய் எண்ணிக் கொள்ளக் கூடிய காரியங்களை மனிதன் பயிற்சி செய்து கற்றுக் கொள்ளலாம். ஆனால், பாவத்திலிருந்து விடுதலையாகவும், பரிசுத்தமாகவும் நீதிமானாகவும் அவனால் முடியாமல் வழியில்லாமல், தவிக்கிறான். மனிதன் தவித்துக் கொண்டிருக்கிறான்,

மனிதன் விரும்புகிறதை அவன் அடைய முடியவில்லை. எனவே குறுக்கு வழியை தேடுகிறான். தன் மதத்துக்கு ஆபத்து என்று தெரிந்தவுடன் அடிதடியில் இறங்குகிறான். நல்லவர்களோ இன்னும் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அப். பவுல் இப்படி பிரசங்கித்தார்.

1. இயேசு கிறிஸ்து: இவர் கடவுளுடைய ஒரே பேறான குமாரன். ஒன்றான மெய்த் தேவன். கடவுளோடு ஏகமாய் இணைந்தும், பிரிந்தும் செயல் படக் கூடியவர். திரியேக தெய்வத்தில் ஒருவர். இவர் மனுவை மீட்கும்படி கன்னி மரியாள் கர்ப்பத்தில் பரிசுத்த ஆவியினால் உற்பவித்துப்பிறந்தார். மனித குழந்தையாய்ப் பிறந்து மனிதர்களைப்போல் இந்த உலகத்தில் வளர்ந்து தன்னுடைய முப்பதாவது வயதில் தன்னை வெளிப்படுத்தினார். முற்றிலுமாய் தெய்வ பணியில் இறங்கினார். மனிதனாகவே வளர்ந்தார். குழந்தையாய் இருக்கும் பொழுது அவர் தாம் தெய்வம் என்று காண்பிக்கும்படியாக அற்புதங்களையோ, அதிசயங்களையோ, அடையாளங்களையோ, பெரியக் காரியங்

கலையோ செய்யவில்லை. அவர் முழு மனிதனாய்ப் பூரணமடைந்தார். முழு தெய்வமாய் அவர் இருக்கிறார்.

2. இவர், இயேசு கிறிஸ்து ஒருவரே உலகில் உண்மையுள்ள ஜீவியம் செய்து உண்மையாய் மெய்யைப் பிரசங்கித்தவர். மெய் உபதேசத்தை உலகத்தில் போதித்து மனுமக்கள் நடக்க வேண்டிய வழியை நடந்து காண்பித்து மனிதனுக்கு மறை பொருளாயிருந்தவைகளையெல்லாம் வெளிப்படுத்தி அறிவித்தார். போதனையின்படி சாதித்து மெய் குருவாய் விளங்கினார். உலகத்தில் அநேகர் போதிக்கிறதுண்டு. போதித்த பிரகாரம் சாதிக்கிறது இல்லை. ஆனால், இயேசுவானவரோ, என்ன போதித்தாரோ அவ்விதம் ஜீவித்துக் காண்பித்தார். மனுமக்களுக்காக, கடைசியில் உயிர்த் தியாகம் செய்தார். தன் உயிரையே மனுமக்களுக்காகக் கொடுத்தார்.

3. இவர் ஒருவரே அழிவைக் காணமல் உயிரோடு எழும்பி, உயிரோடு தரிசனமானவர். அதே சரீரத்தில் அவர் உயிர்த்தெழுந்து ஆயிரக்கணக்கான பேர்களுக்குத் தரிசனமானார் [அப். 13:30-37]. இவர் ஒருவரே அழிவைக் காணதவர்.

உலகத்திலே அநேக குருக்களும், தபோவனர்களும், ஏன், தங்களைக் கடவுள்கள் என்று கூறிக் கொண்டவர்களும், மற்றவர்களால் அப்படி எண்ணப்பட்டவர்களும் அநேகர் உண்டு. ஆனால், அவர்கள் மரித்து ஒழிந்து போனார்கள். அவர்கள் சரீரம் எரிக்கப்பட்டு, அழிக்கப்பட்டு அல்லது கொலை செய்யப்பட்டு போயின. பின் அவர்கள் இல்லை. ஆனால் இயேசுவானவரோ மூன்றும் நாள் உயிரோடு எழுந்தார். ஆயிரமாயிரம் பேர் அவரைக் கண்டு களித்தனர். இது சரித்திர சம்பவம், இதற்கு நாங்கள் சாட்சி.

4. இவரை, இயேசு கிறிஸ்துவை விசுவாசித்தால், சொந்த தெய்வமாக ஏற்றுக் கொண்டால், அவருடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்தால் பாவ மன்னிப்பு கிட்டும் (அப்: 13:38). நீங்கள், உங்களுடைய மத பாரம் பரியங்கள், கொள்கைகள், தத்துவங்கள் இவைகளினால் பாவத்திலிருந்து விடுதலைப் பெற்றீர்களா? பெற முடியவில்லை. நீங்கள் எவைகளினல் பாவத்திலிருந்து விடுதலையடைய முடியாமல் தவிக்கிறீர்களோ அவைகளிலிருந்தெல்லாம் இவராலே உங்களுக்கு விடுதலையுண்டு.

மனித பிரயாசத்தினால் மனிதன் பாவத்திலிருந்து விடுதலையடைய முடியாது. தேவ கிருபையினால் அவன் விடுதலையாக முடியும். தேவ கிருபை பெற்றுக் கொண்டவர்கள் தேவனுக்குக் கீழ்ப்படிவதின் மூலமாக அவர்கள், பாவத்திலிருந்தும், பாரம்பரியத்திலிருந்தும், சாபத்திலிருந்தும் விடுதலையாக முடியும். மனிதன் தன்னுடைய முயற்சியினால், அப்பியாசங்களினால், மந்திர தந்திரத்தினால், தீய சுபாவங்களிலிருந்தும், ஆக்கினையிலிருந்தும் தப்ப முடியாது.

ஆனபடியினால், இவராலே உங்களுக்கு விடுதலையாகுமென்றும், இவர் மூலமாய் நீங்கள் நீதிமான்களாகி விடுதலையாவீர்கள் என்றார். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மனுமக்களை விடுதலையாக்கி அவர்களுக்கு நல்ல குணங்களை கொடுக்கிறார். அவர்களில் திவ்விய சுபாவங்களை உருவாக்கி, மேன்மையான காரியங்களை உலகத்தில் அவர்கள் செய்ய, நற்பணி செய்ய சமுதாயத்தில் நன்மையான காரியங்களைச் செய்ய ஊக்குவிக்கிறார். இன்று உலகத்தில் உண்டாயிருக்கிற அநேக நல்ல இயக்கங்கள், நல்ல காரியங்கள், இயேசு கிறிஸ்துவின் கிருபையினாலும், சத்திய வேதத் தூண்டுதலினாலும் உண்டானவைகளே.

ஆனபடியினால், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினலே உங்களுக்கு விடுதலையுண்டு என்று அறிவிக்கப்படுகிறது.

கிறிஸ்தவத்தினால் மாத்திரம் மனிதன் உன்னத நிலையை அடைய முடியும் என்று வேதம் காண்பிக்கிறது. மேன்மையான நிலையையும் கர்த்தர் உங்களுக்கு அருளுவார்.

ஆனபடியினால், நீங்கள் எவைகளிலிருந்து விடுதலையாக முடியாமல் தவிக்கிறீர்களோ, அவ்வகளிலிருந்து உங்களுக்கு இயேசுகிறிஸ்துவினால் விடுதலையுண்டு என்று சத்திய வேதம் அறிவிக்கிறது. இது அப்போஸ்தலனாகிய பவுலுடைய பிரசங்க சுருக்கம். நீங்களும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து அவரை ஏற்றுக் கொண்டு, அவருக்குக் கீழ்ப்படிந்தால் நீங்கள் விரும்புகிற அந்த மெய் நிலையை, விடுதலையை அந்த உன்னதமான வாழ்க்கையை, தெய்வீக சுபாவத்தை, வல்லமையை, வரங்களை இயேசுவினால் பெற்றுக் கொள்வீர்கள். ஆமென்!

"உங்கள் முன்னோர்களால் பாரம்பரியமாய் நீங்கள் அனுசரித்து வந்த வீணான நடத்தையினின்று அழிவுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியினாலும் பொன்னினாலும் மீட்கப்படாமல், குற்றமில்லாத மாசற்ற ஆட்டுக் குட்டியாகிய கிறிஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தத்தினாலே மீட்கப்பட்டீர்கள்...." 1 பேது. 1:18,19.

## சாட்சி

நான் உயிரோடிருக்கும் மட்டும் என் கர்த்தரை பாடுவேன். நான் உள்ளளவும் என் தேவனை கீர்த்தனம் பண்ணுவேன் சங். 104:33.

தேவனுக்கு மகிமை! என் பெயர் எலிசபெத்து பாக்கியம் என் சொந்த ஊர் சேலம் இராசிபுரத்திலுள்ள புதுப்பாளயம். தேவனாகிய கர்த்தர் எனக்கு அளித்த இரட்சிப்பையும், என் வாழ்வில் எனக்கு செய்த நன்மைகளையும் உங்களோடு பகிர்ந்து கொள்ள தேவன் கிருபை செய்ததற்கு ஸ்தோத்திரம்.

நான் இந்துவாக பிறந்தபடியால், இந்து முறைப்படி தெய்வங்கள் என்று சொல்லப்படும் எல்லாவற்றையும், விக்கிரகங்களையும் மிகவும் பக்தியோடு வணங்கி வந்தேன். எனக்கு 13-ஆம் வயதிலேயே திருமணம் நடந்து விட்டது. அப்போதிருந்தே என் கணவர் மிகுந்த குடிகாரராய், கஞ்சா புகைப்பவராய், எல்லாவித தீயபழக்கங்களும் உள்ளவராய் இருந்தார். எனவே வாழ்க்கை எனக்கு கவலையோடும் கண்ணீரோடும் கழிந்தது

எனக்கு 3 மகன்களும், 1 மகளும் பிறந்தனர். என் கடைசி மகன், வயிற்றிலிருக்கும் போது, எங்கள் ஊரில் உள்ள கிறிஸ்தவ தேவாலயத்திற்கு ஒரு முறை சென்று வந்தேன். அப்போதிருந்து, ஒருவர் வெண்ணுடைத் தரித்தவராய் என் வீட்டில் படுத்திருப்பது போல் அடிக்கடி சொப்பனம் வந்தது. 1 வருடம் இவ்வாறு சொப்பனம் வந்தது. அந்த ஒரு வருடம் என் வீட்டில் பிரச்சனைகள் இல்லாமல் இருந்தது. என் கணவர் குடிக்காமல் இருந்தார். எனக்கு அப்பொழுது ஆண்டவர் யார் என்றே தெரியாது. எனவே நான் எனக்கு வந்த சொப்பனத்தைக் குறித்து ஒன்றும் எண்ணவில்லை. பிறகு அப்படி சொப்பனம் வருவதில்லை. மீண்டும் என் கணவர் குடிக்க ஆரம்பித்து விட்டார். மீண்டும் என் வாழ்க்

'தேவன் ஒருவரே'

# THERE IS ONE GOD...

Regd No 040088/84
Postal Regd No MH BY NE-94/83
Tamil Monthly Magazine

கூறிவிட்டார்கள். அல்லேலூயா! கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

என் கணவரின் மகனும், மஞ்சள் காமாலை நோயிலிருந்து சுகம் கிடைக்க இயேசு சுவாமியை நோக்கி ஜெபித்தபடியால் அவனை தேவ கிருபையால் சுகம் பெற்று ஆண்டவரின் பிள்ளையாக மாறி விட்டனர். இப்போது நாங்கள் இயேசுவே மெய்யான தெய்வம் என்று அறிந்துணர்ந்து குடும்பமாய் தேவனுடைய திருச்சபையாய் ஆண்டவரை தொழுது கொண்டு வருகிறோம் கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

மெய் தேவனை அறியாமல், சந்தோஷமில்லாமல், சமாதானமில்லாமல் இருந்த எனக்கு புதிய எருசலேம் திருச்சபையின் மூலமாக ஆண்டவர் [இயேசுவானவர்] சந்தோஷத்தையும் சமாதானத்தையும், புற்று நோயிலிருந்து விடுதலையையும் கொடுத்தார் அல்லேலூயா! தொடர்ந்து நானும், என் குடும்பமும் தேவ சித்தம் செய்ய எங்களுக்காக ஜெபிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். புற்று நோயின் காரணமாக உயிர் பிழைக்க மாட்டேன் என்று டாக்டர்கள் எல்லோரும் ஒரு சமயம் கை விட்டனர். இயேசு ஆண்டவரோ, எனக்கு உயிர் கொடுத்திருக்கிறார். இதற்காக தேவனை நன்றியோடு ஸ்தோத்தரிக்கிறேன்.

இதை வாசிக்கும் நீங்களும் ஆண்டவரிடம் வந்து அவரது அன்பை, வல்லமையை ருசிக்குமாறு கேட்டுக் கொண்டு என் சாட்சியை முடிக்கிறேன்.

திருமதி. எலிசபெத்து பாக்கியம்.
கொமாரபாளையம்-கிளை/சேலம்.

"இது வெறும் மத மாற்றமல்ல
மன மாற்றமே"

"நானும் என் வீட்டாருமோவென்றால் கர்த்தரையே சேவிப்போம்"
யோசு. 24:15.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   8 [திங்கள்] மார்ச் 1993
   7 [புதன்] ஏப்ரல் 1993
   5 [வியாழன்] மே 1993
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **CHIEF PASTOR N. LAZAR**
   **"NEW JERUSALEM CHURCH"**
   **CHURCH LANE, TILAK NAGAR,**
   **DARGA ROAD, BHANDUP,**
   **BOMBAY-400 078 INDIA**
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக பெரிய எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup Bombay-400 078

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 108 - MAR. '93

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

# ஆசிரியர் உரை

தேவனுடைய மகத்துவ நாமத்திற்கு ஸ்தோத்திரம். தேவன் மனுமக்களாகிய நம்மேல் அன்பு கூர்ந்து தம்முடைய குமாரனை அனுப்பினார். அவர் வந்து "நாம் பாவங்களுக்குச் செத்து நீதிக்குப் பிழைத்திருக்கும்படி அவர் தாமே தமது சரீரத்திலே நம்முடைய பாவங்களை சிலுவையின் மேல் சுமந்தார்" [1பேது. 2:24]. அவரை, இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதினால் நம்முடைய சகல பாவகாயங்களும், சகலபாவங்களும் நீங்கி குணமாவோம், நாம் பரிசுத்தமடைவோம், தேவன் நம்மை பரிசுத்தமாக்குகிற கர்த்தர். இயேசு கிறிஸ்துவின் பாடுமரண அடக்கம் பண்ணுதல் உயிர்த்தெழுதலினால் நமக்குக் கிடைக்கும் புண்ணிய பலன்கள் அளவிடப்படாதவைகள். அதை சரியாய்க் கண்டு அனுபவிக்கிறவர்கள் பாக்கியவான்கள். ஆகையால் கிறிஸ்தவர்களாகிய நாம் சகோதரர்களாயிருக்கிறபடியினால் ஒருவருக்கொருவர் பொய் சொல்லாதிருங்கள், பொய் சொல்லுதல் அது தன்னையே வஞ்சிக்கிற, ஏமாற்றுகிற காரியமாகும் [எபே. 4:25]. பொய் என்னும் அடைக்கலத்தை கல்மழை அழித்து விடும் [ஏசா. 28:17]. பொய் சொல்லுவது, மறைப்பது, வஞ்சிப்பது பிசாசின் குணம் [யோ. 8:44]. கடவுளுடைய பெயரைச் சொல்லி, பரிசுத்தவான்களின் பெயரைச் சொல்லி யாரும் யாரையும் வஞ்சிக்கக் கூடாது. நாம் ஒருவருக்கொருவர் அவயவங்களாய் இருக்கிறபடியால் ஒருவருக்கொருவர் பொய் சொல்லாமல் பொய்யைக் களைந்து மெய்யைப் பேசக்கடவன் என்று கர்த்தர் சொல்லுகிறார். இப்படி அவர் [தேவன்] ஒளியிலிருக்கிறது போல் நாமும் ஒளியில் நடந்து கொண்டால் ஒருவரோடொருவர் ஐக்கியப்பட்டிருப்போம். அவருடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும் [1 யோ. 1:7]. பூரண நிலையை அடைவோம். மற்றப்படி ஒரு போதும் பூரண நிலையை அடைய முடியாது, திருப்தி உண்டாகாது, பலன் உண்டாகாது. தேவனோடும் மனிதனோடும் ஐக்கியமாயிருக்க முடியாது. தேவ திட்டம் நிறைவேறாது. நீ பூரணமடைய மாட்டாய்.

"அவருடைய தழும்புகளால் குணமாகிறோம்" [1 பேது. 2:24; ஏசா. 53:5.]

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

கிறிஸ்து மார்க்கம் இரண்டு வகுப்பாக வகுக்கபடும் அவையாவன:

முதலாவது நாம் விசுவாசிக்க வேண்டியது இன்னதென்றும் (Doctrines). இரண்டாவது நாம் செய்ய வேண்டியது இன்னதென்றுமாம் (Agenda precepts). நாம் விசுவாசிக்க வேண்டியது வேதத்தில் சத்தியம் [Truth] என்றும், இரகசியம் [Mystery] என்றும் சொல்லப்படும் (1 தீமோ. 6:3; தீத். 1:3).

கிறிஸ்து மார்க்கத்தில் அடங்கியிருக்கிற பிரதான உபதேசங்களாவன:

வேதத்துக்கடுத்த உபதேசம் என்னவெனில் தேவன் இருக்கிறார் என்றும் அவர் பூரண சற்குணமுள்ளவரென்றும், அவருடைய பிரமாணம் நீதியுள்ளதென்றும், மனிதர்கள் தேவனுக்குத் துரோகிகளாய், அவரை விட்டு கெட்டவர்களாய் இருக்கிறார்கள் என்றும், தாங்கள் செய்யும் புண்ணிய கிரியைகளினாலே தங்களை நீதிமானாக்க அவர்களுக்குத் திராணியில்லையென்றும், அவர்களை நீதிமானாக்கி இரட்சிக்கும்படி தேவன் தம்முடைய குமாரனை இவ்வுலகத்திற்கு அனுப்பினாரென்றும், அவருடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்து தமது நீதியினாலும், மரணத்தினாலும் அவர்களுடைய பாவங்களை நிவாரணம் செய்கிறவரென்றும், அவர்கள் அவரை விசுவாசித்துக் கொள்கிறதினாலே நீதிமான்களாக்கப்படுவார்கள் என்றும், தேவ ஆவியானவர் அவர்களுக்குள்ளே விசுவாசம் முதலான நற்குணங்களை உண்டாக்குகிறாரென்றும், மனிதருடைய இருதயம் அவராலே புத்தாக்கப்படுகிறது என்றும், அவர்கள் விசுவாசித்து மனந்திரும்பி, பரிசுத்தமாக்கப்படாவிட்டால் மோட்சத்தை அடைய மாட்டார்கள் என்றும், கடைசியிலே மரித்தோரெல்லாரும் உயிரோடு எழுப்பப்பட்டு நித்திய ஜீவனையாவது நித்திய அக்கினையயாவது அடைவார்கள் என்றும், தம்முடைய ராஜ்யம் தெய்வீகத் தன்மையுள்ளது என்றும் கிறிஸ்து நாதர் திரும்ப வரப்போகிறாரென்றும் போதித்து வந்ததுமன்றி அவருடைய அப்போஸ்தலர்களும் பிரதானமாக போதித்து வந்தார்கள். இவைகளைக் குறித்துச் சொல்லுகின்ற வாக்கியங்கள் அநேகமாயிருக்கின்றன. சுவிசேஷம் அவைகளால் நிறைந்திருக்கின்றன.

கிறிஸ்துமார்க்கத்தின் சாரம் மூன்று வேதவாக்கியங்களில் அடங்கியிருக்கிறது அதாவது:

1. யோவான் 3:16 தேவன், தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு அவரைத் தந்தருளி இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார் என்பதும்,

2. மாற்கு 12:30,31– உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழு மனதோடும், உன் முழு பெலத்தோடும் அன்பு கூருவாயாக என்பதே பிரதான கற்பனை. இதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்னவென்றால் உன்னிடத்தில் நீ அன்பு கூருவதுபோல் பிறனிடத்திலும் அன்பு கூருவாயாக என்பதே. இவைகளிலும் பெரிய கற்பனை வேறென்றும் இல்லை என்பதும்.

3. லூக்கா 6:31 மனுஷர் உங்களுக்கு எப்படிச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறீர்களோ, அப்படியே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள் என்றும் சற்குருவாகிய இயேசு கிறிஸ்து நாதர் போதித்ததே கிறிஸ்தவத்தின் சுருக்கமாகும்.

இந்த மார்க்கத்தின் சில காரியங்கள்

மனிதனுடைய புத்திக்கு எட்டாதவைக ளாய் இருந்தாலும், மற்ற மார்க்கங்களில் இருக்கிறபடி புத்திக்கும் நல்லொழுக்கத் துக்கும் விரோதமானது ஒன்றுமில்லை. கிறிஸ்து மத வேதமானது தேவ ஆவியின் உதவியினாலே பரிசுத்தவான்களால் எழுதப் பட்டது என்று தோன்றுகிறது. பொல்லா தவர்கள் தங்கள் சொந்த பொல்லாப்பைக் கண்டிக்கும் பிரமாணங்களை எழுதமாட் டார்கள், நல்லவர்கள் மற்றவர்களை வஞ் சிக்கவும் மாட்டார்கள்.

கிறிஸ்து மார்க்கம் பாவத்திற்கு எவ்வ ளவேனும் இடங்கொடாமல் பரிசுத்தத் தையே கற்பிக்கிறது. அதின் உபதேசங் கள் பரிசுத்தமுள்ளவைகளானபடியால் அவைகள் தேவ அருள் பெற்ற பரிசுத்த வான்களால் எழுதப்பட்டிருக்க வேண்டும். தேவ அருளினால் பரிசுத்தவான்கள் இந்த வேதத்தை எழுதியிருக்கிறதினாலே இந்த வேதம் தேவனால் அளிக்கப்பட்டதாக இருக்க வேண்டும் தேவனால் அளிக்கப் பட்டது சத்தியமாய் இருக்க வேண்டும். சத்தியம் ஒன்றேயொழிய பலவல்ல. கிறிஸ்து மார்க்கம் ஒன்றே சத்தியம் என்று காண்பிக்கும் பல திருஷ்டாந்தங்களை உதாரணங்களை நாம் பார்ப்போம்.

மிருக ஜீவன்கள் தின்று குடித்து சுக மாய் படுத்து அதிலே திருப்தியடைகின் றன. ஆனால் மனிதர் எவ்வளவு சந்தோ ஷத்தை அனுபவித்த போதிலும் எவ்வ ளவு கனமாகவும், பெருமையாகவும் வாழ்ந்த போதிலும் அவர்களுக்குத் திருப்தி கிடையாது. அவர்கள் எவ்வளவு அவி விவேகிகளாயினும், கொஞ்சமேனும் ஆத் தும விசாரமுள்ளவர்களாய் சரீர இச்சைக ளுக்கு மேற்பட்ட ஆலோசனைகள் செய்து சமாதானம் அடைய வேண்டுமென்று பிர யாசப்படுகிறார்கள். இவ்வித ஆத்தும விசாரணை உண்டாகிறதற்கு இரண்டு கார ணங்களுண்டு.

1. முதலாவது, மனிதர்கள் எல்லாரும் பிரகிருதி காரியங்களினால் மனச்சாட்சி தெரிவிக்கும் சாட்சிகளினாலும் தேவன் உண்டென்று ஆலோசனை செய்து தெரிந்துக் கொள்வது. மனிதன் இவ்விதம் ஆலோசித்து கவலையற்றவர்களாயிருக்கி றார்கள். ஆனால் தாங்கள் தேவனுடைய அதிகாரத்துக்குள்ளாகி, அவர் விதித்த விதிப்படி நடக்க கடமைப்பட்டிருக்கிறார் கள் என்று நிச்சயித்து அந்த தேவனு டைய தயவை சம்பாதித்துக் கொள்ள அநேக விதமாய் பிரயத்தனம் பண்ணிக் கொண்டிருக்குறார்கள்.

2. இரண்டாவது மனிதர்கள் எல்லா ரும் மனச்சாட்சியைக் கொண்டு தாங்கள் நீதி முறை தவறி பாவத்தைச் செய்தவர் கள் என்று கண்டறிந்து மனிதர் பாவத் தைக் குறித்து பலவாறாய் வாதிக்கிறார்கள். ஆனாலும், பாவமில்லை என்று யாரும் சொல்ல முடியாது. எல்லாரும் அனுபவிக் கிற பாவத்தைச் செய்கிறவர்களாய் இருக் கிறவர்களாதலால் சகல ஜனங்களும் தங் கள் பாவ நிலையைக் கண்டறிந்து அதைக் குறித்து ஆலோசிக்கிறார்கள்.

இவ்வாறு சிந்திப்பதால் தன் பாவத் தால் தங்களுக்கும் தேவனுக்கும் ஏதோ ஒரு விகற்பம் இருக்கிறதாகவும் அவ்வி கற்பம் தோன்றினதால் தேவன் தயை கூராமல் தங்கள் மேல் கோபமுடையவ ராய் இருக்கிறதாகவும், சகல ஜனங்களும் சாதாரணமாய் நிச்சயிக்கிறார்கள். இக்கார ணத்தினால் மனிதர் சந்தேக சாகரத்தில் அமிழ்ந்து தேவனுடைய இலட்சணங்க ளைத் தெரிந்து கொள்ளும் விதம் எப்படி என்றும், தங்களுக்கும் தேவனுக்கும் இடையே குறுக்கிட்ட பாவத்தை நீக்கி, தேவ தயவை எப்படி சம்பாதித்துக் கொள் ளலாமென்றும் தட்டுக் கெட்டு தடுமாறி போராடுகிறார்கள். இவ்வகை போராட் டங்களினால் பல வித மதக்கோட்பாடு களும் சகல விதமான மத ஆச்சாரங்க ளும் தோன்றி இருக்கின்றன.

எல்லா மதங்களும் தேவன் இருக்கிறா ரென்றும், பாவம் இருக்கிறது என்றும்

ஒத்துக்கொள்கின்றன. இந்த தாற்பரியமில்லாத மதங்கள் அநேகமாக கிடையாது. ஒரு சில மதம் இருக்கலாம், சகல மார்க்கங்களும் இப்படி ஏதோ ஒரு காரணத்தினால் தோன்றினவைகளாய் இருக்கிறதினால் அவைகளில் அநேக பேதங்கள் உள்ளதென்று நாம் காண்கிறோம். அவரவர் மதம் அவரவருக்கு சிரேஷ்டம் என்ற பழமொழியை சாதாரணமாக சொல்லிக் கொண்ட போதிலும் நாம் எவ்வளவாது விசாரணை செய்யாமல் மனிதர் தங்களுக்கென்று ஏற்படுத்திக் கொண்ட மதங்களை நாம் ஏற்றுக் கொள்ளக் கூடாது. அவிழ்தம் என்றெண்ணி நஞ்சுண்ட கதையாகி விடும்.

தேவனைக் குறித்து எத்தனையோ விகற்பமாக எண்ணுகிறார்கள். தேவன் ஒருவர் இருக்கிறார் என்போர் சிலர், முப்பது முக்கோடி தேவர்கள் உண்டு என்போர் சிலர், தேவன் களங்கமற்றவரும் சகல பாவங்களையும் அருவருக்கிறவர் என்று சொல்லுவோர் சிலர், தேவர்கள் பாவம், குரோதம், லோகம், மோகம், மதம், பகை முதலியவற்றினால் கீழ்ப்பட்டு அல்லது உள்ளாகி மனிதரைப்போலவே அநேக பாவக் காரியங்களை செய்தவர் என்று சாதிப்பவர் பலர். தேவன் பூரண சற்குணர் என்று கூறுவோர் சிலர். அவர் முழுவதும் நிர்குணர் என சொல்வோர் சிலர். மனிதர் இவ்விதம் ஒன்றுக்கொன்று விரோதமாக அபிப்பிராயங்களை பின்பற்றி அவரவர் தாற்பரியப்படி நடந்து கொள்ளுகிறார்கள்.

அல்லாமலும் தேவனைக் குறித்து மாத்திரமேயன்றி தம்மைக் குறித்தும் மனிதர் நாலாவித அபிப்பிராயமுடையவர்களாய் இருக்கிறார்கள். நாம் சுயாதீனமுடையவர்களாய் பாவபுண்ணியங்களை அறிந்து நமது சொந்த சித்தப்படி நடக்கிறவர்களா? அல்லது சுயாதீன எதுவுமில்லாது எந்திரங்களுக்கொப்பானவர்களாய் தேவாதீனத்தினால் சமஸ்த காரியங்களையும் நிறைவேற்றுகிறோமா? நமக்கு சம்பவிக்கிற கருமம் நமது பிரயத்தனத்தினால் உண்டானதோ அல்லது நமது பிரயத்தனமில்லாமல் துரதிருஷ்டத்தினால் விளைந்ததோ அல்லது பிராதிப்ததோ என்னும் இவ்வகை விஷயங்களைக் குறித்து மனிதர் பலவித தாற்பரியங்களை உடையவர்களாய் இருக்கிறார்கள். தேவனுடைய சுபாவத்தைக் குறித்தும் மனிதனுடைய சுபாவத்தைக் குறித்தும்.

இவ்வளவு வெவ்வேறு அபிப்பிராயங்கள் இருக்கிறபடியினால் மனிதர் மோட்ச வழியைக் குறித்து ஏராளமான நானாவித கோட்பாடுகளை கற்பனை பண்ணிக் கொண்டு இருக்கிறார்கள் என்பதற்கு சந்தேகமில்லை. மனிதர் தழுவியிருக்கும் சமயங்களில் இவ்வளவு வித்தியாசமிருக்கின்றபடியால் நாம் சகல மத கோட்பாடுகளை ஜாக்கிரதையாய் பரிசோதித்து அவற்றிலுள்ள சத்தியா சத்தியங்களை பகுத்தறிய வேண்டியது அவசியம்.

(தொடரும்).

"பொய்யான மாயையைப்பற்றிக் கொள்கிறவர்கள் தங்களுக்கு வரும் கிருபையை போக்கடிக்கிறார்கள்."

யோனா 2:8.

**பரிசுத்தவிவாகம்**

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro ஜெயக் குமார் | Sis. எஸ்தர் | குமாரபாளையம் | 20-1-1993 |

# சத்திய வேதம் (தொடர்ச்சி)

## வேதம்.

வேதம் என்பதற்கு அறிவு என்று அர்த்தமாம். தேவனுடைய சித்தத்தையும் மனிதர் அவருக்குச் செய்ய வேண்டிய கடமைகளையும், வெளிப்படுத்துவதே வேதம் என்று சொல்லப்படும்.

வேதமானது இயல் வேதம் (Natural religion) என்றும், அருள் வேதம் (Revelation) என்றும், இரு வகைப்படும். இயல் வேதமானது ஒலி வேதம் என்றும், அருள் வேதமானது வரி வேதம் என்றும், செயற்கை வேதம் என்றும் சொல்லப்படுகிறதுண்டு.

மனம், புத்தி, சித்தமுள்ள மனிதன் இவ்வுலகத்தில் தகுந்த பிரமாணங்களினால் நடத்தப்படுகிறது அவர்களுடைய வாழ்வுக்கு நன்மையும், அவசியமாக வேண்டியதுமாயிருக்கிறது. மனிதர்களை பிரமாணங்களினால் ஆளுவது நீதியானால் கடவுளும் தாம் படைத்த சிருஷ்டிகளை தகுதியான பிரமாணங்களினால் ஆண்டு நடத்துவது நீதியானபடியால் மனிதர்களுக்கு நீதிநெறியாகிய வேதத்தை கொடுத்திருக்கிறார்.

1. இயல் வேதம்:

மனிதருடைய அறிவினால் நன்மை தீமை அறியத்தக்க பிரமாணமே இயல் வேதமாம். மனிதன் உண்டாக்கப்பட்டபோதே தேவன் அவனுக்குக் கொடுத்த நல்லறிவு இயல் வேதத்துக்கு மூலமாக இருக்கிறது. இதனால், தேவனைக் குறித்தும் நன்மை தீமைக் குறித்தும் இம்மை, மறுமைக்கடுத்த இன்ப துன்பங்களைக் குறித்தும் சிலவற்றை மனிதன் அறிந்து கொள்ள மனிதனின் அகத்திலும் புறத்திலும் பல ஏதுவிருந்தது. மனதில் தேவனால் போதிக்கப்பட்ட உணர்வே அகப்பிரமாணம் எனப்படும்.

நியாயப்பிரமாணமில்லாத புறஜாதிகள் சுபாவமாய் நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறபோது நியாயப்பிரமாணமில்லாத அவர்கள் தங்களுக்குத் தாங்களே நியாயப்பிரமாணமாய் இருக்கிறார்கள். அவர்களுடைய மனச்சாட்சியுங்கூட சாட்சியிடுகிறதினால், குற்றமுண்டு குற்றமில்லை என்று அவர்களுடைய சிந்தனைகள் ஒன்றையொன்று தீர்க்கிறதினால், நியாயப்பிரமாணத்துக்கேற்ற கிரியை தங்கள் இருதயங்களில் எழுதியிருக்கிறதென்று காண்பிக்கிறார்கள் (ரோ. 2:14,15).

பஞ்சஇந்திரியங்களினால் அறிவதே புறத்துப்பிரமாணம் எனப்படும். தேவனுடைய காணப்படாதவைகளாகிய அவருடைய நித்திய வல்லமை, தேவத்துவம் என்பவைகள் உலகமுண்டானது முதற்கொண்டு தெளிவாய்க் காணப்படும். ஆதலால் அவர்கள் போக்குச் சொல்ல இடமில்லை ரோ. 1:20; யோபு. 12:7-9). இந்த இயல் வேதத்தினாலே மனிதன், தேவனை ஆராதிக்கிறதற்கு போதிக்கப்படுகிறான். மனிதன் பாவஞ்செய்வதற்கு முன்னமே இந்த வேதமே அவனுடைய விசுவாசம், நடக்கை முதலியவற்றிற்குப் பூரணப்பிரமாணமாக இருந்தது. பாவத்தினால் மனிதன் பிரமாண விரோதியாகி மனச்சாட்சிக்கு அடங்கி நடக்காமல், சிருஷ்டிப்பின் ஆகமத்தைக் கண்டும் மனக் குருடுள்ளவனாய், நன்மையைக் குறித்துக் கவலையில்லாமல் சுய இஷ்டப்படி நடக்கிறவனாய் இருக்கிறான்.

இதனால் அவனவன் தன் தன் தோற்றத்தின்படி ஒவ்வொரு மார்க்கத்தையுண்டுபண்ணி, மதத்தை உண்டுபண்ணி ஒன்றை பலவாக்கி அவர்கள் தேவனை அறிந்தும், அவரை தேவனென்று மகிமைப்படுத்தாமலும், ஸ்தோத்தரியாமலுமிருந்து தங்கள் சிந்தனைகளினாலே வீணரானார்கள். உணர்வில்லாத அவர்களுடைய இருதயம்

இருளடைந்தது. அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லியும் பைத்தியக்காரராகி, அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனுஷர்கள், பறவைகள், ஊரும் பிராணிகளாகிய இவைகளுடைய ரூபங்களுக்கு ஒப்பாக மாற்றினார்கள் (ரோ. 1:21-23 .

2. அருள் வேதம்:

மனிதனுடைய அறிவானது இயல்பாய் அறிந்து கொள்ளக் கூடாத காரியங்கள், நேராயாவது மற்றோர் மூலமாயாவது, திவ்வியமான அற்புதங்களால் உண்மை என்று விளக்கும் படிக்கு தேவனால் நமக்கு அறிவிக்கப்படுகிறதே அருள் வேதமாம்.

A divine revelation is discovery of some proposition to the mind which can not by the usual exercise of its faculties but, by some miracles, divine interpretation and attestation either mediate or immediate.

-Dodrich

பாலகருக்குத் தாயானவள் ஒலி வடிவாய் போதிக்கிறது போல, தேவன் ஆதி மனிதர்களுக்கு அருள் வேதத்துக்கு ஆதாரமாகிய உலக இரட்சகரைக் குறித்த வாக்குத்தத்தத்தை ஒலி வடிவாய் முதலாவது அறிவித்தார் [ஆதி. 3:15]. பின்பு உபாத்தியாயர்கள் வாலிப சிஷ்யர்களுக்கு ஒலி வடிவாயும், வரிவடிவாயும் போதிக்கிறது போல தேவன் முற்பிதாக்களுக்கு பற்பல காலங்களில் காட்சியாகி ஒலிவடிவாயும் வரிவடிவாயும் போதித்தார் [எபி. 1:1]. பலமுகாந்தரமாய் தூரத்தில் பிரிந்திருக்கிற விவரமறிந்த பிள்ளைக்கு, தகப்பன் தன் சித்தத்தை அறிவிக்க கடிதம் அனுப்புவதுபோல, தேவன் பூமியிலே தாம் சிருஷ்டித்த தம்முடைய புத்திரராகிய மனிதர்களுக்கு தமது பூரண சித்தத்தை வரி வேதத்தினால் அறிவித்திருக்கிறார் [2 தீமோ. 4:16,17].

ஆதியிலே மனிதனுடைய உள்ளத்திலே பதித்திருந்த இயல் வேதத்துக்கும், இப்பொழுது சத்திய வேதாகமத்தில் அடங்கியிருக்கிற அருள் வேதத்துக்கும் மாறாத தேவனுடைய திருவுளமே மூலமானபடியால் அவைகளில் எந்த வித்தியாசமோ, விகற்பமோ இராது. இப்படியிருக்க, மனதிற்கு அறிவாகிய ஒளி மனிதனுக்கு கொஞ்சமாய் இருக்கிறபடியாலும், அதற்கு இயற்கை பலம் இல்லாமற்போனாலும், செயற்கை பலமுடைய திராணி இருக்கிறபடியாலும், அருள் வேதம் இன்னும் எல்லாருக்கும் இன்னும் பூரணமாய் பிரசித்திப்படாமலிருந்தும், அதின் மூலகங்களின் சத்தம் பரம்பரையாய் எல்லாருக்கும் எட்டியிருக்கிறது [ரோ. 10:18]. உலகத்தில் அறிவாளர்கள் என்று சொல்லப்படுபவர்கள் பல பல விகற்பமான வேதங்களையும், மார்க்கங்களையும் உண்டு பண்ணியிருக்கிறார்கள்.

உலகத்தில் இப்பொழுது 5 வகையான பிரதான வேதங்களுண்டு. அவையாவன:

1] கிறிஸ்தவர்கள் கைக்கொண்டிருக்கிற சத்திய வேதமும்,

2] முகமது மார்க்கத்தார் கைக்கொண்டிருக்கிற வேதமும்,

3] பாரஸ்காரர்கள் கைக்கொண்டிருக்கிற வேதமும்,

4] இந்துக்கள் கைக்கொண்டிருக்கிற வேதங்களும்,

5] சீனர் முதலிய பௌத்தர்கள் கைக்கொண்டிருக்கிற வேதமுமே

இவ்வைந்து வேதங்களின் கோட்பாடுகளும் ஒன்றையொன்று விரோதிக்கிறது. ஒவ்வொன்றுக்கு சித்தவிகற்பம் காரணமல்லவோ? இயல்பில்லாத விரோதப் பிர

மாணங்கள் மாறாத சத்தியமுள்ள கடவுளின் சித்தமாய் இருக்கமாட்டாது.

கடவுளோன் ஒருவனுண்டே,
வேதமொன்றே என்பதினாலே இவ்வைந்து வேதங்களில் ஒன்றேயொன்றுதான் சந்தேகமற சத்திய வேதமாக இருக்க வேண்டும்.

ஒவ்வொரு மதஸ்தரும், தங்களுடைய கொள்கையை மெய்யானது என்றே அவர்களுடைய மதங்கள் அவர்களுக்கு தகுதியானது என்றே அல்லது, அவர்களுடைய வேதமே சரியானது என்றே சாதிக்கலாம். ஆயினும் அப்படி எளிதாய் சாதிப்பதற்கும், சாதிப்பதை திருஷ்டாந்தப்படுத்துகிறதற்கும், நிறைய வித்தியாசங்களுண்டு. பொய் எப்பொழுதும் வேற்றுமையுடையதாய் பரிமளிக்கும். கொஞ்சம் சத்தியத்தை அதோடு சேர்த்துக் கொள்ளும்.

தேவன் சத்தியத்தை மனதுக்கும், மனதை சத்தியத்துக்கும் காரியங்கள் ஒவ்வொன்றிற்கும் இயல்பாய் சம்மந்தப்பட்டிருக்கும்படி படைத்திருக்கிறபடியால் சத்தியம் எளிதாய் விளங்குமேயொழிய பொய் வேதங்கள் எளிதாய் விளங்காது. வெள்ளிப்பணம் இருக்கும் போது, ஈயப்பணத்தையும் செய்து கலப்பாய் நடைமுறையில் விடுவது துஷ்ட மனிதர்களின் பழக்கம். அதின்படியே பல பொய் வேதங்களும் உண்டாக்கப் பட்டிருக்கிறது.

வெள்ளிப்பணத்தையும், ஈயப்பணத்தையும் பரீட்சையினால் அறிந்து கொள்வதுபோல, வேதங்களின் தன்மையும் மனமாகிய கல்லிலே உரைக்கிறதினால் தெளிவாய் அறிந்து கொள்ளலாம். பொன்னெல்லாம் அணியானாலும் அணியெல்லாம் பொன்னாக இருக்காது. இதை கண்ணுள்ளோர் கண்டு மனமுள்ளோர் அறிந்து கொள்வார்கள்.

சத்திய வேதத்துக்கும், பொய் வேதங்களுக்கும் இருக்கிற வித்தியாசம் என்ன?

சத்திய வேதம் சில விசேஷித்த விதமான இலட்சணங்களை உடையதாக இருக்க வேண்டும். அவையாவன:

1] அது சத்தியமானதை மாத்திரம் அறிவிக்க வேண்டும்.

2] அது மனிதனுடைய புத்தியிலே தோன்ற மாட்டாத பரம இரகசியங்களை அறிவிக்க வேண்டும். அவை புத்திக்கெட்டாததாக இருந்தாலும் அது புத்திக்கு விரோதமாக இருக்க கூடாது.

3] அது மனதை எவ்விதத்தினாலும் நம்முடைய மனதை மெய்யான தேவனிடத்திற்கு வழி நடத்த வேண்டும்.

4] அறிவின் மேலுள்ள பேராசைக்குத் திருப்தி செய்யத்தக்க விசயங்களை அது நமது மனதுக்கு போதிக்க வேண்டும்.

5] அது விசேஷமாய் தேவனிடத்தில் அன்பு கூரும்படிக்கும், அக்கிரமங்கள் யாவையும் வெறுத்துவிடும் படிக்கும் பரிசுத்த பிரமாணங்களை போதிக்க வேண்டும்.

6] அதிலுள்ள வாக்கியங்கள் ஒன்றுக்கொன்று விரோதமாயிராமல் இசைவுள்ளவைகளாய் அமைந்திருக்க வேண்டும்.

7] மனிதனுடைய கெட்ட குணங்களை மாற்றுகிறதற்கும், மனதை நிச்சயமான சந்தோஷத்தினாலும், சமாதானத்தினாலும் நிரப்புகிறதற்கும், பூரணமாய் தேவனுடைய கற்பனைகளுக்குக் கீழ்ப்படியப்பண்ணுகிறதற்கும் ஏதுவான உபதேசங்களை அது போதிக்க வேண்டும்.

8] மனிதனுடைய புத்தியினால் அறியப்படாத நடக்கைகளை போதிக்க வேண்டும்.

இந்த இலட்சணங்களுள்ள வேதமே மெய்யான வேதமாம். கிறிஸ்து சமய வேதத்திற்கு இவ்வெட்டு இலட்சணங்க

னும் உண்டோ இல்லையோ என்று இப்பொழுது பார்ப்போம்.

[தொடரும்.]

> "எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்து நலமானதைப் பிடித்துக் கொள்ளுங்கள்"
> 1 தெச. 5:21

# வேத பாடம்

(தொடர்ச்சி)

## எண்ணாகமம்

### ஆசாரியன் ஜீவிக்க வேண்டிய மாதிரி:

**7. விதவையையோ, தள்ளப்பட்டவளையோ விவாகம் பண்ணலாகாது எசே.44:22**

ஸ்திரீ புருஷ விவாக ஐக்கியமானது மிகவும் நெருங்கிய ஐக்கியத்தைக் காண்பிக்கிறது. ஆசாரியன் என்பவன் தேவனுக்கு பதிலாக பூமியிலே ஸ்தானாதிபதியாய் இருக்கிறான் [2 கொரி. 5:20]. மனிதனுடைய கண்கள் எப்பொழுதும் ஆசாரியனையே பார்த்துக் கொண்டிருக்கும். அவன் மற்ற மனிதர்களின் மத்தியில் கனத்துக்குரியவனாக விளங்க வேண்டும். ஒரு விதவையையோ அல்லது தள்ளப்பட்டவளையோ விவாகம் பண்ணும் போது ஆசாரியனுடைய கனத்தை மற்றவர் அற்பமாய் நினைக்க ஏதுவாகும். நான் கர்த்தருடைய ஊழியன் என்ற இடத்தைத் தள்ளி விட்டு தன்னை சாதாரண மனிதனிலும் குறைந்தவன் என்பதை ருபகாரம் பண்ணுவதுபோல கற்புக்குலைந்தவளையோ தள்ளப்பட்டவளையோ விதவையானவளையோ அவன் விவாகம் பண்ணக் கூடாது. கர்த்தருடைய ஊழியத்தை கனவீனப்படுத்தக் கூடாது. ஆகையால், ஊழியன் என்பவன் தனது விவாகத்திலும் கர்த்தருடைய ஊழியத்தின் மேன்மையை விளங்கப்பண்ண வேண்டும்.

மனிதன் சுயாதீனனாக இருக்கிறான். பூலோக வாழ்க்கையில் தனது சுயாதீனத்தை நிலை நாட்டலாம். ஆனால் கர்த்தரின் ஊழியனோ கனமான ஊழியத்தின் மேன்மைக்காக அழைக்கப்பட்டவன். அவன் கட்டுக்கடங்கினவனாகவே இருக்க வேண்டும். குறைவாய், குற்றமாய், அற்பமாய் மற்றவர்கள் எண்ணக்கூடிய எல்லாவற்றையும் அவன் வெறுத்து ஜீவிக்க வேண்டும். இந்த ஊழியம் குற்றப்படாதபடிக்கு நாங்கள் யாதொன்றிலும் இடறல் உண்டாக்காமல், எவ்விதத்தினாலேயும், எங்களை தேவ ஊழியக்காரராக விளங்கப்பண்ணுகிறோம் என்கிறார் பவுல் [2 கொரி. 6:3,10].

ஆகவே. ஊழியன், விதவையையோ, கற்புக்குலைந்தவளையோ, தள்ளப்பட்டவளையோ விவாகம் பண்ணலாகாது. இரண்டு, மூன்று மனைவிகளையுடையவனாயும் இருக்கக் கூடாது. மனைவியைத் தள்ளிவிட்டு வேறொரு ஸ்திரீயை விவாகம் பண்ணுகிறவனாக இருக்கக் கூடாது. இப்படிப்பட்டவர்கள் தங்களுடைய தகுதியை இழந்து விடுகிறார்கள். அவர்களுடைய சாட்சி கெட்டுப் போகும். ஒருவனுடைய சாட்சி கெட்டுப் போகுமென்றால் அவனை ஊழியக்காரனாக யாரும் எண்ணமாட்டார்கள். கனமான, தேவனுடைய வார்த்தையை, ராஜாவினுடைய வார்த்தையை சுமந்து செல்கிறவன் ஜீவியத்திலும், பிறருடைய கண்களிலும் ஊழியத்திலும், தோற்றத்திலும் கனமுள்ளவனாய் இருக்க வேண்டும் என்பதே.

## ஆசாரியர்கள் லேவியர்களுடைய வேலைகள்.

### ஆரோன், ஆரோன் குடும்பத்தாரின் வேலை.

1. ஆரோனும், அவன் குமாரரும், தங்களுக்கு உடன் ஊழியர்களாக கொடுக்கப்பட்ட கோகாத்தியர், கெர்சோனியர், மெராரியர் போன்றவர்கள் அந்தந்த வேளைகளில் செய்ய வேண்டிய வேலைகளைச் செய்ய கற்பித்து அவர்களை நடத்தவேண்டும்.

2. பலி மிருகங்களைக் கொன்று, இரத்தத்தை பலிபீடத்தில் தெளிக்க வேண்டும்.

3. குத்து விளக்கை ஏற்றி, கருந்திரியை அகற்ற வேண்டும் [லேவி. 24:1-4].

4. பாளயம் புறப்படும்போது பரிசுத்த பணிமுட்டுகளை மூடிக்கட்ட வேண்டும்.

5. பரிசுத்த பணிமுட்டுகளை விளக்கி, மேசையில் அப்பம் வைப்பதும், அவைகளை மாற்றுவதும், தூபம் போடுவதும் பலி ஆராதனைகள் நடத்துவதும்.

6. பாளயம் புறப்படும்போது எக்காளங்களை ஊதுவதும் [எண். 10:2-8].

7. தேவ ஜனத்துக்கு போதிப்பதும், அவர்களை ஆசீர்வதிப்பதும் ஆசாரியருடைய வேலையாகும் [எண். 6:22-28; லேவி. 10:8-11].

ஆரோனுடைய குடும்பம் செய்யும் ஆசாரிய ஊழியம் சபையின் பக்திவிருத்திக்காக அப்போஸ்தலர்கள் செய்யும் ஊழியத்திற்கு சமமாக இருக்கிறது. அப்போஸ்தலர்களும், சபையை நடத்துகிற மேய்ப்பர்களும் இந்தப் பணிவிடைகளைச் செய்ய நியமிக்கப்பட்டுள்ளார்கள்.

### 1. கெர்சோனியரின் வேலை (எண். 3:24-26; 7:7-9; 4:22-28).

வாசஸ்தலம், கூடாரமூடி, தொங்குதிரை, தகசுத்தோல் மூடி, கூடார வாசல் மறைவு, பிராகார தொங்குதிரை, பிரகார வாசல் மூடுதிரை, கயிறு, இவைகள் இவர்களுடைய பொறுப்பில் இருந்தது. இவற்றை கெர்சோனியர் காப்பதோடு, யாத்திரை புறப்படும்போது சுமக்கவும் வேண்டும். இதற்காக இவர்களுக்கு இரண்டு வண்டிகளும் நான்கு காளைகளும் கொடுக்கப்பட்டிருந்தன. இது தீர்க்கதரிசியின் ஊழியத்தைக் காட்டுகிறது. தூண்கள் நாட்டப்பட்ட பின்பு தான் திரைகளை மாட்டித் தொங்க விட வேண்டும். இது சபையை உறுதிபட்டுத்துதற்கும், தீர்க்கதரிசனம் சொல்லி சபையை உறுதிப்படுத்துவதே அவனது வேலை. சபையின் கட்டுப்பணிக்காக உபதேசங்களை போதித்து ஸ்திரப்படுத்துவதும் தீர்க்கதரிசிகளின் வேலை.

### 2. மெராரியர் வேலை (எண். 3:33-37; 4:29-32,7;8).

வாசஸ்தலத்தின் பலகைகள், தாழ்ப்பாள்கள், தூண்கள், பாதங்கள், மூளைகள், சுற்று பிராகாரத்தின் தூண்கள், பாதங்கள், கயிறுகள் இவற்றை காவல் காப்பதோடு யாத்திரை புறப்படும் போது சுமந்து கொண்டு போகவேண்டும். இதற்காக நான்கு வண்டிகளும், எட்டு மாடுகளும்

அவர்களுக்கு கொடுக்கப்பட்டிருந்தன. மெராரியின் வேலை சுவிசேஷகனுடைய ஊழியத்தைக் காட்டுகிறது. முதலாவது, சுவிசேஷத்தை அறிவித்து பாவிகளை பாவமன்னிப்புக்குக் கொண்டு வந்து, ஞானஸ்நானம் கொடுக்குமளவு அவர்களை வழி நடத்துவது சுவிசேஷகனுடைய வேலை. சமாரியாவில் பிலிப்பு சென்று சுவிசேஷத்தை அறிவித்து ஞானஸ்நானம் கொடுக்கிறார். சுவிசேஷகனுடைய வேலை கூடாரமடிக்க, முதலாவது பாதம், தூண் இவற்றை நாட்ட வேண்டும். பின்பு மற்ற வேலைகள் நடத்தப்பட்டு கூடாரமாகிறது. சபையின் பரிபூரணமும் இவ்வாறே சுவிசேஷகனுடைய ஊழியமே முதல் வேலை, மெராரியின் ஊழியம் சுவிசேஷகனுடைய ஊழியத்திற்கு ஒப்பானது.

3. *கோகாத்தியர் வேலை (எண். 3:31; 4:5-15; 7:9).*

பெட்டி, மேசை, குத்துவிளக்கு, தூபபீடம் தொட்டி இவற்றிற்குரிய பணிமுட்டுகள் பலிபீடம் இவற்றைக் காக்க வேண்டும். யாத்திரை புறப்படும்போது ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்கள் இவற்றைத் துப்பட்டியால் சுற்றி தகசுதோல் மூடியினால் மூடி கட்டி வைக்க வேண்டும். கோகாத்தியர் இவற்றைத் தொடலாகாது. தொடவோ, இளதச்சுற்றிக்கட்டப்படும்போது பார்க்கவோ கூடாது. தோளின் மேல் சுமந்துக் கொண்டு செல்வதே இவர்கள் வேலை. கோத்தியரின் வேலை போதகன் அல்லது மேய்ப்பனுடைய வேலையைக் காட்டுகிறது. சபையில் பல நிலையிலும் ஆத்துமாக்கள் உண்டு. இவர்களையெல்லாம், போதகர்களாகிய கோகாத்தியர் விலைபெற்ற பொருட்களை சுமப்பது போல் சுமக்க வேண்டும். ஆத்துமாக்கள் விலையேறபெற்றவர்கள். போதகர்கள் அவர்களை தாங்கி நடத்தாவிட்டால் யாவரும் சிதறப்பட்டுப் போவார்கள். மந்தையை கைவிடுகிற மேய்ப்பனுக்கு ஐயோ! (சக. 11:17). ஆதலால், மேய்ப்பன் மந்தையை ஞானமாய் மேய்த்து நடத்த வேண்டும். ஆடுகளின் நிலைமையை அறிந்து நடத்த வேண்டும் (நீதி. 27:23). அவனே சபையைப் பாதுகாத்து ஊழியத்தைப் பூரணப்படுத்துகிறவன். இது கோகாத்தியர்களாகிய மேய்ப்பர்களுடைய வேலையாகும்.

நிற்க, புதிய ஏற்பாட்டின் 5 வகை ஊழியங்களும் ஒருவனுக்குள்ளும் இருக்கலாம் அவனே அப்போஸ்தலன். அப்போஸ்தலன், சுவிசேஷகனுடைய வேலையையும் தீர்க்கதரிசியினுடைய வேலையையும், போதகனுடைய வேலையையும் செய்யவும் முடியும். அதே வேளையில் அவன் அப்போஸ்தலனே. போதகன் தீர்க்கதரிசியாகவும், சுவிசேஷகனாகவும் இருக்கலாம். தீர்க்கதரிசி போதகனாகவும், சுவிசேஷகனாகவும் இருக்கலாம். சிலரோ சுவிசேஷகராக மாத்திரம் இருப்பார்கள். சிலர் போதகர்களாயும், சிலர் தீர்க்கதரிசிகளாயும், சிலர் உதவிக்காரர்களாயும் இருப்பார்கள். அந்தந்த ஊழியத்திற்குரிய கிருபை மாத்திரம் அவர்களுக்கு இருக்கலாம். அப்படிப்பட்டவர்கள் தாங்கள் அடைந்த கிருபைக்குட்பட்ட ஊழியமேயல்லாது மறு ஊழியம் செய்ய இயலாது. அப்படிச் செய்வார்களானால் அந்த ஊழியம் சித்தியடையாது. அப்படிப்பட்டவர்களே ஊழியத்தில் தோல்வியடைந்து போகிறவர்கள். ஊழியமும் உடையலாம்.

ஆகையால், அவரவர்களை தேவன் எந்த ஊழியத்திற்கு அழைத்திருக்கிறாரென்று அப்போஸ்தலர்கள் ஊழியர்களிடம் கேட்டு, அந்தந்த ஊழியத்திற்குத்தக்க நியமித்து நடத்துவதும், அந்தந்த ஊழியர்கள் தங்களுடைய பணிகளை செவ்வையாய் முடிப்பதும் அவர்களுடைய கடமையாகும். இது பழைய ஏற்பாட்டில் ஆசாரியர், லேவியர்களு

டைய ஊழியத்தின் ஒழுங்கின் பிரகாரம் நமக்கு திட்டமாகத் தெரிய வருகிறது. புதிய ஏற்பாட்டிலும் அவ்விதமாகவே ஊழியர்கள் காணப்பட்டார்கள்.

ஆனால், இந்நாட்களிலோ தங்களுக்கு அடாத காரியங்களில் தலையிட்டு சுவிசேஷகள் உபதேசம் கொடுக்க ஆரம்பிப்பதும், சுயாதீனமாக ஊழியம்செய்து கொண்டு தங்களை ஊழியர்கள் என்று சொல்லுகிறவர்கள் தங்களை அப்போஸ்தலர்கள் என்று எண்ணிக்கொண்டு உபதேசங்களுக்கு விளக்கம் கொடுப்பதும், அது அப்படியல்ல, இது அப்படியல்ல என்று சொல்வதுமாக. ஒவ்வொருவரும் தங்கள் விருப்பத்தை மக்கள் மேல் திணித்து தேவ ஊழியத்தையல்ல தங்களுடைய பிழைப்பை நடத்துகிறவர்களாக இருக்கிறார்கள். அழைப்புக்கு மாறாக சுவிசேஷகன் போய் சபை கட்ட ஆரம்பித்தால் உருப்படபோகிறதில்லை. ஆனபடியினால், அப்போஸ்தலனால் சபை எழுப்பட்டு, அப்போஸ்தலனால் சபை ஆளுகை செய்யப்பட வேண்டும். இது புதிய ஏற்பாட்டின் ஒழுங்காகும்.

(தொடரும்.)



"ஆசையால் நீயும் உன்னோடேகூட உன் குமாரரும் பலிபீடத்துக்கும் திரைக்கு உட்புறத்துக்கும் அடுத்த எல்லாவற்றையும் செய்வாயாக" எண். 18:7.



சுவிசேஷம்

# நீ உனக்கு பெரிய காரியங்களை தேடுகிறாயா?

என்னாலே அல்லாமல் உங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்று கர்த்தர் சொன்னார் (யோ. 15:5).

எல்லாவற்றையும் செய்கிறவர் இறைவனே. ஆனாலும் மனிதர்களை சிறு கருவிகளாக எடுத்து தமது காரியத்திற்காக பயன்படுத்துகிறார். ஒருவர் ஒரு வீட்டை விற்க வேண்டும் என்று விரும்புகிறார். இன்னொருவர் வாங்க வேண்டுமென்று விரும்புகிறார். இருவரையும் ஒருவருக்கொருவர் அறிமுகப்படுத்தி மத்தியஸ்தராக இருந்து பேச்சுவார்த்தை நடத்தி கிரயப் பத்திரம் முடிக்க ஏற்பாடு செய்கிறார் பொது மனிதனாகிய தரகர் (Broker) வாங்குகிறவனுக்கு வீடு முக்கியம். விற்கிறவனுக்கு பணம் முக்கியம், இருவருக்கும் தரகன் தேவை. ஆனால் பிரதானமல்ல.

தன் மகனுக்கு விவாக முடிக்க விரும்புகிறார் ஒருவர், தன் மகளுக்கு விவாகம் முடிக்க விரும்புகிறார் இன்னொருவர், இருவருக்கும் அறிமுகமான ஒரு பெரியவர் தலையிட்டு, இரண்டு குடும்பத்திலும் பேச்சுவார்த்தை நடத்தி திருமணத்திற்கு ஏற்பாடு செய்கிறார். திருமணமும் சிறப்பாக நடந்து முடிந்தது. பெரியவருக்கு இரண்டு குடும்பத்தினரும் நன்றியை தெரிவித்து கொண்டார்கள். இப்பொழுது பெரியவர் வேலை முடிந்தது. அவர் போகலாம். மாப்பிள்ளை வீட்டாருக்கு முக்கியம் பெண், அந்தப் பெரியவரல்ல, பெண் வீட்டாருக்கு முக்கியம் மாப்பிள்ளையே பெரியவரல்ல. திருமணம் நடக்க இதிலே

சிறு கருவிகளாக இருந்தவர் அந்த பெரியவர். அவர் ஒரு சிறு கருவிதான் இதை அவர் உணர்ந்திருந்தால் அவருக்கு என்றும் மரியாதை உண்டு. அந்த வீட்டு வீட்டு பெண் வீட்டிலும் மாப்பிள்ளை வீட்டிலும் சென்று அதிகாரம் செலுத்த முற்பட்டால் மதிப்பிழந்து போவார்.

இதே எண்ணமாக தேவனால் சிறு கருவியாக உபயோகிக்கப்படுகிறவர்கள் கவனமாயிருக்க வேண்டும். மெய்யான சபையும், மெய்யான மேய்ப்பர்களும், நடத்திப்புக்காரர்களும் முக்கியம் [எபி. 13;7,17; 1 தெச. 5:11,12; 1 தீமோ. 5:17; 1 யோ. 1:3].

சீரியா ராஜாவின் படைத்தலைவன் நாகமானுக்கு குஷ்டரோகம். அதைப் போக்க அவனுக்கு வழி தெரியவில்லை. அவன் மனைவிக்கு வேலைக்காரியாக இருந்த இஸ்ரவேல் தேசத்து சிறு பெண் வழி சொன்னாள். அந்தப்படி அவன் எலிசா தீர்க்கதரிசியிடம் போய் அற்புத சுகம் பெற்று திரும்பி வந்தான் (2 இரா. 5:1-14). இதிலே கர்த்தர் முக்கியப்படுத்தின காரியம்: தேவ மனிதனால் நாகமானுக்குண்டான தெய்வீக சுகத்தையே (லூக். 4:27). காரியமே முக்கியம் தவிர சிறு கருவியாக இருந்த சிறு பெண் அல்ல.

இதை அறியாத சில் இதோ அந்த சபைக்கு போ, அங்கே நீ சுகம் பெறுவாய் என்று சொன்னதால், நம்பி வந்த வியாதிஸ்தன் சுகம் பெற்று, இயேசுவின் சீஷனாய் மாறி விசுவாசியாகிவிட்டால் போதும் இவருக்கு வழி சொன்ன மனிதன் நன்மை பெற்ற மனிதனோடே கூட சந்தோஷப்படுவதோடு நில்லாமல், தனக்கு பெரிய காரியங்களைத் தேடி, தன்னை முக்கியப்படுத்திக் கொள்வது பேதமை. இதிலே கர்த்தரால் உண்டான தெய்வீக சுகமும் இரட்சிப்புமே முக்கிய காரியம். கருவியாக இருந்தவன் முக்கியமல்ல.

ஆராதனையில் ஒரு சின்ன சாட்சி அல்லது ஒரு சின்ன ஜெபம் பண்ணிவிட்டால் போதும் உடனே அந்த ஆராதனையே தன்னால் தான் நன்றாக இருந்ததாக எண்ணிக் கொள்வார்கள் சிலர். சமாரியா தேசத்து ஸ்திரீயினுடைய அந்தரங்க வாழ்க்கையை இயேசு கண்டு பிடித்து விட்டார் என்று சொன்னபடியால் சமாரியரில் அநேகர் இயேசுவை விசுவாசித்தார்கள் (யோ. 4:39). இதிலே அவள் சொன்னதினால் அநேகர் விசுவாசிகளாகவில்லை (யோ. 4:42). இயேசுவானவர் அவளைக் குறித்து சொன்ன வெளிப்படுத்தலே அநேகரை விசுவாசிகளாக்கிற்று.

ஆகையால் சிறுகருவியாகிய சபைகளிலே வெளிப்படுத்துதல் சொல்கிறவர்கள் முக்கியமல்ல. கர்த்தரால் கொடுக்கப்பட்ட வெளிப்படுத்தலே முக்கியக்காரியம். பிலேயாம் மதிகெட்டுபோனபோது, பேசாத கழுதை பேசி அவனுடைய மதிகேட்டை தடுத்தது (2 பேது. 2:15,16). இதிலே கர்த்தரால் கழுதையின் மூலம் உண்டான எச்சரிப்பின் வார்த்தையால் தீர்க்கனின் மதிகேடு தடுக்கப்பட்டதே முக்கிய காரியம் இதற்கு கருவியாக இருந்த கழுதை முக்கியமல்ல.

ஒருவர் ஜெபிக்க வியாதிசுகமாகலாம், ஒருவர் பிரசங்கிக்க சிலர் உணர்வடையலாம், ஒருவர் சொன்ன வெளிப்படுத்தல் நடக்கலாம், ஒருவர் சொன்ன சாட்சி சபையை பரவசப்படுத்தலாம் ஆனாலும், ஜெபித்தவர் முக்கியமல்ல கர்த்தரால் பெற்ற சுகமே முக்கியம். பிரசங்கித்தவர் முக்கியமல்ல கர்த்தரால் உண்டான எண்ணங்களே முக்கியம். வெளிப்படுத்தல் சொன்னவர் முக்கியமல்ல. தெய்வத்தால் கொடுக்கப்பட்ட வெளிப்பாடே முக்கியம். சாட்சி சொன்னவர் முக்கியமல்ல, சாட்சி சொல்லத்தக்கதாய் கர்த்தர் நடப்பித்த செய்கையே முக்கியம். எழுதினவர் முக்கியமல்ல, பரிசுத்த ஆவியால் ஏவப்பட்டு எழுதப்பட்ட வசனமே முக்கியம். தேவனே முக்கியம்.

கர்த்தருக்கென்று ஒரு ஐந்து ரூபாயை காணிக்கை கொடுத்து விட்டாலும் போதும் தன்னுடைய பணத்தால் தான் கர்த்தருடைய ஊழியமே நடக்கிறதாக எண்ணி உரிமை கொண்டாட முற்படுவார்கள் சிலர். இதுவும் தவறு.

பாருங்கள், இயேசுவானவர் ஐந்து அப்பங்களையும், இரண்டு மீன்களையும் எடுத்து வானத்தை அண்ணாந்து பார்த்து, ஆசீர்வதித்து சீஷர்களிடத்தில் கொடுக்க அதை அவர்கள் பரிமாற ஸ்திரீகள் பிள்ளைகள் தவிர 5,000 புருஷர்கள் அதை சாப்பிட்டு திருப்தி அடைந்தார்கள். இந்த சம்பவம் நான்கு சுவிசேஷங்களிலும் எழுதப்பட்டுள்ளது (மத். 14:16-21; மாற். 6:36-42; லூக் 9:13-17; யோ. 6:5-13]. இந்த 5 அப்பங்களையும், 2 மீன்களையும் ஒரு பையன் கொடுத்தான் என்று யோவான் மாத்திரம் எழுதியுள்ளார் [யோ. 6:9]. மற்ற மூவரும் அந்த பையனைப் பற்றி சொல்லாமல் இயேசுவானவர்செய்த அற்புத காரியத்தைதான் முக்கியப்படுத்தி எழுதி உள்ளார்கள்.

ஆனபடியால் ஒருவர் கொடுக்கும் காணிக்கை சிறிதாக இருந்தாலும் கர்த்தர் அதை ஆசீர்வதித்தால் பெரிய கன்வென்ஷன்கள் நடக்கும், ஆலயங்கள் எழும்பும், ஆசிரமங்கள் இயங்கும், ஊழியங்கள் நடக்கும் கர்த்தர் ஆசீர்வதிக்கிற காரியமே முக்கியம். சிறு கருவியாக இருக்கிற காணிக்கை கொடுக்கிறவர் முக்கியமல்ல. கர்த்தர் அவரை முதலாவது அங்கீகரிக்க வேண்டும் [ஆதி. 4:4].

ஆத்துமாக்களை ஆதாயம் பண்ணுகிறவர்களே கேளுங்கள், கர்த்தரின் சேவையில் பயன்படுகிற பணிவிடைக்காரர்களே சிந்தியுங்கள், கர்த்தருக்காய் கொடுக்கிற பிரபுக்களே செவிக்கொடுங்கள், உங்களுக்கென்று பெரிய காரியங்களை தேடி இருக்கிற கிருபைகளை இழந்து போகாதிருங்கள்.

எரேமியா தீர்க்கருக்கு எழுத்தராய் இருந்த பாருக்கைப் பார்த்து கர்த்தர் சொல்கிறார்: "பாருக்கே, நீ உனக்கு பெரிய காரியங்களைத் தேடுகிறாயா? தேடாதே, மாம்சமான யாவர் மேலும் தீங்கு வரும். நீ பாதுகாக்கப்படுவாய் இதுவே உனக்கு கிடைக்கும் கொள்ளைப் பொருளாக இருக்கும்" (எரே. 45:5).

பிரியமானவர்களே, நீங்கள் தொடர்ந்து ஆத்துமாக்களை ஆதாயம் பண்ணுங்கள். கர்த்தருக்கென்று செயல் படுகிறவர்களே, தொடர்ந்து செய்யுங்கள், கொடுக்கிறவர்களே, கொடுத்துக்கொண்டே இருங்கள், உங்கள் கிரியைக்கேற்ற பலன் நிச்சயம் உண்டு இங்கேயும் உண்டு, அங்கேயும் உண்டு. உங்கள் சிந்தையை மாத்திரம் சீராக்கி, எண்ணுவதற்கு மிஞ்சி பெரிய காரியங்களை தேடாதிருங்கள்.

எல்லா மகிமையையும் தேவனுக்கே செலுத்திவிட்டு என் கடன் பணி செய்து கிடப்பதே என்று சொல்லி சந்தோஷமாயிருங்கள், முன்னேறுங்கள், பெருகுங்கள்.



"எனக்குப் பிரியமான சகோதரரே, கர்த்தருக்குள் நீங்கள் படுகிற பிரயாசம் விருதாவாயிராதென்று அறிந்து, நீங்கள் உறுதிப்பட்டவர்களாயும், அசையாதவர்களாயும், கர்த்தருடைய கிரியையிலே எப்பொழுதும் பெருகிறவர்களாயும் இருப்பீர்களாக." 1 கொரி. 15:58.





# "கன்னத்தில் அடித்தால்"

"உன்னை ஒருவன் வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறுகன்னத்தையும் திருப்பிக் கொடு" மத். 5:39.

அந்நாட்களில் ரோம அரசாட்சி நடந்து வந்தது. யூதர்கள் ரோம ஆளுகையில் இருந்தார்கள். ரோம போர்ச் சேவகர்கள் அங்கும் இங்கும் பிரயாணம் பண்ணும் போது யூதன் ஒருவனைக் கண்டால் தங்கள் மூட்டையை அவன் மேல் ஏற்றி சுமந்து வரும்படி கட்டாயப்படுத்துவார்கள் [மத். 27:32; மாற். 15:21]. அவர்களோடு வீண் தகராறு ஏன். உன்னை ஒருவன் ஒரு மைல் தூரம் வரப் பலவந்தம் பண்ணினால் இரண்டு மைல் தூரம் போ (மத். 5:41). உன்னோடு வழக்காடி உன் வஸ்திரத்தை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றிருக்கிறவனுக்கு உன் அங்கியையும் விட்டுவிடு (மத். 5:40) என்று இயேசுவானவர் சொன்னார். ஆனால், இன்று அஞ்ஞானிகளும், பெயர் கிறிஸ்தவர்களும் தேவனுடைய பிள்ளைகளுக்கு விரோதமாய் இந்த வசனங்களை தவறாய் உபயோகிக்கிறதையும் குற்றம் கண்டு பிடிக்கும்படி ஒருவன் உன்னை ஒரு கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறு கன்னத்தையும் காட்டு என்று இயேசு சொல்லியிருக்கிறாரே நீங்கள் கிறிஸ்தவர்கள் உங்களுக்கு பொறுமையில்லையே நீங்கள் போலீஸைக் கூப்பிடப் போகலாமா? நீங்கள் கோர்ட்டுக்குப் போகலாமா? என்கின்றனர். அதாவது இயேசுவானவர் இவர்களுக்கு மற்றவனை அடிக்க அனுமதி கொடுத்திருக்கிறது போலவும் கிறிஸ்தவர்கள் பட்டுக் கொண்டு திரியவேண்டும் என்பது போலவும் பேசுகிறார்கள். அந்த வசனத்தில் இயேசு என்ன சொன்னார்.

'ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால்' என்றார். அது எப்படி ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அடிக்க முடியும்? அவன் இடது கையால் அறைந்தால் தான் வலது கன்னத்தில் அடிக்க முடியும். ஒருவனை அவமானப்படுத்த இடது கையால் லேசாக அடையாளமாக அடிப்பது அந்நாட்களில் வழக்கம். அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டினால் அவன் ஐயோ பாவம் என்று சொல்லிவிட்டு விட்டு மறுபடியும் அடிக்காமல் கடந்து போய்விடுவான் என்ற அர்த்தத்தில் இயேசுவானவர் சொன்னாரேயொழிய கிறிஸ்தவனைக் கோழையாக இருக்க தேவன் சொல்லவில்லை.

வாலிபரின் அலங்காரம் அவர்கள் பராக்கிரமமே (நீதி 20:19). நீ ஏழைகளுக்காகவும், ஊமையனுக்காகவும் உன் வாயைத்திற (நீதி. 31:8). கிறிஸ்தவர்களில் அநேகர் கோழைகளாக இருக்கின்றனர். நாலு துன்மார்க்கர்கள் ஒரு ஏழை மனிதனை நடு ரோட்டில் போட்டு அடித்தால் அதைப்பார்த்தும் பார்க்காதது போல் முகத்தைவேறு பக்கம் திருப்பிக் கொண்டு ஒரு பக்கம் விலகி நடந்து போவார்கள் நமக்கு ஏன் இந்த வீண் வம்பு என்பது இவர்களுடைய விவாதம்.

இது ஒருவகை கோழைத் தனமும் கவலையீனமுமான செயலுமாகும். ஏன் அந்த அநியாயத்தைத் தடுத்து நிறுத்தக் கூடாது? அந்த மனிதனை ஏன் தப்புவிக்கக் கூடாது? அப்படி தப்புவிக்கப் போய் அதினால் நாம் இரண்டு அடிபடுவதினால் அந்த ஏழை மனிதனுக்கு அடிகுறையுமே, அல்லது அடிபடுபவனை தப்புவிக்க குரலாவது கொடுக்கலாமே. கொலைக்கு நியமிக்கப்பட்டவர்களைத் தப்புவிக்கக் கூடுமானால் தப்புவி [நீதி. 24:11]. என்று வேதம் சொல்லுகிறதே ஏன் நீதிக்காக போராடக் கூடாது?

கோழைகள் தான் அநீதிக்குத் துணை போவார்கள். தீமை செய்கிறவர்கள் திரளா

யிருந்தால் அவர்களுக்கு சார்பாயிருப்பார்கள். ஏனென்றால் பின்னொரு சமயத்தில் துன்மார்க்கருடைய உதவி தங்களுக்குக் கிடைக்கும் என்று துன்மார்க்கருக்குத் துணை போவார்கள். சத்தியவானோ நீதியின் பக்கம், நன்மையின் பக்கம் நல்லவர்கள் பக்கம் நிற்பான். அவர்கள் கொஞ்சபேராயிருந்தாலும் தனித்திருந்தாலும் சிறியவர்களாயிருந்தாலும் நீதியின் பக்கமே நிற்பான். துன்மார்க்களும், பலவீனமானவர்களுமோ, பணக்காரர்கள் பக்கம் துன்மார்க்கர் பக்கம், பலசாலிகள் பக்கம் சாய்வார்கள் இது உலகத்தில் நடக்கும் கூட்டுப் பாவமான காரியமாகும்.

ஆனால், வழியில் அடிபடுகிறவனை அருகில் வந்து பார்க்கும் போது அவன் தன் சகோதரனோ, மாமனோ மச்சானோ, உறவினனோவென்றால் தலையிடுவான் ஏன் இவன் மச்சான், அவன் அந்நியன் என்பதினால் அல்லவா? தாங்கள் கிறிஸ்தவர்கள் சமாதானத்தைத் தேடுகிறவர்கள் என்கிறார்கள். தனக்கு ஒரு நீதி, தன் உறவினனுக்கு ஒரு நீதி, அடுத்தவனுக்கு ஒரு நீதி என்று கடைபிடிப்பதால் தான் அநியாயத்தைக் கண்டிக்காமல் போய்விடுகிறார்கள்.

இயேசுவானவர்: "உன்னில் அன்பு கூறுவது போல் பிறனிடத்திலும் அன்பு கூறுவாயாக என்றல்லவா சொன்னார் [மத். 23:39]. தேவைப்படுகிற ஒவ்வொருவனும் பிறனே உன் உறவினனே என்றல்லவா சொன்னார் (மத். 10:25-37.) நீயோ அவன் அடுத்தவன் என்று விலகிப் போகிறாயே நீ எப்படி வசனத்தைக் கைக்கொள்ளுகிறவனாகச் சொல்லுகிறாய். ஆகையால் ஒருவன் உன்னை அநியாயமாய் அடித்தால் தடுத்துக் கேள் [யோ. 18:23]. சட்டத்துக்குப் புறம்பாய் தீர்ப்பு செய்தால் எதிர்வாதம் செய் [அப். 23:1-3]. இது பாவமல்ல.

போலீஸ் இலாகா, நீதி மன்றம் தேவனாலே தான் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உங்கள் மேல் போலீஸில் புகார் செய்தால் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகவும். நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தால் நீதி மன்றத்தில் போய் வக்கீல் மூலமாய் பதில் சொல்லவும். நான் போலீஸுக்குப் போக மாட்டேன். நீதிமன்றம் போக மாட்டேன் என்றால் அரசாங்கம் உன்னை கைது செய்து கொண்டு போய் நிறுத்தும். நீயும் அவசியமானால் போலீஸுக்குப்போ. நீதி மன்றத்தைத்தேடு. அநியாயத் தீர்ப்பிடப்பட்டால் உயர் நீதிமன்றத்தில் அப்பீல் செய் [மேல் முறையீடு] செய் [அப். 25: 9-13].

பூமியெங்கும் அநியாயம் நடந்தாலும் (பிர. 3:16). நாம் இக்காலத்தில் சுதந்தர நாட்டில் இருக்கிறோம். ஆனபடியால் சட்டப்படி புகார்செய். இன்று போலீஸ் இலாகாவும், நீதிமன்றமும் இல்லை என்றால் துன்மார்க்கர் ஏழை எளிய மக்களையும், நல்லவர்களையும் கொன்று போடுவார்கள். அப்படி முற்றிலும் ஆகாதிருக்கவே தேவன் இந்த நியமங்களை நியமித்துள்ளார். போலீஸ் அதிகாரிகளும், நீதிபதிகளும் லஞ்சம் வாங்கிக் கொண்டு நியாயத்தைப் புரட்டலாம். இதோ அவர்களுக்கும் நியாயத் தீர்ப்பு வருகிறது (ஏசா. 5:23). ஆனால் எப்பொழுதும் அப்படி அல்லவதில்லை:

திருச்சபைக்குள்ளே ஏதாவது காரியமென்றால் தங்களுக்குள்ளே பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டும் [1 கொரி. 6:1-7]. இது திருச்சபை பிள்ளைகளின் காரியம்.

கிறிஸ்தவர்களாகிய நாம் இன்னும் பரலோகத்திற்குப் போய்ச் சேரவில்லை. பூமியிலே சரீரத்தில்தான் தான் இருக்கிறோம். தேவ தூதர்கள் மறுமையில் இருக்கிறவர்கள், மரிப்பதில்லை. திருமணம் செய்வதுமில்லை, மரிக்கவுமாட்டார்கள். இங்கே கொள்வனையும் கொடுப்பனையும் இருக்கட்டும் இருக்கும், அது பாவமில்லை [மத். 22:30]. அது போல் உன்னை ஒருவன் வலது கன்னத்தில்

அறைந்தால் மறு கன்னத்தைக் காட்டு. அதிலும் அறைந்தால் போகட்டும் விட்டு விடு. மேலும் அடித்தால், பலர் கூடி அடித்தால், உதைத்தால் தடுத்துக் கேள்.

இயேசுவானவர் மேலும் சொல்லவில்லை. நீ ஜெபித்து அப்பொழுது பரிசுத்த ஆவியானவர் உன்னை நடத்த ஒப்புக்கொடு. பயப்படாதே. அவசியப்படுகிறவைகளை புகார் செய் அரசாங்க பதிவேட்டில் அது பதிவாகட்டும். இல்லை என்றால் எதிரி இல்லை என்று பொய் சொல்வான்.

நான் சோம்பேறியாக, கோழையாக இருப்பேன் கடவுள் என்னை பாதுகாப்பார் என்று சொல்லாதே நீ ஆயத்தப்படு. "அவர் தேவனுடைய மனுஷன், அப்போஸ்தலன், அவரை பாதுகாத்துக் கொள்வார் என்று உன் தலைவனை பாதுகாக்காமல் விட்டு விடாதே (நீதி. 27:18).

அப்போஸ்தலனாகிய பவுலுக்கு தீமை செய்ய யூதர்கள் திட்டமிட்டிருக்கிறார்கள் என்று தெரிந்த உடன் தேவனுடைய பிள்ளைகளான தேவசேனை அவர் போய்ச் சேர வேண்டிய இடம் வரை வழித் துணைக்குப் போனதைப் பார். "பெரோயா ஊரானாகிய சோபத்தரும், தெசலோனிக்கேயரில் அரிஸ்தர்க்கும், செக்குந்தும், தெர்பையானாகிய காயுவும், தீமோத்தேயும், ஆசியா நாட்டாராகிய தீகிக்கும், துரோப்பீமுமாகிய 7 பேர் ஆசியா நாடு வரைக்கும் போனார்கள்" (அப். 20:3-5).

வீண் வேதாந்தம் பேசாதே. ஜெபம் செய் கிரியையும் செய். கிறிஸ்தவர்களில் படித்தவர்கள், அறிவாளிகள் தீமைக்கு விரோதமாய்க் குரல் கொடுங்கள். இக்காலத்துத் தேவனுடைய திட்டத்தை அறிந்து கொள்ளுங்கள். அடிக்க அடிக்க படுகிறவனும் முட்டாள், படபட அடிக்கிறவனும் முட்டாள். ஓடுகிற நாயைக் கண்டால் விரட்டுகிற நாய்க்குத் தொக்கு. அது நின்று திரும்பிப் பார்த்தால் போதும் இந்த நாயும் நின்று விடும்.

வலது கன்னத்தில் அடித்தால் காட்டுங்கள், சபித்தால் ஆசீர்வதியுங்கள், தெய்வீகக் காரியமாய் துன்பப்பட்டால் சகித்துக் கொள்ளுங்கள். அவன் எனக்குச் செய்தபடி பதில் செய்வேன் என்று சொல்லாதிருங்கள். ஆனால் கிறிஸ்தவர்களை அடித்து விரட்டுவேன், கிறிஸ்தவமதத்தை ஒழிப்பேன், தெய்வ வணக்கத்தை அழிப்பேன், இயேசுவைப்பற்றி பேசக்கூடாது என்றால். தேவ ஜனம் எதிர்க்க வேண்டும்.

நம்மிடத்தில் பெரிய ஆயுதம் உண்டு அது ஜெபம். சரியாய் உபயோகித்தால் இதற்கு நிகரில்லை. எல்லாவற்றின் மேலும் ஜெயம் கொள்ளுவோம். உன்னை ஒருவன் வலது கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டு.

"காயத்தின் தழும்புகளும், உள்ளத்தில் உறைக்கும் அடிகளும், பொல்லாதவனை அழுக்கறத் துடைக்கும்.

நீதி. 20:30.

## நோவா 120 வருஷம் பிரசங்கித்தாரா?

நோவாவுக்கு 500 வயதான போது சேம், காம், யாப்பேத் என்று மூன்று குமாரர்களைப் பெற்றார் [ஆதி. 5:32; 6:10.] சேம் நோவாவின் இரண்டாவது குமாரன்

(ஆதி. 10:21). சேமுக்கு 97 வயதாகும் போது கல்யாணம் நடந்தது. அப்போது அவருடைய தகப்பனாராகிய நோவாவுக்கு தேவனால் கப்பல் கட்டும்படியான கட்டளை உண்டாயிற்று (ஆதி. 6:18).

நோவாவுக்கு 600 வயதாகும் போது பூமியில் ஜலப்பிரளயம் உண்டாயிற்று (ஆதி. 7:6,11). ஜலப்பிரளயத்தைத் தொடர்ந்து நோவாவும் அவருடைய மனைவியும், அவருடைய குமாரர் சேம், காம், யாப்பேத் முதலாம் அவர்களின் மனைவிகளும் தேவனை குறித்த ஜீவராசிகளும், பேழைக்குள் பிரவேசித்தார்கள் (ஆதி. 7:13). 1 வருஷம் 10 நாட்கள் பேழைக்குள் இருந்தார்கள் (ஆதி. 8:14). ஜலப்பிரளயம் உண்டாகி இரண்டு வருஷத்துக்குப் பின், சேமுக்கு 100 வயதான போது அர்ப்பக்சாத்தைப் பெற்றார் (ஆதி. 11:10).

ஆகையால் சில கிறிஸ்தவ பிரசங்கிகள் பிரசங்கிப்பது போல் நோவா 120 ஆண்டு பிரசங்கிக்கவில்லை. 120 வருஷம் கப்பல் கட்டவில்லை. 120 வருஷம் ஜலப்பிரளயத்திலே அழியப்போகிற அழிவைக் குறித்து பிரசங்கிக்கவும் இல்லை. கர்த்தர் நோவாவிடம் நீ பேழையை உண்டாக்கி அதற்குள் நீயும் உன் குமாரரும் உன் மனைவியும் உன் குமாரரின் மனைவிகளும், பேழைக்குள் பிரவேசியுங்கள் என்றார். ஆகையால் நோவா2 வருஷமே பிரசங்கித்தார்.

---

"நோவாவின் குமாரராகிய சேம், காம், யாப்பேத் ஜலப்பிரளயத்துக்குப் பின்பு அவர்களுக்குக் குமாரர் பிறந்தார்கள்."
ஆதி. 10:1.

---

## FORM IV

(See Rule 8)

1. Place of Publication : Bombay
2. Periodicity of its publication : Monthly
3. Printer's Name : Chief Pastor N LAZAR
   (Whether citizen of India? : YES
   (if foreigner, state the country of origin)
   Address : Church Lane Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay 400 078
4. Publisher's Name : Chief Pastor N LAZAR
   (Whether citizen of India ?) : YES
   (if foreigner, state the country of origin)
   Address : Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078.
5. Editor's Name : Chief Pastor N LAZAR
   (Whether citizen of India ? : YES
   (if foreigner state the country of origin)
   Address : Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078.
6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital : New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078.

I, Chief Pastor N. LAZAR hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

Sd [ ]
Chief Pastor N. Lazar
Signature of Publisher.

Dated 27-2-93

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 109 - APRIL/MAY '93

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1: 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

நம்முடைய பரிசுத்த வேதாகமம் மூன்று காரியங்களை முக்கியமாக நமக்குப் போதிக்கிறது. 1. இது எல்லா மனிதர் மேலும் விழுந்த கடமை. 2. நாம் தேவனுக்குப் பயப்பட வேண்டும். 3. அவருடைய கற்பனைகளைக் கைக்கொள்ள வேண்டும் என்பதே. உலகில் அநேக புஸ்தகங்களை உண்டு பண்ணுவதற்கு முடிவேயில்லை அதிக படிப்பு உடலுக்கு இளைப்பு. அதனால் அதிக பிரயோஜனமில்லை என்று வேதாகமம் திட்டமாகக் கூறியுள்ளது. (பிர. 12:12). தேவனுடைய பத்துக் கற்பனைகளைக் கைக்கொள்வதினால் மனிதனுடைய ஆயுசு நாட்கள் நீடிக்கும் அவனுக்கு சுகதேகம் வாய்க்கும். அவனும் அவனுடைய பிள்ளைகளும், பூமியிலும் பரலோகத்திலும் நன்றாய் இருப்பார்கள். செழித்திருப்பார்கள். தேவனுடைய இரக்கம், தயவு அவர்களுக்குக் கிடைக்கும். நம்முடைய சத்துருக்களையெல்லாம் தேவன் துரத்தி விடுவார். அறிவு, ஞானம், விவேகம் நமக்கு உண்டாகும் என்று தேவன் உபா. 4.5 அதிகாரங்களில் திருவுளம் பற்றியிருக்கிறார். இவைகளின்படி செய்ய நமக்கு நல்ல இருதயம் வேண்டும். நல்ல இருதயத்தை நமக்குத் தரும்படி நாம் இறைவனை வேண்டிக் கொள்வோமாக. இருதயத்தை சுத்திகரிப்பதில் தேவ ஜனங்கள் தீவிரமாக இருக்க வேண்டும். பழைய துருத்திகளில் புதிய திராட்சரசத்தை வார்த்து வைக்கக் கூடாது. வார்த்து வைத்தால் புதிய ரசமானது துருத்திகளைப் பீறிப்போடும், ரசமும் சிந்திப்போம். புதிய ரசத்தை, பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தை, புதிய துருத்திகளில், புதிய இருதயத்தில் வார்த்து வைக்க வேண்டும். அநேகர் இந்நாட்களில் இருதய சுத்திகரிப்பைத் தேடாமல் ஆவி, ஆவியென்று சொல்லி ஆவியைத் தேடி வாங்கிக் கொள்கிறார்கள். அதனால் எந்த பிரயோஜனமுமில்லை. முதலில் துருத்தியை, இருதயத்தை மாற்ற வேண்டும். சுத்த இருதயமுள்ளவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் தேவனை தரிசிப்பார்கள். ஆனபடியினால் நாம் பாவ அறிக்கை செய்யவும், நம்மைச் சுத்திகரிக்கவும், தேவ ஆலோசனை கேட்டு நமது இருதயத்தை சுத்திகரித்துக் கொண்டு தேவ ஆவியினால் நிரம்பவும். தேவனுக்கு மகிமையாக விளங்கவும் செய்வோமாக. இறைவன் நமக்கு அப்படி அருள் புரிவாராக. இறைவனுடைய வாக்குத்தத்தமோ நான் உங்களுக்கு புது இருதயத்தை தருவேன் என்று சொல்லியிருப்பதே. கல்லான இருதயத்தை எடுத்துப் போட்டு சதையான இருதயத்தை உங்களுக்கு கொடுப்பேன் என்றும் உங்கள் உள்ளத்திலே என் ஆவியை வைத்து உங்களை என் கட்டளைகளில் நடக்கவும், நியாயங்களைக் கைக்கொள்ளவும், அவைகளின்படி செய்யவும் பண்ணுவேன் என்றும் தேவன் வாக்கருளியிருக்கிறார். சுத்திகரிக்கப்படாத மக்களுக்கு இந்த வாக்குத்தத்தம் நிறைவடைவதில்லை. நிறைவேறுவதில்லை (எசே. 36:26,27). ஆதலால் இருதய சுத்தியை தேடி இருதயத்தை சுத்திகரித்துக் கொண்டு இறைவனுடைய கற்பனைகளைக் கைக்கொண்டு நிறைவான வாழ்க்கையை அனுபவிப்போமாக. கர்த்தர் கிருபை செய்வாராக.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

நாம் சத்தியத்தைக் கைக்கொள்ளும் பட்சத்தில் நமக்கு பயனுண்டாகுமே யொழிய அச்சத்தியத்தை ஆதாரமாக்குகிறபொழுது யாதொரு பயனும் கிடைக்காது. இதற்கு தெலுங்கு கவிராயரும், சித்தருமாகிய வேமண்ணா என்பவர் சொல்லியிருப்பதாவது:

எத்தனை மதத்தைத் தழுவினாலும்<br>
எவ்வளவு ஜெபம் செய்தாலும்<br>
சத்தியம் அணுவளவாகிலும் இராவிடில்<br>
துன்மார்க்கத்தைவிடான்<br>
சத்தியமுடையவனாயிருப்பதனாலேயே<br>
புவியில் பிராமணனேயன்றி<br>
வேறல்ல என்றார்.

மனிதர் இந்த சத்தியத்தை அறிந்துணர்வது அரிது. எந்த மார்க்கத்தில் சேர்ந்தாலும் சரிதான் நாம் உறுதிப்பிடி பிடித்து நம்பும் பட்சத்தில் நாம் எவ்விதத்திலும் கடைத்தேறுவோம் என்ற அபிப்பிராயத்தை எவ்வளவேனும் பரிசோதிக்காமல் அதிக நிர்விசாரமாயிருக்கிறார்கள். தன் தேக நிலைமையைக் குறித்து யாரும் இவ்வளவு பைத்தியக் காரத்தனமான ஆலோசனை பண்ணுகிறார்கள்.

தேகத்திற்கு வியாதி நேரிடும் சமயத்தில் வைத்தியர் வந்து தேகக்கூறுகளை விசாரியாமல் எந்த மருந்து கொடுத்தாலும் பூரணமாய் நாம் நம்பி சாப்பிட்டால் வியாதி சுகமடையும் என்று சொல்வானாகில் எல்லாரும் கூடி அவனைத் துரத்த மாட்டார்களா? சரீரத்திற்கு நேரிட்ட ரோகத்தை சுகப்படுத்தக் கோரினால் சரீர ஸ்திதியை வெகு ஜாக்கிரதையாய் பரிசோதித்து அந்த ரோக இலட்சணத்தை செவ்வையாக அறிந்து அதற்கேற்ற அவிழ்தம் கண்டு பிடித்து அதற்கு வைத்திய முறை எழுத வேண்டும். இவ்விதம் செய்யும் பட்சத்தில் தேவ தயவால் அவ்வியாதி தீருமேயன்றி, அவ்வித விசாரணை செய்யாது கையில் திடீரென்று அல்லது தற்செயலாக அகப்பட்ட அவிழ்தத்தை சாப்பிடும்படிக் கொடுத்தால் வியாதி சகஜமாய் அதிகரித்து நோயாளிக்கு பிராண அபாயம் சருவிக்கும்.

தேக ஸ்திதியை இவ்வளவாய் முயற்சி செய்கிற நாம் ஆத்தும கதியைக் குறித்து அசட்டையாய் இருக்கலாமா? வெவ்வேறு ஔஷதங்களை பரிசோதித்து உபயோகிக்கிறதுபோல், வெவ்வேறு மதாபிப்ராயங்களை பரிசோதனை பண்ணி பொய்யானவற்றைத்தள்ளி உபயோகமானவற்றை வசப்படுத்தி அல்லது கைப்பற்றிக் கொள்ள வேண்டும். நாம் சேருகிறது பொய்மதமானால் மருந்துக்குப் பதிலாக விஷமுண்டவன் நிலைமை எவ்வண்ணமோ அவ்வண்ணமேயாகும்.

மதங்களில் சேரச்சேர அல்லது மதங்களைத் தழுவத் தழுவ நாம் வழிவிட்டு அலைகிறவர்களாக அல்லது முழுவதும் குணம் கெட்டவர்களாக ஆகிப்போவோம். இது அதிகத் தெளிவான சங்கதியாகும். இதைக்குறித்து சுவிஸ்தாரமாய் பிரசங்கம் பண்ண வேண்டியதில்லை.

"அவர்கள் கனிகளினால் அவர்களை நீங்கள் அறிவீர்கள். முட்செடிகளில் திராட்சைப் பழங்களையும், முட்பூண்டுகளில் அத்திப்பழங்களையும் பறிக்கிறார்களா அப்படியே நல்லமரமெல்லாம் நல்ல கனி கொடுக்கும். கெட்ட மரமோ கெட்ட கனி கொடுக்கும்; நல்ல மரம் கெட்ட கனிகளைக் கொடுக்க மாட்டாது, கெட்ட மரம் நல்ல கனிகளைக் கொடுக்க மாட்டாது; நல்ல கனி கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலே போடப்படும். பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் சித்தத்தின் படி செய்கிறவனே பரலோக ராஜ்யத்தில் பிரவேசிப்பானேயல்லாமல் என்னை நோக்கிக் கர்த்தாவே! கர்த்தாவே! என்று

சொல்லுகிறவன் அதில் பிரவேசிப்பதில்லை என்று கர்த்தராகிய இயேசு திருவுளம் பற்றினர்'' (மத். 7:16-18,21).

உரைகல்லில் உரைக்க உரைக்க பசும் பொன் எவ்விதம் மென்மேலும் பிரகாசிக்கிறதோ அவ்விதமேபரிசோதிக்கபரிசோதிக்க கிறிஸ்தவ மார்க்கத்தின் பிரகாசம் வெகு வாய்த் தெரியும் என்று உறுதியாய் நம்பி கிறிஸ்து நாதரின் பக்தர்கள் இவ்வித விசாரணைக்கு எவ்வளவேனும் பயப்படாமல் தன் மத அபிப்பிராயங்களை சகல மனிதருக்கும் தாராளமாய் வெளிப்படுத்துகிறார்கள். ஒரே ஒரு ஷரத்து மாத்திரம் வெகு அவசரமானது. அது என்னவெனில் கிறிஸ்து மதத்தை பரிசோதனை செய்ய ஏற்படும்முன் அதின் முக்கிய காரணம் என்னவென்று விசாரித்து அறிந்து கொள்ள வேண்டும் என்பதே.

இவ்விதம் செய்யாவிடில் நாம் ஒரு வளை நிஜஸ்திதியைக் கைக்கொள்ளாமல் படைசால் தவறவிட்ட உழவனைப் போல வீணக பிரயாசப்படுவோம். கிறிஸ்து மதஸ்தர்கள் அநுசரிக்கிற அபிப்பிராயங்களில் அநேக விகற்பங்கள் இருக்கலாம். அதின் சாரத்தை அறிந்து கொள்வது அசாத்தியம் என்று சிலர் ஆட்சேபனை செய்வார்.

இத்தேசத்தில் இந்துக்கள் பலர் உண்மையான சங்கதியை செவ்வையாய்க் கிரகிக்காமல் வெவ்வேறு மிஷன்களிலுள்ள வித்தியாசங்களைப் பார்த்து கிறிஸ்து மதம் என்றால் என்னவென்று சந்தேகமாய் கேட்பார்கள். இந்த ஆட்சேபனையை விசாரித்துப் பார்க்கையில் இது அவ்வளவு நியாயமானதல்லவென்று தெளிவாகும். மத சித்தாந்தங்களிலும் கோட்பாடுகளிலும் மத ஆசாரங்களிலும் வெவ்வேறு வகுப்பானவரான கிறிஸ்தவர்களுக்குள் சில விகற்பங்கள் உண்டு என்பது வாஸ்தவமே. அவ்வித பேதங்களை செவ்வையாய் பரிசோதனை பண்ணினால் அவைகள் அற்பமானவைகளேயன்றி முக்கியமானவைகளல்லவென்று தெளிவாய் விளங்கும். கிறிஸ்து நாதர் பக்தர்களில் எவ்வகுப்பாரானாலும் எல்லாரும் ஒருமனப்பட்டு பத்துக் கற்பனைகளை சட்டமாகக் கைக்கொண்டு ஆண்டவர் கற்றுக் கொடுத்த ஜெபத்தை அனுதினமும் உபயோகித்து கிறிஸ்து மார்க்க உபதேசங்களை மொத்தமாய் சுருக்கமாய் விளக்குகிற அப்போஸ்தல விசுவாசப் பிரமாணம் போன்ற சத்தியங்களை அங்கீகரித்திருக்கிறார்கள்.

இப்படியிருக்கையில், யாவரும் ஏகோபித்துக் கைக்கொள்ளுகிற உபதேசங்கள் எவைகளோ அவற்றை செம்மையாய் விசாரித்துத் தெரிந்து கொண்டால் கிறிஸ்து மார்க்க உபதேசங்களைக் கிரகித்துக் கொள்கிறதற்கு ஒரு சந்தேகமும் இராது. நாம் இப்படி விசாரிக்க வேண்டிய அவசரமில்லை. இயேசு கிறிஸ்து நாதரின் சரித்திர நூல்கள் நம்மிடம் இருக்கின்றன. ஆகையால் அந்த ஆண்டவருடைய வாக்குக்குக் கிரியைகளினால் அவர் ஸ்தாபித்த மார்க்கத்தின் சாரத்தை நிச்சயமாய் அறிந்து கொள்ளலாம்.

கிறிஸ்தவர்களில் ஒரு சிலர் ஒரு வேளை துர்அபிப்பிராயங்களைப் பின்பற்றி பொய்யான உபதேசங்களைக் கைக்கொள்கிறவர்களாக இருக்கலாம். ஆனால் கிறிஸ்து நாதர் நியமித்த மார்க்கத்தில் யாதொரு பழுதும் கிடையாது. அவர் போதித்ததும், தம் சீஷருக்கு நியமித்ததும், சர்வ சத்தியமானவைகளே. அனால் மனிதர்களில் சிலர் கைக் கொள்பவைகள் ஒரு கால் சரியாயிருக்கும் பின்னொருகால் சரியாய் இருக்காது.

இயேசு நாதர் அருளி செய்த உபதேசங்கள், மனிதருடைய எல்லாப் புத்திக்கும் மேற்பட்டதாயிருந்தாலும் அவர் வெகு தெளிவாயும், பூரணமாயும் போதித்தமையால் கல்லாதவர்கள் அதன் முக்கிய பொருளை கிரகித்துக் கொள்ளலாம். மனிதர் அதிகமாய் பிரயாசித்து விசாரிக்கிற

தேவனுடைய சுபாவ இலட்சணங்களைக் குறித்தும், மனிதருடைய உண்மையான ஸ்திதியைக் குறித்தும் மனிதர் தேவனுடன் ஐக்கியப்படும் வழியைக் குறித்தும் அவர் வெகு தெளிவாய் போதித்தார்.

அல்லாமலும் அவர் தாம் செய்த உபகாரங்களினால் தேவனுடைய மட்டில்லா தயவைக் காண்பித்து தனது தெய்விக மாட்சிமையால் தேவனுக்கும் மனுஷருக்கும் ஊடே குறுக்கிட்ட பாவமேகத்தை சிதறடித்து எல்லா மனிதருக்கும் கர்ம நிவாரணமாகிய வழியை வெளிப்படுத்தினார். தாம் பாவ பரிகாரி என்றறிந்து நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன் என்றேயல்லாமல் பிதாவினிடத்தில் ஒருவனும் வரமாட்டான் என்று வெளிப்படையாய்த் திருவுளம் பற்றினார்.

கிறிஸ்து மார்க்கத்திற்கு இயேசு கிறிஸ்து நாதரே ஆதாரம். அவர் அவதார புருஷனான ஜெக ரட்சகராய் இருக்கிறார். ஆனபடியினால் கிறிஸ்து மார்க்கம் யாவரும் தழுவத்தக்கதே. அவர் அவதாரம் எடுத்து வந்த இரட்சகராய் இராத பட்சத்தில் ஆதாரம் கிடையாது. இந்த விஷயத்தில் கிறிஸ்தவ மார்க்கத்துக்கும் மற்ற மதங்களுக்கும் பெரிய வித்தியாசம் உண்டு. மற்ற மதங்களில் மத சித்தாந்தங்களும் மத ஆச்சாரங்களும் முக்கியமானவைகள். ஆனால் கிறிஸ்து மார்க்கத்தில் அவை முக்கியமானவைகளல்ல. மனுஷர் கிறிஸ்து மத உபதேசங்களைக் கைக்கொள்ளுகிறவர்களாய் இருந்த போதிலும் கிறிஸ்து மத ஆச்சாரங்களில் பூரண பக்தி வைராக்கியமுடையவர்களாய் இருந்த போதும் கிறிஸ்து நாதரின் பக்தர்களாக மாட்டார்கள். இயேசு கிறிஸ்து நாதரை நம்பி அவரை வேண்டுமென்கிற மனது உடையோர் பின் செல்கிறவர்கள் யாரோ அவர்களே கிறிஸ்து நாதரின் உண்மையான பக்தர். கிறிஸ்து மார்க்கத்தை விரோதிக்கிறவர்கள் இதைக் கண்டு கொள்ள முடியாமல் கிறிஸ்து மதசாராம்சத்தை விட்டு அநேக அற்ப சொற்ப சங்கதிகளை பைபிள் எனப்பட்ட வேதாகமத்திலும், கிறிஸ்தவர்கள் கையாடி வரும் ஆச்சாரங்களில் குற்றங்குறைகளை கண்டு பிடிக்க பிரயாசப்படுகிறார்கள் இது முழுவதும் அப்பிரயோஜனமானது.

தடாகத்தில் ஊடுருவி காணப்படுகிற சூரிய மண்டலத்தின் நிழலைச் சிதறடித்தால் சூரியனுக்கு யாதொரு குறைவு உண்டாகுமோ? தண்ணீர் எடுக்கும் பாத்திரங்கள் உடைந்து போனால் நதி வறறிப்போகுமோ? பைபிள் என்ற வேதாகம நூலில் கிறிஸ்துவின் நிஜசுரூபம் பிரகாசிக்கிறது. ஆகையால் வேத நூலில் சிலக்குறைகள் இருக்கிறது இருந்த போதிலும் முதற்பொருள் எவ்வளவாயிலும் பழுது படாது.

சகல ஜனங்களின் தாகத்தைத் தீர்க்கும் ஜீவ ஜலம் கிறிஸ்து நாதரிலிருந்து ஊறி எங்கும் ஓடிப் பாய்ந்து ஆச்சாரங்கள் முதலான கருவிகளின் வழியாய் மனிதருக்கு சித்தியாகின்றன. ஆனாலும், அவ்வகைக் கருவிகளில் ஒரு வேளை குறைவுகள் இருந்தால் கருணாநிதியாகிய அந்தக் கர்த்தாவின் மாட்சிமைக்கு யாதொரு குறைவுமே கிடையாது. ஆகையால் கிறிஸ்து மார்க்கத்தை பரிசோதனை பண்ணுகையில் கிறிஸ்து நாதர் சரித்திரத்தைக் கொண்டு அவர் செய்த காரியங்களையும் அவர் நியமித்த மார்க்கத்தையும் விசாரிக்க வேண்டுமேயொழிய மற்ற சங்கதிகளை விசாரிப்பதினால் பயன் ஒன்றுமில்லை. இயேசு கிறிஸ்து நாதரை நம்புவதும், அந்த நாதருக்கு மனதை ஒப்படைக்கிறதும், அவரை நேசித்து சேவிக்கிறதுமே கிறிஸ்து மார்க்கம்.

உண்மையாய் கிறிஸ்தவ மதத்தை தழுவாதவர்களுக்கு கிறிஸ்தவ மதத்தை செம்மையாய் கிரகிக்கக் கூடாது. அதைப் பரிசோதித்து விசாரணை பண்ணுவதால் பயன் ஒன்றுமில்லை.

நமக்கு நேரிட்ட பாவத்தைப் போக்கும் இரட்சகருடைய சங்கதியை விசாரித்

துத் தெரிந்து கொள்ளலாம். அனுபவம் பிரதானமாகையால் அந்த இரட்சகருடைய தயவை அனுபவித்தவர்களுக்கு மாத்திரம் பூரண நிச்சயம் உண்டு என்றாலும், அனுபவியாதவர்களுக்கு இவ்வித பூரண நிச்சயம் இல்லாவிடினும், அவர்கள் இந்த இரட்சகருடைய இலட்சணங்களை பரிசோதனை பண்ணி அவர் பாவங்களை பரிகரிக்கிற இரட்சகர்தானா அல்லவா என்பதை அநேக திருஷ்டாந்தங்களினால் அறிந்து கொள்ளலாம்.

மனிதர்கள் சாதாரணமாக இயேசு கிறிஸ்து நாதரைப் பற்றி சரியாக விசாரித்து அறியாமல் நிர்விசாரிகளாயிருக்கிறார்கள். இது அவிவேகம். சிலக்காரியங்கள் நமக்கு அனவசியமானகையால் நாம் அவற்றை விசாரித்தாலும் விசாரியாமற் போனாலும் நமக்கு அதனால் லாபமோ நஷ்டமோ இல்லை.

பூர்வ காலத்தில் அரசர்கள் எப்படி அரசாட்சி செய்தார்கள் என்றும், இக்காலத்தில் நானாவித தேசங்களில் எவ்வித சட்டங்கள் நியமிக்கப்பட்டிருக்கிறதென்றும் விசாரிக்கலாம். ஆயினும், இவைகள் அனுபவ சம்பந்தமானவைகள் அல்ல. ஆகையால் நாம் இவைகளை கிரகித்தாலும், கிரகிக்காமற் போனாலும், அவ்வளவு அவசியமில்லை. ஆனால் நம்மை ஆளுகிற அதிகாரிகள் எப்படிப்பட்டவர்கள் என்றும் அவர்கள் அமைத்த சட்டங்கள் எப்படிப்பட்டவைகள் என்றும் அறிகிற இப்படிப்பட்ட சங்கதிகள் மிகவும் அவசியமானவைகள். நாம் அவைகளை செவ்வையாக அறியாத பட்சத்தில் ஒரு வேளை தெரிந்தும் தெரியாமலும் சட்டத்தை மீறி அதிகாரிகள் முன்பாக குற்றவாளிகளாவோம். இப்படி குற்றத்தில் அகப்படும் பட்சத்தில் தெரியாமல் செய்தோம் என்று சொன்னாலும் பயனில்லை. எவ்வளவு அறிவீனராயினும் அதிகாரிகள் நியமித்த சட்டங்களை விசாரித்து அறிந்து கொள்ளலாம். ஆகையால் தக்கப்படி விசாரியாதவர்கள் துரோகிகள் என்னப்பட்டு அதிகாரிகள் விதிக்கும் தண்டனைக்கும் உள்ளாகும்படி நேரிடும். இந்த நீதியின்படி விசாரணை பண்ணினால் கிறிஸ்து மத விசாரணை முழுவதும் அவசியமானதென்று தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

கிறிஸ்து மார்க்கம் சத்தியமானதாக இருப்பதினால் இயேசு கிறிஸ்து நாதர் மனிதாவதாரம் எடுத்து நம்மெல்லாருக்காகவும் தம் ஜீவனை மரணத்துக்கு ஒப்புக்கொடுத்து நமக்கு மோட்ச வழியை நியமித்த லோக இரட்சகராகையால் நாம் எல்லாரும் அவருடைய மார்க்கத்தில் சேர்ந்து அவரிடத்தில் பக்தியுடையவர்களாகி அவருக்கு மனதார பணிவிடை செய்கிறதற்குக் கடமை பட்டவர்களாயிருக்கிறோம் என்பதற்கு சந்தேகமில்லை.

இவ்வித உத்திரவாதத்தோடே அசட்டை பண்ணி இரட்சகருடைய மட்டற்ற தயவை அவமதிக்கிறவர்கள் அதிக துரோகிகளாய் இருப்பார்கள். நமக்கு இவ்வளவு உபகாரம் செய்தவரை அசட்டை பண்ணி அவர் நியமித்த மார்க்கத்தில் சேராவிடில் நரக உபாதைகளுக்குத் தப்பி மோட்சகதி எப்படி அடைய முடியும்?

இயேசு கிறிஸ்து உலக இரட்சகராக இராத பட்சத்தில் அவரைப் பற்றி நமக்கு கவலையொன்றுமில்லை. ஆனால் அவர் உலக இரட்சகராய் இருக்கும் பட்சத்தில் அவருடைய மார்க்கத்தில் சேர்ந்து அவர் நிமித்தம் யாவற்றையும் வெறுத்துத் தள்ளி எவ்விதவாதையாயினும் எவ்வித கஷ்டங்களையாயினும் அநுபவிக்கிறதற்கு கடமை பட்டவர்கள் என்று சொல்வதற்கு சந்தேகம் ஒன்றுமில்லை. கிறிஸ்து மத விசாரணை விஷயத்தில் இக சுகமும் பரசுகமும் அடங்கியிருக்கின்றன. ஆகையால் ஒவ்வொருவனும் பட்சபாதத்தை முழுவதும் தள்ளி விட்டு அதிக முயற்சியுடன் கிறிஸ்தவ மத ஆச்சாரங்களை எவ்விதத்திலும் தெரிந்து கொள்ள வேண்டும்.

(தொடரும்.)



"அவராலேயன்றி [இயேசு கிறிஸ்து] வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை: நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழெங்கும், மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவும் இல்லை என்றான்"

அப். 4:12.



# சத்திய வேதம் [தொடர்ச்சி]

1. வேதம் சத்தியமானதை மாத்திரம் அறிவிக்க வேண்டுமென்ற முதலாம் இலட்சணம் இந்த வேதத்திற்கு உண்டு. நான்கு பிரமாணங்களைக் கொண்டு ஒரு வேதம் சத்தியம் என்பதை நிச்சயிக்கலாம். அவையாவன:

1. சம்பவித்ததாகச் சொல்லியிருக்கிற காரியங்கள் சம்பவித்தபோது மனிதருடைய கண்ணும் செவியுமாகிய இந்திரியங்கள் உணர்ந்து அறிந்து கொள்ளப்பட்டதாயிருக்க வேண்டும்.

2. அந்தக் காரியங்கள் உலகத்தில் அநேகருக்கு முன் வெளியரங்கமாய் செய்யப்பட்டிருக்கவேண்டும்.

3 அப்படி வெளியரங்கமாய் செய்யப்பட்ட காரியங்கள் பிற்காலத்தில் நினைவு கூரப்படும்படிக்கு, அவைகள் சம்பவித்தபோது தகுந்த குறிப்புகளும் அவைகளைக் குறித்த மனிதர்கள் செய்யத்தக்க கருமங்களும் ஸ்தாபிக்கப்பட்டிருக்க வேண்டும்.

4. அப்படிப்பட்ட குறிப்புகளும், கருமங்களும் காரியங்களும் காரியங்கள் சம்பவித்தது முதல் ஸ்தாபிக்கப்பட்டு கைக்கொள்ளப்பட்டு வரவேண்டும்.

இந்த நான்கு பிரமாணங்களில் முன்னிற்கிற இரண்டும் பிரத்தியட்ச பிரமாணங்களாய் (Demonstrating evidence) இருக்கின்றன. அவைகளைக் குறித்து எவ்வளவேனும் சந்தேகம் தோன்ற மாட்டாது. ஒரு எத்தன், நான் நேற்று சென்னைப் பட்டணத்திலிருக்கிற சமுத்திரத்தை ஒரு இடத்தில் வற்றப்பண்ணி ஜலம் இரு புறமும் மதிலாக நிற்க அந்த நகரத்தார் யாவரையும் அதில் நடக்கப் பண்ணினேன் என்று அபத்தத்தைச் சொல்லுவானானால் மனிதர்கள் அவனை நம்புவார்களோ? அவனைப் பித்தன் என்பார்களல்லவா? இல்லாவிட்டால் அவன் பொய்யை நம்ப அவர்களாவது பித்தர்களாய் இருக்க வேண்டுமல்லவா?

ஆகையால் ஒரு காரியம் பொய்யாயிருந்தால் புத்திசாலிகளால் உடனே நம்பப்படமாட்டாது. ஆனால் ஒரு வேளை ஒருவன் இந்தக் காரியம் வெகு காலத்திற்கு முன் சம்பவித்ததென்று பிற்காலத்தில் சொல்லி, மனிதர்கள் அதை நம்புவதற்கு எத்தனப்படலாம். அவன் அப்படி செய்தாலும் மேற்கண்டிருக்கிற இரண்டு கடைசிப் பிரமாணங்களினால் அவன் சொல்லும் காரியத்தில் மெய்யும், பொய்யும் விளங்கவரும். எப்படியும் அவன் இந்த சங்கதி 1000 வருஷத்துக்கு முன் நடந்தது என்று அபத்தத்தை சொல்லும்போது ஜனங்கள் அவனை நோக்கி நீ சொல்லுகிற காரியம் 1000 வருஷத்துக்கு முன் நடந்தது என்று சொல்வதற்கு நிருபணம் என்ன, அதற்கடுத்த குறிப்புகள் என்ன மனிதர்கள் அது சம்பவித்தது

முதல் செய்து கொண்டு வரும் கருமங்கள் என்னவென்று கேட்க அக்கேள்விகளுக்கு நியாயமான உத்தரவு அடையாமற் போனால் இவ்விதமான திருஷ்டாந்தமில்லாத காரியம் அபத்தமென்று தீர்மானிப்பார்களே.

இந்த நியாயங்கள் யாவருக்கும் யதார்த்தமாய்த் தோன்றுமாகையால் மோசேயையும், இயேசு கிறிஸ்துவையும் குறித்த காரியங்களின் உண்மையை இந்த நான்கு பிரமாணங்களினாலே திருஷ்டாந்தப்படுத்துவோம்.

1. மோசே ஆறு லட்சம் ஜனங்களை நோக்கி உங்கள் தேவனாகிய கர்த்தர் செய்த சிட்சையையும், அவருடைய மகத்துவத்தையும், அவருடைய பலத்த கையையும் அவருடைய ஓங்கிய புயத்தையும், அவர் எகிப்தின் நடுவிலே எகிப்தின் ராஜாவாகிய பார்வோனுக்கும், அவன் தேசமனைத்திற்கும் செய்த அவருடைய அடையாளங்களையும், அவருடைய கிரியைகளையும் எகிப்திய சேனைகளும் அவர்கள் குதிரைகளும் ரதங்களும் உங்களைப் பின் தொடர்ந்து வருகையில் கர்த்தர் சிவந்த சமுத்திர ஜலத்தை அவர்கள் மேல் புரளப்பண்ணி இந்நாள் வரைக்கும் இருக்கிறதுபோல அவர்களை அழித்த அவருடைய செய்கையையும் நீங்கள் இவ்விடத்துக்கு வருமளவும் அவர் உங்களுக்கு வனாந்திரத்தில் செய்ததையும், பூமி தன் வாயைத் திறந்து எலியாப் என்னும் ரூபன் குமாரரின் மக்களான தாத்தானையும் அபிராமையும் அவர்கள் குடும்பங்களையும் அவர்கள் கூடாரங்களையும் இஸ்ரவேலர் எல்லாருக்குள்ளும் அவர்களுக்கிருந்த அவருடைய சகல பொருட்களையும் விழுங்கும்படி செய்ததையும், அறியாமலும் காணாமலும் இருக்கிற உங்கள் பிள்ளைகளுடன் நான் பேசவில்லை இன்று நீங்களே அறிந்து கொள்ளுங்கள். கர்த்தர் செய்த மகத்துவமான கிரியைகளை எல்லாம் உங்கள் கண்கள் அல்லவோ கண்டது என்று சொன்னார் (உபா. 11:2-7)

இந்த சங்கதி உண்மையாய் இராமற் போனால் அவர் எவ்வளவு யதார்த்தமான தொனியோடு பொய்யைச் சொல்ல முடியுமா? அது அபத்தமானால் ஜனங்கள் அதை எளிதாய் ஏற்றுக் கொள்வார்களா? ஏற்றுக் கொள்ள மாட்டார்களே. ஏனெனில், மேற்கண்டிருக்கிற முதற் இரண்டு பிரமாணங்களில் நாம் கண்டு கேளாத காரியத்தை நீங்கள் கண்டபடியால் என்று சொல்லும் பொழுது யாரும் நம்பமாட்டார்கள், எதிர்த்துப் பேசுவார்கள் அல்லவா? அது உண்மையாய் இருந்தபடினாயிலே தான் அவர் எழுதின ஆகமங்களை மெய்யென்று யாதொரு சந்தேகமோ ஆட்சேபனையோ இல்லாமல் அங்கீகரித்துக் கொண்டார்கள்.

ஆனாலும் மோசேயின் ஆகமங்கள் மோசே என்பவருக்கு வெகு காலத்துக்குப் பின்பு எழுதப்பட்டு அவர் பேரினால் பிரசித்தப்படுத்தப் பட்டிருக்கலாம் என்று சிலர் சொல்வார்கள். அப்படிச் சொல்வதற்கு இடமில்லை. ஏனெனில், இந்த ஆகமங்கள் மோசேயினால் எழுதப்பட்டு அவர் கால முதல் உடன்படிக்கை பெட்டியிலே வைக்கப்பட்டிருந்ததாய்த் தெரிகிறது (உபா. 31. 24-26).

மோசே இந்த நியாயப்பிரமாணப் புஸ்தகத்தை எழுதித்தீர்ந்த போது அவன் கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியை சுமக்கிற லேவியருக்கு கற்பித்ததாவது நீங்கள் நியாயப்பிரமாண புஸ்தகத்தை வாங்கி அதை உங்கள் தேவனாகிய கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியின் பக்கத்திலே வையுங்கள். அங்கே அது உனக்கு எதிரான சாட்சியாக இருக்கும். அதுவுமின்றி இந்த ஆகமங்களில் ஒரு பிரதி ராஜாவினிடத்திலும் இருக்க வேண்டும் என்று கட்டளையும் இருந்தது (உபா. 17:18-20).

அவன் தன் ராஜ்யத்தினுடைய சிங்கா

சனத்தில் உட்கார்ந்து இருக்கும் பொழுது அவனுடைய இருதயம் அவன் சகோதரருக்கு மிஞ்சி உயராமலும், கற்பனையை விட்டு அவன் வலது இடது புறம் விலகாமலும் இந்த நியாயப்பிரமாணத்தின் எல்லா வார்த்தைகளையும் கட்டளைகளையும் கைக்கொண்டு அவைகளைச் செய்வதற்காக தன் தேவனாகிய கர்த்தருக்குப் பயந்து இருக்கும்படிக்கும் கற்றுக் கொள்ளும்படிக்கும், இப்படி அவனும் அவன் குமாரரும் இஸ்ரவேலின் நடுவே தன்னுடைய ராஜ்யத்திலே தங்கள் நாட்களை நீடிக்கப்பண்ணும்படிக்கும், அவன் லேவியராகிய ஆசாரியருக்கு முன்பாக இருக்கும் இந்த நியாயப்பிரமாண புஸ்தகத்தை தனக்கு எழுதி தன் கையில் வைத்திருந்து தன் ஜீவனுள்ள நாளெல்லாம் அதை வாசிக்கக்கடவன் (உபா. 17:18–20). இந்தக் காரியங்கள் பூரண அத்தாட்சியாய் இருக்கிறதே.

ஏனெனில் மோசேக்கு பின்னடியார் இந்த ஆகமங்களை எழுதி அவர் பேர் வழியாய் அவைகளை ஜனங்களுக்கு வேதப் பிரமாணமாகக் கொடுத்திருந்தால் ஜனங்கள் அவைகளை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். ஏனெனில் இந்த ஆகமங்களில் சொல்லியிருக்கிறபடி காரியங்கள் சம்பவித்த கால முதல் இது வரைக்கும் இந்த ஆகமங்கள் உடன்படிக்கைப் பெட்டியில் வைக்கப்பட்டிருந்தது. அப்படி இல்லையென்றால் உடன்படிக்கைப் பெட்டியில் வைக்கப்பட்டிருக்கவுமில்லை, ராஜாக்கள் வசத்தில் இருக்கவுமில்லை என்று சொல்வார்களல்லவா?

அதுவுமின்றி இந்த ஆகமங்கள் யூதர்களுக்கு வேத நியாயங்களை மாத்திரமல்ல, நீதி நியாயங்களையும், மத ஆச்சாரங்களையும் கற்பித்தபடியால் இந்த ஆகமங்கள் மோசேக்கு வெகு காலத்துக்குப் பின்பு நூதனமாய் உண்டாக்கப்பட்டிருக்குமானால் ஜனங்கள் அவைகளை அங்கீகாரம் பண்ணி இந்த ஆகமங்களில் சொல்லியிருக்கிறவைகள் எங்கள் முன்னோருடைய சடங்காச்சாரங்கள் தான் என்று எளிதாய் அங்கீகரிக்கமாட்டார்களே. அன்றியும், மோசேயினுடைய ஆகமங்கள் யூதர்களுடைய சடங்காச்சாரங்களின் பூர்வத்தை தெளிவாய் அறிவித்திருக்கிறது.

எகிப்தின் தலைச்சன் பிள்ளைகள் மரணமடைந்தது குறிப்பாக பஸ்கா பண்டிகையையும் (எண். 8:17,18) ஒரேப் மலையில் தேவன் பயங்கரமாக காட்சி கொடுத்ததற்கு குறிப்பாக பெந்தெகொஸ்தே திருவிழாவும் கொண்டாடப்பட்டது. தவிரவும் தேவாலயத்தில் பத்துக் கற்பனையின் கற்பலகையும் துளிர்த்த ஆரோனின் கோலும் வனாந்திரத்தில் நாற்பது வருஷமாய் இஸ்ரவேலருக்குக் கொடுக்கப்பட்ட மன்னாவில் கொஞ்சமும் வைக்கப்பட்ட பொற்பாத்திரமும் இருந்ததே வனாந்தரத்தில் கொள்ளிவாய் சர்ப்பங்களினாலே ஜனங்கள் கடிக்கப்பட்டபோது தேவக்கட்டளையினால் ஒருசர்ப்பத்தைச் செய்து ஒருக் கம்பத்தில் உயர்த்தப்பட்டு அதை நோக்கிப்பார்த்தவர்கள் எல்லாருக்கும் ஆரோக்கியத்தைக் கொடுக்க வெண்கல சர்ப்பம் எசேக்கியா ராஜாவின் காலம்மட்டும் வைக்கப்பட்டிருந்ததே (லேவி. 21:9; 2 இரா. 18:4).

மேலும் லேவியின் கோத்திரத்தார் மாத்திரம் ஆசாரிய பீடத்திற்கு உரியவர்கள் என்றும் அவர்கள் மாத்திரம் ஆராதனை முதலியவற்றை நடத்த வேண்டும் என்றும் மோசேக்குப்பின்னடியார் பூர்வ முதலில்லாத சட்டத்தை நூதனமான பிரமாணத்தை, ஜனங்களுக்கு கொடுத்திருப்பார்களானால் ஜனங்கள் எளிதாய் அந்த நூதனக் கட்டளையை ஏற்றுக் கொண்டு ஒரு கோத்திரத்திற்கு மாத்திரம் இவ்வளவு கனத்தைக் கொடுத்திருப்பார்களா?

அன்றியும் மோசே வஞ்சகரானால் மிகவும் மேன்மையும், பரிசுத்தமான பிரமாணங்களை உண்டு பண்ண மாட்டாரே அவர் பொய்யை உரைத்திருப்பாரானால் ஆறு லட்சம் பேரில் ஒருவனாகிலும் அந்தப்பொய்யை வெளிப்படுத்த மாட்

டானா? மோசே வஞ்சகரானால், தற்பொழிவை விரும்பி மேன்மையையும், செல்வத்தையும் தேடுவாரே. அவர் அப்படிச் செய்யாமல் தன் சொந்த குற்றங்களையும் மறைக்கவில்லையே. பலபேர் கூடி இந்த வஞ்சகத்தைச் செய்தார்கள் என்றாலும் தாங்கள் சொந்த குற்றங்களை மறைத்திருப்பார்களே.

மோசே வஞ்சகரானால் வணங்காகழுத்துள்ள யூதர்கள் பாரமான நுகத்தடியாகிய நியாயப் பிரமாணத்திற்குக் கீழ்ப்படிவார்களா? கீழ்ப்படியமாட்டார்களே. ஆனால் மோசேயின் நாமத்தில் எழுதப்பட்ட ஆகமங்கள் வெகு காலத்துக்கு முன்னமே கைக்கொள்ளப்பட்ட சடங்குச் சட்டங்களை பல முகாந்தரங்களைச் சொல்லி உறுதிப்படுத்தப்பட்டன என்போமானால் யூதர்கள் கைக்கொண்டிருக்கிற சடங்குச் சட்டங்கள் முதலியவை அர்த்தமும் நோக்கமும் இல்லாமல் கைக்கொண்டார்கள் என்று சொல்ல வேண்டியதாகுமே. அப்படி சொல்வது நியாயமாகுமோ?

2. மேற்படி கண்டிருக்கிற நான்கு பிரமாணங்களினாலும், மோசேயின் ஆகமங்களிலுள்ள காரியங்கள் சத்தியம் என்று திருஷ்டாந்தப் பட்டது போல சுவிசேஷத்திலுள்ள காரியங்களும் இந்த நான்கு உறுதியான பிரமாணங்களினாலே சத்தியம் என்று நியமிக்கப்படுகிறது.

சுவிசேஷத்தில் சொல்லியிருக்கிற கிறிஸ்துவினுடைய நடபடிகளும் அற்புதங்களும் உலகத்தார் காண வெளியரங்கமாய்ச் செய்யப்பட்டது. நான் வெளியரங்கமாய் உலகத்துடனே பேசினேன். அந்தரங்கத்திலே நான் ஒன்றும் செய்யவில்லை யோ. 18:20) என்றார் இயேசு. யோவானுடைய சாட்சியைப் பார்க்கிலும் மேன்மையான சாட்சி எனக்கு உண்டு. அது என்னவெனில் நான் நிறைவேற்றும்படி பிதாவானவர் எனக்கு கற்பித்ததும், நான் செய்து வருகிறதுமான கிரியைகளே பிதா என்னை அனுப்பினார் என்று என்னைக் குறித்து சாட்சி கொடுக்கிறது என்று இயேசு சொன்னார் (யோ. 5:36)

இந்த சாட்சி பிரமாணத்தினால் ஒரு விசை 3000 பேரும், இன்னொரு விசை 5000 பேரும், உறுதியடைந்து கிறிஸ்து மார்க்கத்தை அங்கீகாரம் பண்ணினார்கள் (அப். 2:41;4:4). இப்படி பிரத்தியட்சமாய் சம்பவிப்பவைகளுக்கு குறிப்புகளாகவும், ஜனங்கள் அந்தக் குறிப்புகளைக் கருமங்களாக கைக்கொள்ளும்படிக்கு ஞானஸ்நானமும் நற்கருணையும் ஸ்தாபிக்கப்பட்டது.

அன்றியும் 1993 வருஷங்களுக்கு முன்னே யூதேயா நாட்டிலே பாவ நாசகராக மரணமடைந்து எழுந்த பரவசமான சற்குருவாகிய இயேசு கிறிஸ்து பிரத்தியட்சமாய் சம்பவித்தவைகளை உலகத்தாருக்குப் பிரயோஜனமாய் அறிவிக்கவும், சம்பவித்தவைகளை குறிப்புகளை நியமிக்கப்பட்ட ஞான நன்மைகளுக்காகவும், அப்போஸ்தலர்களாகிய போதகர்களையும், அவர்கள் வழியாய் உலகம் முடியும் மட்டும் தொன்று தொட்டு உண்டாக்கிவருகிற குருக்கள்மாரையும், அவர்கள் வழியாய் திருச்சபை சுவிசேஷப் பிரமாணங்களைக் கைக்கொண்டு அசையாமல்பெருகி வாழ்ந்து இருக்கவும் ஸ்தாபனம் பண்ணினார் (மத். 18:20). இப்படிப்பட்ட உறுதியான திருஷ்டாந்தங்களினாலே கிறிஸ்து மார்க்கத்தின் உண்மை விளங்குவதை அறிவுள்ளோர் உணராமல் இருக்கமாட்டார்கள்.

அப்போஸ்தலர்கள் கண்டதையும், கேட்டதையும், தொட்டதையும், குறித்து எழுதியிருக்கிறார்கள் (1 யோ. 1:1). நாங்கள் கண்டவைகளையும் கேட்டவைகளையும் பேசாமல் இருக்கக் கூடாதே என்றார் (அப். 4:20). அவர்கள் எழுதினதினால் அவர்கள் வஞ்சிக்கப்பட்டவர்கள் அல்ல என்றும், தாங்கள் மற்றவர்களை வஞ்சிக்கிறவர்கள் அல்ல என்றும் விளங்குகிறதே அவர்கள் நெறிதப்பாமல் நடந்தார்கள் என்று சத்துருக்களும் சாட்சியிட்டார்களே.

அன்றியும் அவர்கள் உலக நன்மையை நாடாதவர்களாயிருக்க எதற்காக வஞ்சகராக இருக்கக் கூடும்? அவர்கள் சத்தியத்தை அறிவித்ததற்காக உலகத்திலே ஜனங்களால் துன்பத்தையும், தரித்திரத்தையும், மரணத்தையும் பெற்றுக் கொண்டார்கள். வஞ்சகர்கள் தங்கள் சொந்த குற்றங்களை அறிவித்து நீதியும் பரிசுத்தமுமான பிரமாணங்களைக் கொடுப்பார்களா? அன்றியும் அவர்கள் பொய்யரானால் அற்புதங்களைச் செய்யும் வரத்தை தேவனால் பெற்றுக் கொள்ள முடியுமா? தேவன் பொய்க்குச் சாட்சி கொடுக்க மாட்டாரே.

இந்துக்களும், மகமதுமார்க்கத்தார்களும் தங்களுக்கும் பல அற்புதங்கள் நடந்தனவென்றும் தங்களுக்குள்ளும் வேதமும், திருநாட்களும், சடங்காச்சாரங்களும் குருக்கள்மார்களும் இருக்கிறார்கள் என்றும் அதற்கு தங்கள் மதங்களும் உண்மை என்று சொல்லத் துணிவார்கள். அப்படிச் சொல்லத் துணிகிறவர்கள் மேற்படி கண்டிருக்கிற நான்கு பிரமாணங்களினால் தங்கள் வேதங்களின் உண்மையைத் திருஷ்டாந்தப் படுத்துவார்களானால் அப்பொழுது அவர்கள் சொல்வது அங்கீகரிக்கக் கூடியதே.

நல்ல வெள்ளிப் பணம் இருக்கிறதினாலே செல்லாத ஈயப்பணமும் உண்டாக்கப்பட்டிருக்கிறது. சத்திய வேதம் பூரண திருஷ்டாந்தங்களோடு இருக்கிறதினாலே பொய் வேதங்களும் மெய்யைப் போல பரிமளிக்க சில நல்ல குறிப்புகளை உடையதாயிருக்கிறது ஆச்சரியமல்லவே.

False religion is but a ~~Correction~~ Perversion of the truth.

[தொடரும்.]

"தீர்க்கதரிசனமானது ஒரு காலத்திலும் மனுஷருடைய சித்தத்தினாலே உண்டாகவில்லை; தேவனுடைய பரிசுத்த மனுஷர்கள் பரிசுத்த ஆவியினாலே ஏவப்பட்டுப் பேசினார்கள்". 2 பேது 1:21.

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

### எண்ணாகமம் 10-ம் அதிகாரம் பாளயம் புறப்பட வேண்டிய ஒழுங்குகள்.

ஆசரிப்புக் கூடாரம் அமைக்கப் பட்டதும் கர்த்தருடைய மகிமையாகிய மேகம் மகா பரிசுத்த ஸ்தலத்தின்மேல் வந்து தங்கி இருந்தது (எண். 9:15). இது பகலில் மேகமாகவும், இரவில் அக்கினி ஸ்தம்பமாகவும் தோற்றமளித்து ஆசரிப்புக் கூடாரத்தை மூடிக் கொண்டது. மேகம் கூடாரத்திலிருந்து எழும்பும் போது இஸ்ரவேலர் யாத்திரை புறப்பட்டனர். மேகம் தங்கும்போது பாளயமிறங்குவார்கள் (எண். 9: 15-17; 17-22) மேகம் எழும்புவதைக் கண்டவுடன் ஆசாரியர்கள் பூரிகைகளை ஊதுவார்கள். இவ்விதமாக ஊதும்படியாக இரண்டு வெள்ளிப் பூரிகைகள் அடித்து ஆயத்தமாக்கப்பட்டிருந்தது (எண். 10:1). மேகம் எழும்புவதைக் கண்டவுடன்

பாளயம் புறப்பட ஆசாரியர்கள் பூரிகைகளை பெருந்தொனியாய் முழங்க வேண்டும் (எண். 10:5-7).

ஆரோனின் குமாரரோ, பெட்டி மேஜை, குத்து விளக்கு, தூபபீடம், தொட்டி, பலி பீடம் இவற்றிற்குரிய தட்டு முட்டு யாவற்றையும் துப்பட்டியால் சுற்றி தகசுத் தோல் மூடியால் மூடி கட்டிவைக்க வேண்டும். கோகாத்தியர் அவைகளை பார்க்கவோ தொடவோ கூடாது. ஆரோனும் அவனுடைய குமாரரும் கோகாத்தியரை அவனவன் சுமக்கும் வேலையை நியமிக்க வேண்டும். கெர்சோனியர், வாசஸ்தல மூடி, கூடார மூடி, கூடார வாசல் மறைவு கூடார தொங்கு திரை, பிராகார வாசல் மூடு திரை கயறு இவற்றைக் கட்டி, தங்களுக்குக் கொடுக்கப்பட்ட இரண்டு வண்டில்கள் மேல் வைக்க வேண்டும் (எண். 4:21-26). மெராரியரோ வாசஸ்தலத்தின் பலகைகள், தாழ்ப்பாள்கள் தூண்கள் பாதங்கள், பிராகாரத் தூண்கள், பாதங்கள், கைகள் முளை கள் இவைகளைக் கட்டி தங்களுக்குக் கொடுத்த வண்டில்கள் மேல் வைக்க வேண்டும் கர்த்தர் சொன்னபடியே கூடாரங்களைப் பெயர்த்து விட்டு புறப்படுவார்கள்.

முதலாவது யூதா கோத்திரத்தார் தங்கள் கொடியுடன் புறப்படுவார்கள். அவர் களோடு இசக்கார் செபுலோன் கோத்திரங்கள் புறப்பட்டுச் செல்லும். பின்னாலே கெர்சோனியரும், மெராரியரும் இறக்கிவைத்த வாசஸ்தலத்தைக் கொண்டு செல்வார் கள். பின்னர் எக்காளம் பெருந்தொனியாய் முழங்கும். அப்பொழுது தெற்கேயி யிருந்து ரூபன் கோத்திரம் தங்கள் கொடியுடன் புறப்படும். கூடவே, சிமியோன், காத் கோத்திரங்கள் செல்லும். இவர்கள் பின்னாலே கோகாத்தியர் பரிசுத்த பணி முட்டுகளை சுமந்து கொண்டு செல்வார்கள். அவர்களுக்கு பின்னால் எப்பிராயீம் கோத்திரம் தங்கள் கொடியுடன் சென்றது. அவர்களோடு மனாசே, பென்யமீன் கோத்திரத்தார் செல்வார்கள். முடிவாக தாண் கோத்திரத்தார் தங்கள் கொடியுடன் புறப்பட்டு செல்வார்கள். அவர்களோடு ஆசேர், நப்தலி கோத்திரத்தார் செல்வார் கள். இதுவே இஸ்ரவேலரின் யாத்திரையின் ஒழுங்கு.

மூத்தவனாகிய ரூபனின் கோத்திரம் முதலாவதாக செல்லாத காரணம்.

யாக்கோபுக்கு, பன்னிரண்டு ஆண்பிள்ளைகள் இருந்தார்கள். ரூபன், சிமி யோன், லேவி, யூதா, தாண், நப்தலி, காத், ஆசேர், இசக்கார், செபுலோன், யோசேப்பு, பென்யமீன் என்பவர்களே அவர்கள் (ஆதி. 35:22,26). ரூபன் யாக் கோபின் மூத்த குமாரன். இவனே யாக்கோபின் சகல சுதந்தரத்திற்கும் முதன்மை யானவன். ஆபிரகாமின் வம்சம் பெருகி வரவே யாக்கோபிலிருந்து கோத்திரப் பிதாக்கள் பகுக்கப்பட்டார்கள். அவர்களுக்குள் நான்கு முக்கியப் பதவிகள் ஏற்ப டுத்தப்பட்டன.

1. முதற்பிறப்பு சுதந்தரம் 2. ஆசாரிய ஊழியம் 3. ராஜாதிபத்தியம் 4. சேனைத் தலைவன். இந்த நான்கு பதவிகளும் மூத்தவனுக்கே உரியது. ஆனால் மூத்தக் குமா ரனாகிய ரூபன் இந்த நான்கு பதவிகளில் ஒன்றுக்குக் கூட தகுதியில்லாதவனாய்ப் போய்விட்டான். ஆதலால் முதல்வனாகப் பிறந்த ரூபனுக்கு ஒன்றாகிலும் கிடையாமல் போயிற்று.

1. ரூபன் முதற்பிறப்பு சுதந்தரத்தை இழந்தான்.

ரூபன் யாக்கோபின் மூத்த குமாரன். மூத்த குமாரன் முதற் பிறப்பு சுதந்தரத்

திற்கு உரிமையானவன். தகப்பனுடைய சுதந்தரத்தில் அவனுக்கு இரண்டு பங்கு உண்டு (உபா. 21:17). ரூபனின் பொல்லாத இச்சையான குணமே தகப்பனின் சுதந்தரத்தை இழக்கச் செய்தது. ரூபனின் தகப்பனாகிய யாக்கோபு சிலகாலம் ஏதேர் என்னும் கோபுரத்துக்கு அப்பாலே கூடாரம் போட்டு தங்கியிருந்தார். இதையறிந்த ரூபன் வஞ்சனையாக தன் தகப்பனுடைய மறுமனையாட்டியாகிய பில்காளைத் தீட்டுப் படுத்தினான் (ஆதி. 35:21,22). இதை யாக்கோபு அறிந்தார். யாக்கோபு தன் அந்திய வேளையில் மக்களை ஆசீர்வதிக்கும்போது ரூபனையோ சபித்தார் (ஆதி. 49:1-4). ரூபனே, தண்ணீரைப் போல தளம்பினவனே நீ மேன்மையடைய மாட்டாய் உன் தகப்பனுடைய மஞ்சத்தின் மேல் ஏறினாயே என்று சாபமிட்டார்.

ஆகவே ரூபனின் இச்சை நிறைந்த குணத்தால் ஸ்திரமில்லாதவனாய்ப் போய் விட்டான். ஆதலால் யாக்கோபு ரூபனுக்கு செல்ல வேண்டிய சேஷ்ட புத்திர பாகத்தை ஸ்திரமுள்ளவனும் தன்னை ஆறுதல் படுத்தினவனுமான யோசேப்புக்கு கொடுத்தான் (1 நாளா. 5:1). ஆதலால் யாக்கோபு யோசேப்பின் இரண்டு பிள்ளைகளாகிய எப்பிராயீம், மனாசே என்பவர்களை ஆசீர்வதித்து இரண்டு கோத்திரப்பிதாக்களாக்கினார். யோசேப்புக்கு சேஷ்ட புத்திர பாகம் கிடைத்தது. ரூபனோ அதை இழந்தான். இச்சையே அவனது சேஷ்ட புத்திரபாகத்தை இழந்து போகும்படி செய்தது.

2 ரூபன் ஆசாரிய ஊழியத்தை இழந்தான்.

கர்த்தர் இஸ்ரவேல் ஜனத்தை எகிப்திலிருந்து விடுதலையாக்கி சீனாய் மலையண்டையில் கொண்டு வந்தார். அங்கிருந்து மோசேயை கர்த்தர், சீனாய் மலை உச்சிக்கு அழைத்தார். அவர் கர்த்தரிடமிருந்து பத்துக் கற்பனைகளை வாங்கிக் கொண்டு வருவதற்குள்ளாக ஜனங்கள் மோசேயைக் காணவில்லை அவருக்கு என்ன சம்பவித்ததோ ஆதலால் எங்களுக்கு முன் செல்லும் தெய்வம் உண்டாக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டபடியால் ஆரோன் கன்றுக் குட்டியை தெய்வமாக உண்டு பண்ணிக் கொடுத்தார். யாவரும் அதை வணங்கினார்கள். அப்பொழுது கர்த்தர் மோசேயை அனுப்பினார். மோசே வந்து கர்த்தருடைய பட்சத்தில் நிற்கிறவன் யார் என்று கேட்டார். ரூபன் கோத்திரத்திற்கோ உணர்ச்சி இல்லை, இச்சை மயக்கத்தால் நிறைந்தவர்கள். ஸ்திரமில்லாதவர்கள், இப்படிப்பட்டவர்களுக்கு மேன்மையடைய முடியாது. அந்த மயக்கம் மாற்றப்படாதபடியால் கர்த்தருடைய பட்சத்தில், மோசேயின் பக்கம் நின்றவர்கள் தேவ சித்தப்படி பட்டயத்தை எடுத்து பாவஞ் செய்த மூவாயிரம் பேரை வெட்டினார்கள் அசாரிய ஊழியம் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. ரூபன் அசாரிய ஊழியத்தை இழந்தான். அசாரிய ஊழியம் மேன்மையுள்ளது. ஊழியனோ எப்போதும் எல்லாவற்றிலும் இச்சையடக்கமுள்ளவனும், ஸ்திரமுள்ளவனுமாய் இருக்க வேண்டும் ரூபனோ அதையும் இழந்தான். இச்சை அசாரிய ஊழியத்தையும் இழக்கச் செய்தது

3. ரூபன் ராஜாதிபத்தியத்தை இழந்தான்.

ஒருவன் ராஜாவின் குடும்பத்தில் பிறந்தால் தகப்பனுக்கு பின்னர் அவனே ராஜாவாக வர வேண்டும் பரம்பரையாய் ராஜாவாய் ஆண்டு வருவது வழக்கம். அப்படியே இஸ்ரவேலர்கள் கானானுக்குச் சென்றால் ரூபன் கோத்திரமே ராஜபதவி பெற்று ராஜாவாய் ஆளவேண்டியவர்கள். ஆனால் அந்த பதவியும் ரூபனுக்குக் கொடுக்கப்

படாமல் யூதாவுக்கு கொடுக்கப்பட்டது. காரணம் ரூபனின் இச்சையே. வரப்போகிற மேசியாவாகிய இயேசு ராஜாவும் யூதாவில் தோன்ற வேண்டியதாயிற்று (1 நாளா.5:2). இச்சை நிறைந்தவனும், ஸ்திரமில்லாதவனுமான சுபாவம் ராஜ பதவியையும் இழக்கச் செய்யும். யூதா, சகோதரரால் புகழ்ச்சி பெற்றவன். சிங்கம் போல் தைரியசாலி. உறுதியுள்ளவன். ரூபன் இழந்த பாக்கியத்தை யூதா அடைந்து கொண்டான் (ஆதி. 49:8-11). இச்சையே ராஜபதவியையும் இழக்கச் செய்தது ரூபனை.

**4. ரூபன் சேனையின் முன்னே போவதை இழந்தான்.**

இஸ்ரவேலர் சேனையாக போகும்போது யாக்கோபின் மூத்த குமாரனான ரூபனின் கொடி தன் தம்பிமாருக்கு முன்னதாக பிடிக்க வேண்டியதாயிருந்தது. ஆனால், இப்பொழுது மூத்தவனாகிய ரூபனின் கொடியோ ஒரு பேடியைப் போல பின்னே போக நேர்ந்தது. யூதாவோ தன்னுடைய கெம்பீரமான கொடியுடன் தலைமை பிரதிநிதி [CHIEF REPRESENTATIVE] போல் முன்னே போகிறான். இச்சையுள்ளவனும், ஸ்திர மில்லாதவனும் முன்னணியில் போக முடியாது. முன்னணியில் போகும்போது இச்சைக்குரிய காரியங்களைக் கண்டால் இடறுவான்.

ஏலியின் காலத்தில் இழந்துபோன பெட்டியை தாவீதின் காலத்தில் காளை பூட்டின இரதத்தில் ஏற்றிக் கொண்டு வந்தார்கள். நாகோனின் களம் வந்ததும் மாடுகள் மிரண்டன. பெட்டி அசைந்தது. ஊசா பெட்டியைப் பிடித்தார். கர்த்தர் ஊசாவை அடித்தார் ஊசா செத்தான் (1 சாமு. 4:22; 2 சாமு. 6:1-3). களத்தில் மாடுகள் இச்சிக்ககூடிய புல்லோ, வைக்கோலோ இருந்ததே காரணமாக இருக்கலாம் இச்சையுள்ளவர்கள் முன்னே சென்றால் இச்சைக்குரிய காரியங்களை காணும் போது இடறுவார்கள். இச்சைக்குரியவனால் தேவனுடைய சபையும் பாழாகும், அதனால் இச்சைக்குரியவனுக்கு முன்னணியில் போகும் பாக்கியம் இல்லை. ரூபன் அதையும் இச்சையால் இழந்தான் யூதாவோ அதைப் பெற்றுக் கொண்டான் என்பதே.

(தொடரும்)



"பெட்டி புறப்படும்போது மோசே கர்த்தாவே, எழுந்தருளும் உம்முடைய சத்துருக்கள் சிதறடிக்கப்படுவார்களாக உம்மைப் பகைக்கிறவர்கள் உமக்கு முன்பாக ஓடிப்போவார்களாக என்பார். அது தங்கும் போது கர்த்தாவே, அநேக ஆயிரவர்களாகிய இஸ்ரவேலரிடத்திற்குத் திரும்புவீராக என்று சொல்லுவார் அப்படியே ஆயிற்று.





பரிசுத்தவிவாகம்



| மணமகள் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. வசந்த்குமார் ஆசீர் | Sis. எப்சிபாய் | வள்ளியூர் | 28-4-1993 |

# கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மரணம் ஒரு தெய்வீக பலி.

பலி: ஆதி கால முதலே எல்லா ஜாதி ஜனங்களிடம் தொன்று தொட்டு பலி முறை பழக்கத்திலிருக்கிறது. ஆதாமுக்கும் ஏவாளுக்கும் தேவன் தோலுடைகளை உண்டுபண்ணியுடுத்தினார் என்பதினால் மனித சரித்திரமும் பலியின் சரித்திரமும் சம காலத்திலுடையதே. ஆபேலின் பலிகளைப் பற்றி ஆதி. 4:4; எபி. 11:4ல் வாசிக்கிறோம்.

பூர்வ காலங்களில் மனிதன் தேவதயவையடையவும், தேவனிடத்தில் மன்னிப்பைப் பெறவும், தான் ஆசித்த ஆசீர்வாதங்களைப் பெறவும் பலியிட்டு வந்தான். பிறமதங்களில் அருவருப்பான ஏன், நரபலிகளும் கூட கொடுக்கப்பட்டு வந்தன, வருகிறது ஆனால் வேதாகமத்தில் வித்தியாசமான ஒரு பலியின் சரித்திரம் காணப்படுகிறது. வரப்போகிற மெய்யானபலிக்கு அடையாளமான பற்பல பலிகள் பழைய ஏற்பாட்டின் காலத்தில் செலுத்தப்பட்டு வந்தாலும், மெய்யான பலியொன்று நிறைவேறப் போகிறதென்ற உணர்வுடனே எபிரேய மக்கள் அப்பலிகளை செலுத்திவந்தார்கள்.

நரபலியை மெய் தேவன் மிகவும் வெறுத்தார். தீர்க்கதரிசிகள் அவ்விதமான அருவருப்பான பலிகளைக் கண்டித்தனர். இஸ்ரவேலர்கள் அடிக்கடி புற ஜாதிகளைப்பின்பற்றி விக்கிரகாராதனையையும், விக்கிரகாராதனைக்காரரையும் பின்பற்றி நரபலியையுமிட ஆரம்பித்தனர். அதைத் தீர்க்கதரிசிகள் மிகக் கடுமையாய் எதிர்த்தனர் (எரே. 7:31,32;35; எசே. 16:20,21;23:37). எல்லாவிதமான பலிகளுக்கும் முடிவு உண்டாகப்போகிறது என்றறிவித்தனர்.

ஒருவன், தான் செய்தது பாவம் என்றறிய ஆரம்பித்ததும் அதற்கான பலி மிருகத்தையோ பறவையையோ கொண்டு ஆசரிப்புக் கூடாரத்துக்குப் போய் ஆசாரியனிடம் பாவத்தை அறிக்கை செய்ய வேண்டும். ஆசாரியன் அவன் கைகளை அந்த மிருகத்தின் தலையின்மேல் வைக்கச் செய்து அந்த பாவத்தை அறிக்கை செய்து அதின் மேல் சுமத்தி, அப்பலியை பலியிட்டு அதின் இரத்தத்தை பலிபீடத்தின் மேல் தெளித்து அவனுக்காக பாவநிவிர்த்தி செய்வான். அப்பொழுது அவன் செய்த பாவம் அவனுக்கு மன்னிக்கப்படும். இப்படி இஸ்ரவேலர் தேவனுக்கு உற்சாகமாய்:

1. சர்வாங்க தகனபலி

2. அவரருளிய ஆகாரங்களுக்கு நன்றி ஏறெடுக்கும்படியாக போஜனபலி

3. அவரோடு சமாதானமாய், உறவோடு இருக்கிறதற்கு அடையாளமாக சமாதானபலி.

4. பாவஞ் செய்தால் பாவ நிவாரண பலி.

5. குற்றம் புரிந்தால் குற்ற நிவாரண பலி முதலிய பலிகளையும், இன்னும் அநேக பலிகளையும் செலுத்தி வந்தனர். ஆனால் அவர்களுக்கு பாவத்திலிருந்து முழு நிவாரணம் கிடைக்க வில்லை. வேறொரு பலியை இஸ்ரவேலர்கள் எதிர் பார்த்திருந்தனர்.

தேவனே, தம்மண்டை மனிதன் கிட்டிச் சேர தடையாய் இருக்கும் பாவத்தை அகற்ற ஒரு பெரிய பலியை செலுத்தி மனிதனை தம்மண்டை சேர்த்துக் கொள்வார் என்று பலி முறைகள் போதிக்கின்றன என்றுணர்ந்தனர். இக்காலத்தில்

தேவன் தம்முடைய குமாரனை இவ்வுலக மக்களின் பாவத்தை போக்கும் பலியாக அனுப்பி பாவத்துக்கு முடிவு கட்டினார்.

தெய்வத்துவத்தில் ஒருவராகிய (Member of Trinity) இயேசு கிறிஸ்து மனிதனாகக் கன்னி வயிற்றில் பரிசுத்த ஆவியினால் உற்பவித்து பாலகனாய்ப் பிறந்தார். அவரைக் கண்ட தீர்க்கதரிசியாகிய யோவான் ஸ்நானன், "இதோ உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்க்கிற தேவாட்டுக் குட்டி, இவரே முடிவான பலி" என்று சுட்டிக் காட்டி அறை கூவி அறிவித்தார் (யோ. 1:29). உலகத்தில் எல்லோரும் பிழைக்கும்படி வந்தார்கள். இவரோ மனுமக்களுக்காக தம்முடைய ஜீவனைக் கொடுக்கும்படி பலியாக வந்தார். உலகில் பிறந்த மனிதர்களில் இவரைத் தவிர மற்ற எல்லாரும் பாவஞ் செய்து தீட்டுப்பட்ட பாபிஷ்டிகளாக, பாவத்தைச் செய்து மரணத்தை தழுவினவர்களாக இருக்கிறார்கள். பாவஞ் செய்யாத முதல் மனிதன் இயேசு கிறிஸ்துவே (மரித்தோரிலிருந்து முதன் முதலாவது எழுந்தவரும் இயேசு கிறிஸ்துவே).

## பலி

பலியிடுகிறவன் தன் உயிரைக் காக்க பிறிதொரு உயிரை பலியாக கொடுக்கிறான் என்றும் பலியிடுகிறவன் பலியோடு தன்னை இணைத்து தனக்கு பதிலாக பலியிடப்படும் மிருகத்துடன் தன்னுடைய ஆவியை இணைத்து தன்னைத் தாழ்த்தி தானே பலியிடப்படுவதாக எண்ணி பாவத்திற்காக மனஸ்தாபப்படுவதினால் பாவ மன்னிப்பு உண்டாகும் என்றும் கருதப்படுகிறது.

ஆனால் நாளடைவில் பலியில் வல்லமை இருக்கிறது என்றும், பலியிடுகிறவனுக்கு உணர்ச்சி இருந்தாலோ இல்லாவிட்டாலோ நியாயப்பிரமாணத்தின்படி பலியிட்டு விட்டால் போதும் என்றும் மக்கள் எண்ணவாரம்பித்தனர். அதலால்முற்காலத்தின் பலிகள் மனிதன் பாவத்தை நிவிர்த்தி செய்யக் கூடாமற் போயிற்று. ஆதலால் மனிதனின் பாவத்தை போக்கத் தக்தான இன்னொரு பலி, இன்னொரு மார்க்கம் அவசியமாயிற்று. கடவுளின் சித்தத்திற்கு இசைய, கடவுளுக்கும் மனிதனுக்கும் ஒப்புரவாகுதலை ஏற்படுத்தக் கூடிய இன்னொரு பரிசுத்தபலி ஏற்படுத்தப் பட்டது.

இறைவனே, தம் மக்களுக்காக தன்னை பலியிடும்படியாக மனிதனானார். நான் உங்களுக்காக இரத்தஞ் சிந்தி சிலுவையில் மரிக்கப் போகிறேன், பாவ மன்னிப்பு உண்டாக பலியாகப் போகிறேன், என் இரத்தத்தினால் பாவ மன்னிப்பு உண்டாகும், ஆசீர் உண்டாகும் என்றார். அப்படியே அவரைச் சிலுவையிலடித்து பாவிகள் கொலை செய்தார்கள். இயேசுவின் மரணம் முடிவான தெய்வீக பலியாகும். அவருடைய இரத்தம், சிலுவைக்கு இரட்சிக்கும் வல்லமையுண்டாயிருக்கிறது (எபி 9:1426; ரோ. 3:25; 5:9). பாவ நிவாரணம் கிறிஸ்துவின் மரணத்தின் மூலம் நிறைவேறிய செய்தி அறிவிக்கப்பட்டது.

இந்நற்செய்தியை விசுவாசிப்பதின் மூலம் பாவமன்னிப்பை, விடுதலையை மனிதன் பெற்றுக் கொள்கிறான். பாவ மன்னிப்பைத் தொடர்ந்து விசுவாசத்தினால் மனிதன் பரிசுத்த ஆவியை பெற்றுக் கொள்கிறான். அதைத் தொடர்ந்து பரிசுத்த ஆவியின் வரமாகிய அருங்கொடைகள் மனிதனுக்கு அருளப்படுகிறது.

என்னே! அதிசயம் இறைவன் நமக்காக பலியானார். நாம் விசுவாசித்தோம் நாம் பாவ மன்னிப்பு பெற்றோம். பரிசுத்த ஆவி பெற்றோம், தேவனோடு சமாதான உறவடைந்தோம், ஒப்புரவானோம், பாவத்திலிருந்தும், சாபத்திலிருந்தும், ஆக்கினையினின்றும் தப்பினோம். தெய்வீக சுகம் பெற்றோம்.திடநம்பிக்கை பெற்றோம். பரிசுத்தஆவி பெற்றோம். தேவனையுடையவர்களானோம். தேவனுடைய பிள்ளைகளானோம்.

கிறிஸ்து நமக்காக பலியானார்.

கிறிஸ்து நம்மேல் அன்பு கூர்ந்து நமக்காக பலியானார் [ எபே 5:2]. அவருடைய பலி அங்கீகரிக்கப்பட்டதினால் அவர் மூன்றாம் நாள் உயிரோடெழுந்தார். ஆதலால், முதலாவது பாவஞ் செய்த மனிதனும், முதலாவது மரித்த மனிதனும் ஆதாமாகும்.

இயேசு கிறிஸ்து:

அடுத்தபடியாக இயேசு கிறிஸ்துவே முதலாவது பாவஞ் செய்யாத மனிதனும் முதலாவது மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்தவருமானவராய் இருக்கிறார். ஆனபடியால், அவர் தேவ குமாரன், தேவன் என்று பலமாய் நிருபிக்கப்படுகிறார் என்று ரோ. 1:5 ல் திட்டமாய் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றப்படி ஆதாமும், ஆதாமின் சந்ததிகளும் மரித்து மண்ணிலிருக்கிறார்கள். பிற தெய்வங்களும் ஆதாமின் சந்ததிகளே, வெறும் மனிதர்களே. செத்த இராட்சதர்கள் திரும்ப எழுந்திரார்கள் [ ஏசா. 26:14].

இயேசுவோ, ஜீவனோடிருக்கிற தெய்வம். அவரை விசுவாசியுங்கள், அவரைத் தொழுது கொள்ளுங்கள். அவரை, அவருடைய பலியை விசுவாசித்தால் அவனுக்கு பாவ மன்னிப்பும், தேவ சமாதானமும் சந்தோஷமும், ஆசீரும் விடுதலையுமுண்டாகும். மரணத்தை விட்டு நீங்கி நீ ஜீவனுக்குட்பட்டிருக்கிறாய். நித்திய ஜீவன் உனக்கு உண்டாயிருக்கிறது.

"நித்திய ஆவியினாலே தம்மை தாமே பழுதற்ற பலியாக ஒப்புக் கொடுத்த கிறிஸ்து" எபி. 9:14.

சுவிசேஷம்

# கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றிய விசுவாசம்.

"இதுவே அநுக்கிரக காலம்; இன்றே இரட்சண்ய நாள்" 2 கொரி. 6:2.

மனிதனுடைய வாழ்க்கையில் எப்பொழுதும் நல்ல சந்தர்ப்பங்கள் வருவது இல்லை. வாழ்க்கையில் உண்டாகிற சந்தர்ப்பங்களை நழுவவிடாமல் அதைப்பற்றிக் கொள்கிறவனே விவேகி, புத்திமானுமாம். சந்தர்ப்பங்கள் மிகவும் அருமையானது. ஒரு சிற்பி இப்படி ஒரு சிலை வடித்திருந்தார். அதன் தலையானது பின்பக்கம் வழுக்கையாயிருந்தது. அதனுடைய முன்பக்கம் முடியிருந்தது. இரண்டு கைகளும் விரித்தபடி இரண்டு இறக்கைகளும் அதனுடைய இரண்டு கால்களிலும் இரண்டு இறக்கைகளும் காணப்பட்டது. அது ஓடுவது போல் வடிக்கப்பட்டிருந்தது. அந்தச் சிலையின் கீழ் "சந்தர்ப்பம்" என்று எழுதப்பட்டிருந்தது.

அதை வடிந்த சிற்பி பக்கத்திலே நின்று கொண்டிருந்தார். யாராவது வந்து அந்த சிலையை பார்த்து விவரம் கேட்டால் சந்தர்ப்பம் என்பது ஒரு மனிதனுக்கு வாழ்க்கையில் எப்போதாவது ஏற்படும். உடனே அவன் அதை எட்டிப் பிடித்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் முன்பக்கம் மாத்திரம் பிடிக்க முடியும். இல்லையென்றால் அது கடந்து சென்று விடும். பின்னால் இருந்து பிடிக்க முடியாது. அதற்கு கைகளுண்டு. வேகமாக பறக்கும் கால்களும் உண்டு. கைகளினால்

கால்களினால் அது பறந்து கடந்து போய் விடும். ஆனபடியினால் சந்தர்ப்பம் வரும் பொழுதே அதைப் பிடித்துக் கொள்ள வேண்டும் என்கிறதை உலகத்திற்கு உணர்த்தும்படி இந்த சிலை இவ்விதமாக வடிக்கப்பட்டிருக்கிறது என்று விளக்கிச் சொல்லிக் கொண்டிருந்தாராம்.

அதுவும் இரட்சிக்கப்படுவதற்கான மெய்தேவனைப் பற்றி அறிகிறதற்கான சந்தர்ப்பம் அறிவு அடையும் சந்தர்ப்பங்கள் மிகவும் அபூர்வமாக எப்பொழுதாவது கிடைக்கும். காலங்கள் மனிதனுடைய கரத்தில் இல்லை. சந்தர்ப்பங்கள், அதிசயங்களை அற்புதங்களைக் காணும் போது மரித்த நபரை பார்க்கும் போது நித்தியம் அவனுக்கு உணர்த்தப்படுகிறது. ஒவ்வொரு அதிசயங்களும், அற்புதங்களும் ஒரு மனிதனுடைய ஜீவன் போய் மரித்த பிரேதத்தை பார்க்கும் பொழுதும் இவ்விதமான ஒரு சம்பவம் நமக்கும் ஏற்படும் அப்பொழுது நாம் எங்கே இருப்போம். இன்று நாம் மரித்தால் எங்கே இருப்போம் என்பதை அவன் உணரும்படி, நித்தியத்தை அவனுக்கு உணர்த்தும்படி இவ்விதமான சந்தர்ப்பங்கள் அவனுக்கு உண்டாகின்றன. அவ்விதமே நல்ல சிந்தனைகள் நோக்கங்கள் எப்பொழுதாவது வருகின்றன. அப்பொழுதே அதை செய்து நிறைவேற்ற வேண்டும் (2 கொரி. 8:11,12).

தேவனுடைய தீர்க்கதரிசனமானது ஏற்கெனவே மனிதனுக்கு அறிவிக்கப்பட்டுள்ளது. அது நிறைவேறி வருகிறது. இதுவே அநுக்கிரக காலம் இன்றே இரட்சணிய நாள். நீ இரட்சிக்கப்படும்படி, சுகப்படும்படி விடுதலையாகும்படி தேவனை நோக்கிக் கூப்பிடு [சங். 69:13]. உனக்கு ஒரு துண்டு பிரதி [Tracts] மூலமாகவோ, ரேடியோ செய்தி மூலமாகவோ அல்லது ஒரு நண்பன் மூலமாகவோ, தெரு பிரசங்கத்தின் மூலமாகவோ, மேடைப் பிரசங்கத்தின் மூலமாகவோ, அல்லது ஒரு கிறிஸ்தவ கோயிலைப் பார்க்கும் போதோ, அங்கே போய்ப் பார்க்க வேண்டும் அங்கே போய்த் தேவனைத் தொழுது கொள்ள வேண்டும் இதை நாம் விசாரிக்க வேண்டும் என்கிற தெய்வீக எண்ணங்கள் உனக்கு உண்டாகும். உடனே நீ அதற்குச் செவி கொடுத்து அதைத் தேட வேண்டும். கர்த்தருடைய நாமத்தை இயேசு கிறிஸ்துவை நீ விசுவாசித்து அவருடைய பிள்ளைகளோடு ஆலயத்திற்குச் சென்று தொழுது கொள்ள வேண்டும் (ரோ. 10:13; யோவே. 2:32; அப். 22:16).

பர்திமேயு எனப்பட்ட ஒரு குருடன் இருந்தான் (மாற். 10:46-52). அவன் பிச்சைக் கேட்டுக் கொண்டு வழியருகே உட்கார்ந்திருந்தான். அந்த வழியாய் இயேசுவானவர் வருகிறாரென்று அவனுக்குச் செய்தி கேட்டது. திரளான ஜனங்கள் அந்த வழியாய்ப் போகும் சத்தத்தையும் கேட்டான். இயேசுவானவர் வந்து விட்டார் என்பதை அறிந்து, இயேசுவே, நசரேயனாகிய இயேசுவே, தாவீதின் குமாரனே எனக்கு இரங்கும் என்று சத்தமிட்டுக் கூப்பிட்டான். பிரயாணத்திலே போய்க் கொண்டிருக்கிறவர்கள் அவனை அதட்டி சத்தமிடாதே என்று அவன் பேசாதிருக்கும்படி அதட்டினார்கள். அவனுக்கு தெரியும் இந்த சமயம் சத்தமிட்டுக் கூப்பிட்டு இரக்கத்தைப் பெறவில்லை என்றால் இனி ஒரு சந்தர்ப்பம் நமக்குக் கிடைக்காமல் போய் விடும் என்று சொல்லி பின்னும் அதிகமாக இயேசுவே தாவீதின் குமாரனே எனக்கும் இரங்கும் என்று சத்தமிட்டான்.

எந்த ஒரு ஏழைமனிதனுடைய, தனி மனிதனுடைய சத்தத்தைக் கேட்டு அவனுக்குப்பதில் கொடுக்கிற இறைவனாகிய இயேசு உடனே நின்று அவனை அழைத்து வரச் சொன்னார். அவன் இயேசுவண்டை வந்தான். அவனுடைய வாஞ்சை என்ன என்று கேட்டார் நான் பார்வையடைய வேண்டும் ஆண்டவரே என்றான். இறைவன் அவனுடைய கண்களைத் திறந்து விட்டார். அவன் பார்

## வாசகர்களின் கவனத்திற்கு:-

பத்திரிகையின் சந்தா எண் (Mailing List) மாற்றப்பட விருப்பதால் தங்களுடைய சந்தா எண், முகவரி தெளிவாக எழுதி புதுப்பித்துக் கொள்ளவும். இது வரை சந்தா செலுத்தாதவர்கள் செலுத்தி புதுப்பித்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கின்றோம்.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   4 [வெள்ளி] ஜூன் 1993
   5 [திங்கள்] ஜூலை 1993
   2 [திங்கள்] ஆகஸ்ட் 1993

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **CHIEF PASTOR N. LAZAR**
   **"NEW JERUSALEM CHURCH"**
   **CHURCH LANE, TILAK NAGAR,**
   **DARGA ROAD, BHANDUP,**
   **BOMBAY-400 078 INDIA**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் *110* - JUNE '93



"புதிய எருசலேம் சபை"

'...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

– மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1:1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

கிழவனான தீர்க்கதரிசி பெத்தேலிலே குடியிருந்தான் என்று 1 இராஜா. 13:11 ல் தேவ ஆவியானவர் குறிப்பிட்டிருப்பது போல இந்நாட்களில் கிறிஸ்தவர்களுக்கு தேவனுடைய கட்டளையை மீறும்படியும், சந்தேகிக்கும்படியும் தேவனுக்குக் கீழ்ப்படியாமற் போகும்படியும் மக்களைத் தூண்டுகிற, எழுதுகிற, பேசுகிற மிஞ்சின பரிசுத்தம், மிஞ்சின நீதி பேசுகிற, மற்றவர்களுக்குப் போதிக்கிற கள்ளப் போதகர்கள் பெருகிப் போன காலமாக இது இருக்கிறது. இவர்களுக்கு தேவனால் கட்டளையில்லாவிட்டாலும் ஆவியில் ஏவப்பட்டேன் என்று தங்கள் சொந்த அழுக்கை நுரை தள்ளுகிறார்கள். எந்த ஆவியினால் ஏவப்பட்டார்களோ? இவர்களுடைய ஜென்ம சுபாவம் மாறவில்லை என்பது இவர்களுடைய எழுத்துக்கள், பேச்சுகளிலிருந்து நாம் அறிவோம். இவர்கள் ஆவியினால் ஏவப்பட்டதாகச் சொல்வது பொய்யாம். இதனால் வெகு தீமையுண்டாகும்.

சிலுவை என்றும், சாந்தம் என்றும், வாய் திறக்கக் கூடாது என்றும், துன்பம் சகிக்க வேண்டுமென்றும் சொல்லிக் கொண்டு தங்களுடைய ஜீவியத்தில் இதற்கென்று சந்தர்ப்பங்கள் ஏற்படும் பொழுது இதற்கு நேர்மாறாக ஜீவிக்கிற மாயக்காரர்களாக, பரிசேயர்களைப்போல இவர்கள் இருக்கிறார்கள். தேவஜனங்கள் இவர்களை ஒதுக்கிவிட்டு தேவனுடைய திட்டமான வசனத்தின்படி தங்களை பரிசுத்தப்படுத்திக் கொண்டு தேவ ஆவியினால் நிரம்பி ஜீவிக்க வேண்டும். அவ்வப்பொழுது ஏற்படும் வாழ்க்கையின் சம்பவங்களிலும் தேவ ஆவியானவர் நம்மை நடத்தும் விதத்தில் காரியங்களை செய்ய வேண்டும். இதுவே தேவனுடைய திட்டம். தேவனுடைய ஆவியானவர் பொய் சொல்ல ஏவமாட்டார், விபசாரம் செய்ய நடத்தமாட்டார், கெட்ட வார்த்தை பேச, வஞ்சனை செய்ய, துரோகம் செய்ய, திருட, ஏமாற்ற நடத்த மாட்டார். இன்னின்ன காரியங்கள் தேவ ஆவியானவர் செய்ய மாட்டார் என்று திட்டமாய் நாம் அறிவோம். மற்றப்படி நீதியை நிலைநாட்ட தேவ ஆவியானவர் இந்தக் கடைசிக் காலத்தில் நடப்பிக்கிற வேலைகளை தேவனுடைய திட்டத்தின்படி செய்ய நாம் மிகவும் தெளிவாக இருக்க வேண்டும்.

சிலர் கிறிஸ்தவத்தை, சிலுவை, இயேசு கிறிஸ்து மாதிரி என்றெல்லாம் சொல்லி மக்களை கோழைகளாக தயக்கப்படுத்துகிறார்கள். எல்லாவிதத்திலும் நாம் இயேசு கிறிஸ்துவை மாதிரியாக பின்பற்ற முடியாது. பின்பற்ற வேதம் சொல்லவில்லை. அவர் காண்பித்திருக்கிற மாதிரி என்னவென்றால் அவரவருக்கு நியமிக்கப்பட்ட காரியத்தை செய்ய வேண்டும். இப்படி தேவனுடைய திட்டத்தை நிறைவேற்ற வேண்டும் என்ற ஓர் திட்டம் ஒவ்வொருவரைப் பற்றியும் உண்டு. அவரைக் குறித்தும் எழுதப்பட்டிருந்தது அதை அவர் நிறைவேற்றினார். அது அவருக்குரியது. அப்படி நாம் நிறைவேற்ற

முடியாது. நிறைவேற்றவும் கூடாது. நம்மைக் குறித்து தேவனுடைய திட்டம் வேறொன்றாக இருக்கிறது. அப்படி நாம் செய்ய வேண்டும். இதை விட்டு விட்டு சிலர் தாங்கள் பரலோகத்தில் குடியிருக்கிறதாக எண்ணிக் கொண்டு விவாகம் பண்ணக்கூடாது என்றும், வியாதியானால் கர்த்தர் காட்டும் நிவாரணத்தைக் கைக்கொள்ளக் கூடாது என்று பேசியும், எழுதியும், நினைத்தும், அறிவில்லாமல் வேதனைக்குட்பட்டு மரிக்கிறார்கள். என் ஜனங்கள் அறிவில்லாமையால் சாகிறார்களே என்று (ஓசி. 4:6) தேவன் நன்றாக சொல்லியிருக்கிறார். நாம் அப்படி மரிக்க வேண்டாம். பரலோகத்தில் கொள்வினையும் கொடுப்பனையும் இல்லை. ஆயிரம் வருஷ அரசாட்சியில் நகரவாசிகளில் ஒருவனும் தான் வியாதிப்பட்டிருக்கிறேன் என்று சொல்வதுமில்லை. வரப்போகிற உலகத்திலும், வியாதியோ நிவாரணமோ இல்லை, வருத்தமும் இல்லை. இங்கே எது எது அவசியமோ அவைகள் தேவை. நாம் இந்தப் பூமியிலிருக்கிறோம். பூமிக்குரிய வாழ்க்கைக்குரிய அவசியங்களும் அனுபவங்களும் வேதாகமத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது கடைசிக் காலம்.

ஆனபடியினால் நாம் தேவனுடைய சித்தம் சரியாய் அறிந்து அதைச் செய்கிறதினால் சரீரப்பிரகாரமாகவும், ஆவிக்குரியப் பிரகாரமாகவும் பிழைத்திருப்போம். அதை விட்டு விட்டு கிழவனான தீர்க்கதரிசியின் வஞ்சனையில் விழுந்த நல்ல வாலிபனைப் போல நாம் இராதிருப்போமாக. கர்த்தருடைய ஆவியானவர் நமது மத்தியில் கிரியை செய்கிறார். ஜெயம் கர்த்தரிடத்திலிருந்து வரும் ஆமென்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

இந்த மார்க்கத்தில் சில காரியங்கள் மனிதனுடைய புத்திக்கு எட்டாதவைகளாயிருந்தாலும் மற்ற மார்க்கங்களிலிருக்கிறபடி புத்திக்கும் நல்லொழுக்கத்திற்கும் விரோதமானது ஒன்றும் இதிலில்லை. கிறிஸ்து மத வேதமானது தேவ ஆவியின் உதவியினால் பரிசுத்தவான்களால் எழுதப்பட்டது. பொல்லாதவர்கள் தங்கள் சொந்த பொல்லாப்பைக் கண்டிக்கும் பிரமாணங்களை எழுதமாட்டார்கள், நல்லவர்கள் மற்றவர்களை வஞ்சிக்கவுமாட்டார்கள்.

கிறிஸ்து மார்க்கம் பாவத்திற்கு எவ்வளவேனும் இடம் கொடாமல் பரிசுத்தத்தையே கற்பிக்கிறது. அதின் உபதேசங்கள் பரிசுத்தமுள்ளவைகளானபடியினால் அவைகள் தேவ அருள் பெற்ற பரிசுத்தவான்களால் எழுதப்பட்டிருக்கிறது என்பதை அறிகிறோம்.

தேவ அருளினால் பரிசுத்தவான்கள் வேதத்தை எழுதியிருக்கிறதினாலே இந்த வேதம் தேவனால் அளிக்கப்பட்டிருக்கிறது. தேவனால் அளிக்கப்பட்டது சத்தியமாயிருக்க வேண்டும். சத்தியம் ஒன்றேயொழிய பலவல்ல. கிறிஸ்து மார்க்கம் ஒன்றே சத்தியம் என்று காண்பிக்கும் திருஷ்டாந்தங்களை புற உதாரணங்களென்றும், அக உதாரணங்களென்றும் (External and Internal Evidence) இரண்டு விதமாக வகுக்கலாம்.

1. கிறிஸ்துவும் அவருடைய சீஷர்களும் தாங்கள் போதித்த மார்க்கம் மெய்யென்று திருஷ்டாந்தப்படுத்த எல்லோரும் கண்டு பிரயோஜனம் அடையத்தக்கதான அற்புதங்களை செய்தார்கள். அற்புதமானது சுபாவ முறைக்கு மேலான காரியமாயிருக்க அது சகல வல்லமையுள்ள தேவனாலேயாவது, அவருடைய கிருபையினாலாவது செய்யப்பட வேண்டுமாகையால் அற்புதங்கள் சத்தியத்திற்கு திருஷ்டாந்தங்களாகச் செய்யப்படும்.

2. மேலும் மனிதர் இயல்பாய் இனி வரப்போகிற காரியங்களை முன்னறியவும் சொல்லவுங் கூடாது. ஆகையால் தீர்க்கதரிசனங்கள் சுய சக்தியினாலே தீர்க்கதரிசனங்களுரைக்காமல் தேவ தாண்டுதலினால் உரைத்தார்கள். அவர்கள் உரைத்தவைகள் திருஷ்டாந்தரமாக சம்பவித்திருக்கிறபடியினாலும், இன்னும் சம்பவித்து வருகிறபடியினாலும் கிறிஸ்து மார்க்கத்தின் உண்மை விளங்குகிறது.

3. மேலும் கிறிஸ்து மார்க்கம் உலகத்துக்குப் பிரசித்தமாகி உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. வேதம் நம்பத்தக்கது என்பதற்கு பலத்த உதாரணங்கள் இருக்கின்றன. அது எப்படியெனில் இயேசு கிறிஸ்து நாதர் பரமண்டலத்திற்கு எழுந்தருளிப்போய் ஏறக்குறைய 70 வருஷத்திற்கு பின்பு கிறிஸ்து மார்க்கம் ரோமருடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்த விசாலமான தேசங்களில் பிரபல்யமானது. ஒரு லௌகீக அனுசரணையும், ஆதரவும் அதற்கு உண்டாயிருக்கவில்லை.

அந்த தேசங்களில் அதிகாரம் செலுத்திவந்த துரைமார்கள் அதற்கு உதவி செய்யவில்லை அதை எதிர்த்தார்கள். அதை பிரசித்தம் பண்ணினவர்கள் அதிக புகழ்ச்சி உண்டாக்கத்தக்கதாக லௌகீக மேன்மையும், கல்வியுமுள்ளவர்களாயுமிருக்கவில்லை. சாதுரிய பேச்சுகளினால் அதை அலங்காரம் செய்யவுமில்லை. அப்படியிருந்தும் கிறிஸ்துவினுடைய சுவிசேஷம் பலமாய் வளர்ந்து அந்த தேசங்களில் பரவி அஞ்ஞான இருளை நீக்கிற்று.

ரோம அதிகாரிகளால் அக்காலத்தில் மிகுந்த எதிர்ப்பும் விரோதமும் உண்டாயிற்று அதை அழிக்கும்படியாக பலர் கிறிஸ்தவர்களை பல காரியங்களில் உபத்

திரபடுத்தினார்கள் சொல்லி முடியாத வேதனைகளாலே அவர்களை வாதித்துசகல விதமான கொடுர வகையினாலும் அநேக லட்சம் பேர்களை கொலை செய்து வந்தார்கள்.

அஞ்ஞானிகளுக்குள்ளிருந்த கல்விமான்களும் தந்திரமான தர்க்கங்களினாலே சுவிசேஷத்தை இகழ்ந்து, இகழ்ச்சி செய்யும்படிக்கு மிகுந்த பிரயத்தனம் பண்ணினார்கள். யூதர்களும், அஞ்ஞானிகளும் இசைந்து அதற்கு கொடிய விரோதிகளாய் இருந்தார்கள். அப்படியிருந்தும் லௌகீக ஆஸ்தி, கல்வி தந்திரம், வல்லமை முதலானவைகளோ, அரசாங்க உதவியோ இல்லாமல்; அரசாங்கம் அதற்கு விரோதமாய் இருக்கும் பொழுதே கிறிஸ்தவம் எல்லாவற்றையும் ஜெயங்கொண்டு பரவ ஆரம்பித்தது.

பூர்வீகத்திலே தாகோன் விக்கிரகம் தெய்வீக வாசஸ்தலத்தின் பெட்டிக்கு முன்பாக கீழேவிழுந்து உடைந்துபோனதுபோல [1 சாமு. 5-ம் அதிகாரம்] அந்தந்த ராஜ்யத்திலுள்ள விக்கிரகாராதனை முதலான துன்மார்க்கங்கள்; அந்த 12 பேர்கள் பிரசங்கித்த பிரசங்கமான சுவிசேஷத்தினாலே விலகிப் போயின. உலகமெங்கிலும் காட்டு மிராண்டிகளாக இருந்த மக்கள் மத்தியிலே கிறிஸ்தவம் போனபொழுதே அவர்கள் மனிதர்களாக மாறினார்கள் என்பதை சரித்திரம் நிரூபிக்கிறது, நிரூபித்து வருகிறது.

கிறிஸ்தவ சபையிலே பிசாசுகளுடைய செயலினாலே பொய்யான பல உபதேசங்களும், பொல்லாத பல தத்துவங்களும் உண்டாகி விசுவாசிகளை துன்பப்படுத்துகிறதற்கும், கிறிஸ்தவ மார்க்கத்தை அழிக்கிறதற்கும் பல இடையூறுகள் ஏற்பட்ட போதிலும் சத்திய வசனமானது அவைகள் எல்லாவற்றையும் ஜெயித்து இந்நாள் வரைக்கும் நிலை நிற்கிறது.

மேலும் கிறிஸ்தவ மார்க்கத்தின் உபதேசம் மனிதனுடைய சுபாவ இச்சைகளுக்கு இடங்கொடாமல் அவைகளை தள்ளவேண்டுமென்று சொல்லி மெய்தேவ பக்தியையும், களங்கமில்லாத சித்த விருத்திகளையும், பரிசுத்தமான நடக்கைகளையும் கேட்டுக் கொண்டு வருகையிலும் அது கிறிஸ்துநாதருடைய வாக்குத்தத்தங்களின் படியே இது வரைக்கும் நிலைத்துநிற்கிறது.

நான்கு சுவிசேஷங்களும் பிரபலமாகி சகலவிதமான மனிதர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு வருகிறது. மேற் சொல்லியபடி சகல விதமான விரோதிகளுக்குள்ளும் கிறிஸ்து மார்க்கம் உலகத்தில் நிலை நின்று பெருகி வருகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக தேவ சகாயம் அதற்கு உண்டாயிருக்கிறபடியினால், மகா தேவனானவர் அதற்கு துணையாயிருக்கிறபடியினாலும் கிறிஸ்து மார்க்கம் அவரால் வந்திருக்கிறது என்பதை அறிகிறோம். அதனாலே அந்த மார்க்கத்தை அறிவிக்கிற தேசம் நம்பப்படத்தக்கதென்றும் நிச்சயமாயிருக்கிறது.

உலகத்திலுள்ள மற்ற மார்க்கங்களைக் குறித்து இப்படிப்பட்ட திருஷ்டாந்தங்களைக் காணோம். மகமது மார்க்கம் லௌகீக வல்லமையுடையவர்களால் தந்திரமுள்ள கல்விமான்களாலும் மிகுந்த ஒத்தாசையைப்பெற்று பலவந்தத்தால் உலகத்தில் பிரஸ்தாபமாக்கப்பட்டதேயல்லாமல் வேறு விதமாய் அது விஸ்தாரமாக்கப்படவில்லை இக்காலத்தல் அந்த ஒத்தாசை குறைந்து வருகிறபடியினல் மகமது மார்க்கம் குறைந்து போகிறது. பாப்பு மார்க்கமும் அப்படிப்போல தோன்றி நிலை பெற்று குறைந்து போகிறது.

இந்த இந்து தேசத்திலுள்ள பிராமணர்களுடைய மார்க்கமும், இந்த தேசத்தின்டைய இராஜாக்களுடைய வல்லமையினாலும், அந்த வல்லமையைப் பெற்ற பிராமணர்களுடைய வஞ்சகத்தினாலும் இந்த தேசத்தில்

மிகுந்த குடிகளுக்குள்ளே ஏற்படுத்தப் பட்டு நிலைநிற்கிறதேயல்லாமல் வேறு விதமாய் அது சத்தியத்தினால் நிலைநிற்க வில்லை.

இந்த மார்க்கத்தை பின்பற்றுகிறவர்கள் எல்லா விதமான தீய வழிகளையும் கடைபிடித்து, அவர்கள் முரட்டுத்தனத்தை கடைபிடிக்கிறார்களென்றும், அவர்கள் குணக்கேடு அடைந்து மறுபடியும் கற்காலத்துக்கு போய்க்கொண்டிருக்கிறார்கள் என்றும் நாம் அறிகிறோம். மேலும் இது மற்ற தேசத்தில் பிரசித்தமாகவில்லை, மற்ற தேசங்களில் பிரத்தமாகி வெற்றியடையப் போவதுமில்லை.

2. 1. விதையொன்று போட
சுரையொன்று முளைக்குமா?
தாயைப்போல பிள்ளை
நூலைப்போல சேலை.

என்ற பழமொழி போல அவரவர்களுடைய வேதப்பிரமாணங்களின்படி அவரவர்களுடைய குணமிருக்கும்.

கிறிஸ்து மார்க்கத்தில் காண்பிக்கப் பட்டிருக்கிற கடவுள் களங்கமில்லாத பரிசுத்தரும் பட்சபாதமில்லாத நீதிபரரும், முடிவில்லாத தயவு உள்ளவருமாம் ஆம். ஞானமும், நீதியும், இரக்கமும், பரிசுத்தமும், அன்பும் தேவ குணங்களானால், இவைகளையே எடுத்து காண்பிக்கும் வேதம் உண்மையல்லவா? இயேசு கிறிஸ்து பூர்வத்திலிருந்தபோது தம்முடைய வேதத்தின் திருஷ்டாந்தமாக அவர் செய்த பலத்த அற்புதங்களில் அநேகம் இல்லாமற்போனாலும் அவர் செய்த பலத்த அற்புதங்களும், அவர் திருவாய் மலர்ந்தருளிய திவ்விய உபதேசங்களாலே அவரை இவ்வுலகுக்கு இறைவனாக்கி அவர் மொழியை சத்திய வேதமாக நாம் நாடுகிறோம்.

ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு போதும், ஒரு மார்க்கத்தை உண்மையென்று நம்பிக் கொள்வதற்கு இரண்டு பிரதான குணங்கள் வேண்டும் அவை யாவன: அதை சத்தியம் என்று அங்கீகரித்து கைக்கொள்கிற குணமும், அதை கைக்கொள்ளுகிறதினால் பலனுண்டாகும் என்கிற நிச்சயமுமே.

கிறிஸ்தவ மார்க்கத்தை அநேக ஜனங்கள் சத்தியம் என்று ஏற்றுக்கொண்டபடியால் அதற்காக தங்களுடைய லௌகீக காரியங்களையெல்லாம் இழந்து போனதுமல்லால் தங்களுடைய ஜீவனையும் ஒரு பொருளாக எண்ணாமல், மேலும் கிறிஸ்தவ மார்க்கம் அறிவீன அந்தகருக்குள் கண் கொடுத்து அகங்காரிகளை அடக்கி ஏழைகளை உயர்த்தி அடிமைகளை விடுதலை செய்து மிருகத்துக்கு ஒப்பான மனுஷர்களை கல்வி, செல்வம், ஞானம், நாகரீகம், சன்மார்க்கம் முதலிய வற்றால் ஆசீர்வதித்து (ரோம. 6:21,22; 1 கொரி. 6:9-11; 1 பேது. 4:3,4). அருவருப்பான விக்கிரகாராதனையும் அதனில் அதைச் சேர்ந்த அவலட்சணமான கேடுகளையும் நீக்கி மனுஷர் மிருகங்களைப்போல வன வாசம் பண்ண வேண்டுமென்ற சோம்பலுக்குரிய கட்டுப்பாடான அஞ்ஞானமருளை அகற்றி மனுஷர் யாவரையும் சகோதர ஐக்கியத்துக்குட்படுத்தி, ஜாதி வித்தியாசம் முதலிய கட்டுப்பாட்டை அறுத்து, அநேகம் ஸ்திரீகளை விவாகம் பண்ணுகிற அயோக்கியத்தனமான நிந்தையை நீக்கி ஒரு புருஷனுக்கு ஒரு பெண்ஜாதி இருக்க வேண்டுமென்ற நல்லொழுக்கத்தை ஏற்படுத்தி, ஸ்திரீகளுக்கு மோட்சம் இல்லையென்று சில பேதைகள் துணிந்து சொல்லும் ஒவ்வாத கதைகளை போதிக்காமல் ஸ்திரீகளும் புருஷர்களைப் போல நன்மை தீமை செய்யத்தக்கவர்களாயிருக்கிறபடியால் அவர்களுக்கும் ஆத்துமா உண்டென்றும், மோட்சம், நரகம் உண்டென்றும், கூறி அவர்களையும் சத்திய நெறியில் செல்லும்படியாக செய்து புண்ணியவதிகளாக்குகிறது.

கிறிஸ்து மார்க்கத்துக்கு பகைஞரில் ஒருவனாகிய 'ரூசோ' என்பவன் சொல்லு

கிறபடியே எல்லாரும் உண்மையான கிறிஸ்தவர்களானால் யாவரும் தங்கள் தங்கள் கடமைகளை நிறைவேற்றுவார்கள். குடிகள் இராஜ்யத்தின் பிரமாணங்களுக்குக் கீழ்ப்படிவார்கள். துரைகள் நியாயத்தில் வழுவாமல் இருப்பார்கள். போர்ச்சேவகர்கள் மரணத்தை அசட்டை பண்ணாமல் வீணான நடத்தையைப் பற்றவும், வம்பான செலவும் செய்யமாட்டார்கள்; நீதியாய் நடப்பார்கள்.

பகைஞர் தாமே ஒத்துக்கொள்ளுகிற அதி முதற்கொண்டு சுவிசேஷத்தை உண்மையாய் ஏற்றுக்கொண்டிருக்கிறவர்கள் எவர்களோ அவர்கள் நடக்கை மகா நன்மையாக இருக்கிறது. பிற மதத்தை கடைபிடிக்கிறவர்களுடைய நடக்கையைப் பார்த்தால் அவைகளின் கேடு எல்லாருக்கும் வெளிப்படையாய்த் தெரியவரும்

[தொடரும்.]



"கர்த்தருடைய வழிகள் செம்மையானவைகள்; நீதிமான்கள் அவைகளில் நடப்பார்கள்; பாதகரோவென்றால் அவைகளில் இடறிவிழுவார்கள்" ஓசியா. 14:9.





## சத்திய வேதம் [தொடர்ச்சி]

2. வேதமானது மனிதனுடைய புத்திக்குத் தோன்றமாட்டாத பரம இரகசியங்களை அறிவிக்க வேண்டுமென்ற இரண்டாவது இலட்சணம் நம்முடைய சத்திய வேதத்திற்கு உண்டு. தேவ வஸ்து மூவராகிய ஒரே தத்துவமுள்ளவரென்பதும், அம்மூவரில் ஒருவராகிய வார்த்தையானவர் மனித அவதாரம் செய்து பாவ விமோசனம் பண்ணினார் என்பதும் மரித்தவர்கள் எழுந்திருப்பார்கள் என்பதும், மனிதருடைய புத்திக்குத் தோன்றுகிற தோற்றங்களல்லவே. அவைகள் சிற்றறிவாளராகிய நம்முடைய புத்திக்கு விரோதமான உபதேசங்கள் என்று ஒரு போதும் சொல்லவே கூடாது. ஏனெனில் உலகத்தில் நாம் காணுகிற அநேக காரியங்களின் தன்மையே நமக்கு விளங்காமலிருக்க பரம ஞானத்திற்குரியவைகள் எளிதாய் விளங்குமோ?

3 வேதம் எவ்விதத்திலும் நம்முடைய மனதை தேவனிடத்திற்கு நடத்த வேண்டும் என்ற மூன்றாவது இலட்சணமும் நம்முடைய வேதத்திற்கு உண்டு. இது சத்திய வேதம். அதிலுள்ள போதனைகளெல்லாம் தேவ தூஷணமாகிய விக்கிரகாராதனைகள் யாவும், அவ பக்திகள் யாவையும் மற்றும் நம்முடைய நம்பிக்கைக்கு இயலாத மற்ற யாவையும் தள்ளி ஒரே தேவனாகிய தேவனை மாத்திரம் ஆவியினாலும் உண்மையினாலும் தொழுது நம்பி சிநேகித்து சேவித்து வரும்படி படிப்பிக்கிறது.

தேவன் (GOD) Deity கடவுளுக்குப் பொதுப் பெயர்:

1. மெய் தேவன் - தேவாதி தேவன் உபா. 10:17.

2. பொய் தெய்வம்-விக்கிரகம் [யாத். 22:20; ரோம. 11:21].

இந்துக்களின் தேவர்கள் என்று சொல்லப்படுவது. தேவர் 5, பிர்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன். இவர்கள் தேவர்களும் பஞ்சக் கர்த்தாக்களுமாவர்.

தேவர் வகை 33, ஆதித்தர் 12, அசுவினிகள் 2, உத்திரர் 11, வசுக்கள் 8, இம் 33 தேவர்களும் ஒவ்வொருவர் ஒவ்வொரு கோடி தேவர்களை உண்டாக்கி முப்பத்து முக்கோடி தேவர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறார்கள்.

3. சாத்தானாகிய இவ்வுலகத்தின் தம்பிரான் [2 கொரி. 4:4].

4. பிரபுக்கள், நியாயாதிபதிகள் முதலிய பெரியோர்கள் தேவர்கள் என்னப்படுகிறார்கள் [யாத். 7:1; சங். 82:1, 6; யோ 10:34].

5. சிற்றின்பத்தை முயற்சியாக நாடி பணத்தைச் சம்பாதிக்கவும், ஜீவனம் செய்யவும், முழுக் கவலையாயிருக்கிறவர்களுக்கு வயிறே தேவன் [பிலி. 3:19].

இப்படி இருக்கிறபடியினால் சத்திய வேதமாகிய பைபிள் மாத்திரமே விக்கிரக காராதனைகள் யாவையும், அவபக்திகள் யாவையும் விலக்கி ஒரே தேவனண்டை, தேவனை மாத்திரம் ஆவியினாலும், உண்மையினாலும், தொழுது சேவித்து வரும்படி படிப்பிக்கிற இலட்சணம் இதற்கு மாத்திரமே இருக்கிறது என்கிறோம். அதலால் நம்முடைய வேதமே வேதம்.

4. வேதமானது அறிவின் மேலுள்ள பெரிய ஆசைக்கு திருப்தி செய்யத்தக்க விசேஷங்களை நம்முடைய மனசுக்குப் போதிக்க வேண்டுமென்ற நல்லாலோசனையும் கிறிஸ்து மார்க்கத்துக்கும் உண்டு, வேதாகமத்துக்கும் உண்டு, உலகமும் அதிலுள்ளனவைகளும் சிருஷ்டிக்கப்பட்ட விதமும், தேவனுடைய குணங்களையும், கிரியைகளையும், கற்பனைகளையும், மனிதனை நிர்பாக்கியரான காரணத்தையும், மெய்பாக்கியம் அடைவதற்கேற்ற வழியையும், மரணத்திற்குப் பின்னிருக்கும் நிலைமையையும் குறித்து நிச்சயமான உபதேசங்களும், இன்னும் மனிதர் அகத்தியமாய் அறிய வேண்டியவைகளெல்லாம் கிறிஸ்து மார்க்க வேதத்திலுண்டு.

5. வேதம் எவ்விதத்திலேயும் பரிசுத்தமான பிரமாணங்களையுடையதாயிருக்க வேண்டுமென்ற ஐந்தாவது இலட்சணமும் நம்முடைய வேதத்திற்குண்டு. கிறிஸ்து மார்க்கம் தேவனுக்கும் மனிதனுக்கும் செய்ய வேண்டிய கடைமைகளை நமக்கு அறிவித்து மற்றெந்த மதங்களிலுமில்லாத குறையற்ற பரிசுத்த பிரமாணங்களையே போதிக்கிறது.

6. வேதவாக்கியங்கள் ஒன்றுக்கொன்று விரோதமாயிராமல் இசைவுள்ளவைகளாய் இருக்க வேண்டுமென்ற இந்த ஆறுவது இலட்சணமும் நம்முடைய வேதத்துக்கு உண்டு.

வேதாகமங்கள் பல காலங்களிலும் பல மனிதர்களால் எழுதப்பட்டிருந்தாலும் அவைகளுக்குள்ளே யதார்த்தமான விகற்பங்கள் ஒன்றுமில்லை. இதுவே அவை பரிசுத்த ஆவியின் ஏவுதலினால் போதிக்கப்பட்டதென்பதற்கு ஒரு திருஷ்டாந்தம்.

7. வேதம் மனிதனுடைய கெட்ட குணங்கள் யாவையும் மாற்றவும், மனதை நிச்சயமான சமாதானத்தினாலும், சந்தோஷத்தினாலும் நிரப்பவும், மனப்பூர்வமாய் தேவனுடைய கற்பனைகளுக்குக் கீழ்ப்படியப் பண்ணவும் தக்கதான உபதேசங்களையுடையதாயிருக்க வேண்டுமென்ற ஏழாம் இலட்சணமும் நம்முடைய வேதத்திற்கு உண்டு. அதின் உபதேசங்களை அறிந்து பற்றிக் கொள்கிறவன் எவனோ

அவன் புதிய மனிதனாகிறான். அவன் தனக்குள்ளே வேர்கொண்டிருந்த துர்க்குணங்களை அரோசித்து தள்ளி பரிசுத்தமானதை விரும்பிப் பற்றிக் கொள்ளுகிறான்

அன்றியும் எல்லா ஆபத்திலும், மரண வேளையிலும் அது அவனைக் காத்து சஞ்சலமில்லாத, நல்ல நம்பிக்கையோடும் சந்தோஷத்தோடும் இந்த உலகத்தில் சஞ்சாரம் பண்ணி பரமகதி சேர இந்த வேதத்தினாலேயே முடியும் 1 தெச. 2:13.

8. வேதமானது மனிதருடைய புத்தியினால் அறியப்படாத நடக்கைகளை முன்னறிவிக்க வேண்டுமென்ற எட்டாவது இலட்சணமும் நம்முடைய வேதாகமத்துக்கு உண்டு. தீர்க்கதரிசனம் கிறிஸ்து மார்க்கத்தின் உறுதியான திருஷ்டாந்தமாயிருக்கிறது. மந்திர தந்திரங்களினாலாவது பிரமையினாலாவது ஒருவேளை காட்சிப் பிரமாணம் தவறுமென்போமானால் ஆதி முதல் அந்தம் வரைக்கும் சம்பவிக்கப் போகிறவைகள் தீர்க்கதரிசன வாக்கினால் முன்னறிவித்திருக்கிற தவறாத பிரமாணம் பொய்யாகுமா? இதைப்பற்றி பேதுரு அப்போஸ்தலன் மகா திட்டமான தீர்க்கதரிசன வசனம் நமக்குண்டே' என்கிறார் 2 பேது. 1:19.

இதைக் காட்சி பிரமாணத்தைப் பார்க்கிலும் அதிகமாய் கொண்டாடுகிறார். எப்படியெனில்: "நாங்கள் தந்திரமான கட்டுக்கதைகளைப் பின்பற்றினவர்களாக அல்ல, அவருடைய மகத்துவத்தைக் கண்ணாரக் கண்டவர்களாகவே நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய வல்லமையையும், வருகையையும் உங்களுக்கு அறிவித்தோம்." இவர் என்னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று சொல்லுகிற சத்தம் உன்னதமான மகிமையிலிருந்து அவருக்கு உண்டாகி பிதாவாகிய தேவனால் அவர் கனத்தையும் மகிமையையும் பெற்றபோது அவரோடே கூட நாங்கள் அந்த பரிசுத்த பருவதத்திலிருக்கையில் வானத்திலிருந்து பிறந்த அந்த சத்தத்தைக் கேட்டோம் என்கிறார்.

அதிக உறுதியான தீர்க்கதரிசன வசனமும் நமக்கு உண்டு, பொழுது விடிந்து விடிவெள்ளி உங்கள் இருதயங்களில் உதிக்குமளவும் இருளுள்ள ஸ்தலத்தில் பிரகாசிக்கிற விளக்கைப் போன்ற அவ்வசனத்தைக் கவனித்திருப்பது நலமாயிருக்கும். வேதத்திலுள்ள எந்த தீர்க்கதரிசனமும் சுய தோற்றமான பொருளையுடையதாயிராதென்று நீங்கள் முந்தி அறிய வேண்டியது.

தீர்க்கதரிசனமானது ஒரு காலத்திலும் மனிதனுடைய சித்தத்தினாலே உண்டாகவில்லை; தேவனுடைய பரிசுத்த மனுஷர்கள் பரிசுத்த ஆவியினாலே ஏவப்பட்டு பேசினார்கள் 2 பேது. 1:16-21.

வேதாகமமானது ஒரு தீர்க்கதரிசன புஸ்தகமாகும். இஸ்ரவேலர்களுடைய சரித்திரத்தைக்கூட அவர்கள் சரித்திர புஸ்தகம் என்று சொல்லாமல் அதை தீர்க்கதரிசன நூல்கள் என்று சொன்னார்கள். கடந்த காலத்தில் நடந்த சம்பவத்தை மாத்திரம் கூறுவது சரித்திரமன்று. வருங்காலத்தில் கர்த்தருடைய ஜனத்திற்கு நிகழப் போவதையுங் குறித்து கூறுவதினால் இது தீர்க்கதரிசன வரலாறு என்று பெயர் பெற்றது.

தீர்க்கதரிசனம் என்பதின் பொருள்:

தூரத்திலுள்ளதைக் காணுதல் அல்லது முடிவில் நிகழ்வதை தரிசித்தல் என்றே அர்த்தமாம். வருங்காலத்தில் நிகழும் எல்லாவற்றிற்கும் தம் உரைகளிலோ, தம் நூல்களிலோ இடம் தரவேண்டுமென்று தீர்க்கதரிசிகள் எண்ணவில்லை. ஆனால் அவர்கள் சரித்திர சம்பவத்தின் மேல் நம்பிக்கை கொண்டிருந்தார்கள்.

யுகம் சடுதியில் முடிவடையும் என்று பலர் சொன்ன போதிலும் அவ்விதமாக அல்ல இன்னின்னின சம்பவங்கள் நிகழ்ந்து அதற்கு பின்பு முடிவடையும் என்று தீர்க்கதரிசனமாக தெரிவித்தார்கள். தீருவைப் பற்றிய தீர்க்கதரிசனம் எசேக்கியேல் கி. மு. 572 ல் சொன்னார். தீரு அழிக்கப்பட்டு அங்கே இனி ஒருவரும் குடியிருக்க மாட்டார்கள். மீனவர்கள் வலையை விரித்து காயப் போடுகிற வெறும் பாறையாக, பயனற்ற நிலமாக அது காணப்படும் என்று அவர் தீர்க்கதரிசனம் உரைத்து 250 ஆண்டுகளுக்குப் பின்பு கி.மு. 322 ல் மகா அலெக்ஸாண்டர் தலைமையில் இந்த தீர்க்கதரிசனம் நிறைவேறியது. தீரு அழிக்கப்பட்டது. அது இன்று வரைக்கும் மீனவர் வசிக்கும் பயனற்ற நிலமாக, மீனவர்கள் வலைவிரித்து காயப்போடுகிற இடமாக இருக்கிறது.

எருசலேமைப் பற்றிய தீர்க்கதரிசனம்:

தீர்க்கதரிசிகள் எல்லாரிலும் பெரியவராகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து லூக். 21:6,20,24 ஆகிய வசனங்களில் எருசலேம் புறஜாதியாரால் மிதிக்கப்படுமென்றும், அழிக்கப்படுமென்றும் தீர்க்கதரிசனம் சொன்னார். இது கி.பி. 70 ல் ரோம சேனதிபதி தீத்து மூலமாக நிறைவேறிற்று. ரோமர்கள் எருசலேமையும் அதிலுள்ள தேவாலயத்தையும் முற்றிலும் அழித்தனர்.

கி.பி. 1967 ல் யூதர்கள் அதைக் கைப் பற்றும் மட்டும் புறஜாதியார்கள் அதை ஆண்டார்கள். இப்பொழுதும் எருசலேம் ஆலயத்தில் புறஜாதியாரின் கால்கள் படுகின்றன. DOOM OF ROCK என்னப்பட்ட முகமதிய மசூதி அங்கே கட்டப்பட்டுள்ளது. அரபியர்களால் சூழப்பட்டுள்ளது. இதற்கு ஒரு முடிவு வரப்போகிறது என்றும் அறிவித்திருக்கிறது.

இவ்விதமாக திட்டமான தீர்க்கதரிசனங்கள் நிறைவேறிய அநேக சம்பவங்களை சரித்திரத்திலே காணுகிறோம். இவைகளெல்லாம்வேதாகமத்தில்முன்னறிவித்தவைகளாகும். அப்படியே கடைசி காலத்தைப் பற்றிய செய்தி கொடுக்கப்பட்டிருக்கிறது நோவா காலத்தில் நடந்தது போல நடக்கும், [லோத்தின் காலத்தில் நடந்தது போலவும் நடக்கும் என்று பரிசுத்த ஆவியானவர் மிகவும் திட்டமாக திருவுளம் பற்றியிருக்கிறார்; இயேசு கிறிஸ்து தாமே சொல்லியிருக்கிறார்.

வேதாகமத்தில் எழுதப்பட்ட பிரகாரம் தற்கால சம்பவங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. இனிமேலும் நடக்கப் போகிறது. ஆனபடியால் வேதத்தின் மகத்துவம் சொல்லிமுடியாததாக இருக்கிறது.

[தொடரும்].



இயேசு: "வானமும் பூமியும் ஒழிந்து போம், என் வார்த்தைகளோ ஒழிந்து போவதில்லை." மத். 24:35.



பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro ஏசுதாசன் | Sis. குளோரிபாய் | நாகர்கோவில் | 4-5-1993 |

(தொடர்ச்சி)

# வேத பாடம்

## எண்ணாகமம்

### எண். 11:1-3

தேவனுக்குக் கடுங்கோபமுண்டாக்கின இஸ்ரவேலர்களின் பாவங்களில் இந்த தபேராவில் நடந்த சம்பவம் ஒன்றாகும் (உபா. 9:22). தபேராவிலும், மாசாவிலும், கிப்ரோத் அத்தாவாவிலும் கர்த்தருக்குக் கடுங்கோபமுண்டாக்கினீர்கள் என்று எழுதப்பட்டுள்ளது. தபேராவில் நடந்த சம்பவம் (எண். 11: 1-3), மாசாவில் நடந்த சம்பவம் [யாத். 17:1-7] கிப்ரோத் அத்தாவாவில் நடந்த சம்பவம் எண். 11:31-35 ல் குறிப்பிடப்பட்டுள்ள சம்பவமாகும்.

எண். 11ம் அதிகாரத்தில், "பின்பு ஜனங்கள் முறையிட்டுக் கொண்டிருந்தார்கள்; கர்த்தருடைய செவிகளில் பொல்லாப்பாயிருந்தது" என்று நாம் வாசிக்கிறோம். இது கர்த்தருக்கு விரோதமாக நாவினால் செய்த பாவமாகும் [சங். 78:19]. கர்த்தருக்கு விரோதமாக இஸ்ரவேல் ஜனங்கள் பேசினார்கள், முறுமுறுத்தார்கள் என்று பார்க்கிறோம். இருதயத்தின் நிறைவினால் மனிதன் பேசுகிறான். நாவானது மனிதனுடைய சரீரத்தில் மிகவும் சிறியதாயிருந்தாலும் நாவு நெருப்புத்தான். சிறிய நெருப்பு பெரிய காட்டைக் கொளுத்தி விடுகிறது என்று யாக்கோபு மிக அழகாய் நாவின் சாஸ்திரத்தைப் பற்றி எழுதியிருக்கிறார். மனிதனுடைய நாவினால் பெரிய தீங்குகள் ஏற்படுகிறது. நீ ஒரு வார்த்தையைப் பேசுகிறதற்கு முன்பாக ஒரு முறைக்கு இரு முறை யோசி. உன் வாயிலிருந்து வார்த்தை வெளியே புறப்பட்ட பின்பு அது உனக்குரியதல்ல அது பொது சொத்து. அதை யார் வேண்டுமானாலும் எப்படியும் கூட்டிக் குறைத்து அதை வேகமாக பரப்புவார்கள். அந்த செய்தி பரவ வேண்டுமென்று நீ விரும்புகிறதினால் தான் உன் வாயிலிருந்து பேசுகிறாய். அது நீ கூரையின் மேல் நின்று பேசினாலும், வெளியே பேசினாலும், அந்தரங்கத்தில் அறைக்குள் பேசினாலும், உன் வாயை விட்டுப் புறப்பட்ட பின்பு அது வேகமாக தீயைப் போல் பரவப்போகிறதென்பதை நிச்சயமாக நீ அறிந்து கொள்.

எண்ணாகம புஸ்தகத்தில் இஸ்ரவேலர்களுக்கு உண்டான வாதைகளைப் பற்றிக்குறிப்பிட்டிருக்கிற பத்து வாதைகளுள் ஒன்பது வாதைகள் நாவினால் உண்டான பாவத்தினாலானதாகும். நாவைப் பற்றி மிகவும் அழகாகவும், சரியாகவும், திட்டமாகவும் ஒரு சாஸ்திரம் உண்டென்றால் அது யாக்கோபு எழுதின நிருபமாகும். அதில் நாவைப்பற்றி மிகவும் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது [யாக். 3-ம் அதிகாரத்தை வாசித்துப் பார்க்கவும்]. இதினிமித்தம் கர்த்தருடைய அக்கினி அவர்களுக்குள் பற்றியெரிந்து பாளயத்தின் கடைசியிலிருந்த சிலரைப் பட்சித்தது பாளயத்தின் முன்னணியிலிருந்தவர்களையல்ல, கடைசியில் ஏற்கெனவே ஆவிக்குரிய ஜீவியத்தில் பின் தங்கியிருக்கிறவர்கள் மூலமாகத்தான் இந்த நாவின் தீமையுண்டாகிறது. பின், பாளயத்தின் கடைசியில் இருந்த சிலர் பட்சிக்கப் பட்டார்கள் என்று பார்க்கிறோம். அப்பொழுது ஜனங்கள் மோசேயை நோக்கிக் கூப்பிட்டார்கள். மோசே கர்த்தரை நோக்கி விண்ணப்பம் பண்ணினார். உடனே அக்கினி அவிந்து போயிற்று. கர்த்தருடைய அக்கினி அவர்களுக்குள்ளே பற்றி எரிந்ததினால் அந்த இடத்திற்கு தபேரா என்று பேரிட்டான் என்று சொல்லப்பட்டுள்ளது.

## எண். 11:4-9

இஸ்ரவேலர்கள் மறுபடியும் அழுது தங்கள் இச்சையை வெளிப்படுத்தினார்கள் என்று பார்க்கிறோம். நமக்கு இறைச்சியைக் கொடுப்பவர் யார் என்று அவர்கள் அழுதார்கள். அதற்கு தூண்டுதலாயிருந்தது அவர்களுக்குள்ளேயிருந்த பல ஜாதியான அந்நிய ஜனங்களும், இச்சையுள்ள இஸ்ரவேலர்களுமாகும். அவர்களுடைய அடிமைத் தன வாழ்க்கையில் இருந்தபோது அனுபவித்த மாம்ச இச்சைக்குரிய ஆகாரங்களை நோக்கினார்கள். மச்சங்கள், வெள்ளரிக்காய்கள், கொமட்டிக்காய்கள், கீரைகள், வெங்காயங்கள், வெள்ளைப் பூண்டுகள் இவைகளை நினைக்கிறோம் என்பதாம்.

மன்னா அவர்களுக்கு அற்பமான ஆகாரமாகக் காணப்பட்டது. நம்முடைய ஆத்துமா வாடிப்போகிறது என்றார்கள். இந்த மன்னாவானது தூதர்களின் அப்பத்தை மனிதன் சாப்பிட்டான் என்று சங்கீதத்தில் எழுதியிருக்கிறது போல் பரலோகத்தில் ஆகாரமாயிருந்தது. இது இஸ்ரவேலர்களுக்கு 40 ஆண்டு காலமாக தினந்தோறும் [ஓய்வு நாள் தவிர] வானத்திலிருந்து அவர்களுக்கு கொடுக்கப்பட்ட ஆகாரமாய் இருந்தது அது மிகவும் ருசியுள்ளதும், வாசனையுள்ளதும், போதுமான சரீர சக்தியும், ஆத்மீக உற்சாகத்தையும் கொடுக்கக் கூடியதுமான தேவனால் கொடுக்கப்பட்ட அப்பமாக இருந்தது. அது இஸ்ரவேலர்கள் வனாந்தரத்தில் அலைந்து திரிந்த நாட்களில் அவர்களுக்கு தேவனால் கட்டளையிட்ட ஆகாரமாக இருந்தது. ஆனால் அவர்கள் இந்த மன்னாவைத் தவிர நம்முடைய கண்களுக்கு முன்னால் வேறொன்று மில்லை என்று அழுதார்கள் என பார்க்கிறோம்.

இவ்விதமாகவே கிறிஸ்துவுக்குள் வந்தபின்பும் பழைய சினிமா ஆசை, பழைய வேசித்தனங்கள், கேலி, கிண்டல்கள், பரியாசங்கள், கெட்ட புஸ்தகங்களை படித்தல், படங்களைப் பார்த்தல், கெட்டக் காரியங்கள் செய்கிறது இவைகளை நினைத்து இருதயத்தில் பின்மாறுகிற கிறிஸ்தவர்களுண்டு. சிலர் பின்மாறுகிறது வெளிப்படையாய்த் தெரியாது. அந்தரங்கமாக கொஞ்சம் கொஞ்சமாக பின்மாறி ஒரு நாள் வெளிப்படையான குற்றவாளிகள் என்று தெரியவரும். இஸ்ரவேலர்கள் தங்களுக்கு வேண்டிய ஆகாரங்களுக்காக, தேவைகளுக்காக இறைவனிடத்தில் அவர்கள் விண்ணப்பம் பண்ணலாம், காத்திருக்கலாம், அவரை விசுவாசிக்கலாம். ஆனால் அவரை விசுவாசியாமல் போனார்கள் [சங். 78:19-21]. இதினிமித்தம், கர்த்தர் கோபம் கொண்டார். மோசேக்கும் அவர்கள் அழுதது தகாததாய்க் காணப்பட்டது.

## எண். 11:10-15.

மோசே இறைவனிடத்தில் மன்றாடுகிறார். நான் ஒருவனாய் இந்த ஜனங்களின் பாரங்களை சுமக்க என்னால் இயலாது. எனவே இவர்களுடைய பாரத்தை நான் தாங்கிக் கொள்ளமாட்டேன், எனக்கு இறைச்சி கொடு என்று என்னை நோக்கி அழுகிறார்கள். நான் எங்கேயிருந்து இவர்களுக்கு இறைச்சி கொடுப்பேன்? இந்த ஜனங்கள் எல்லாரையும் நான் ஒருவனாய்த் தாங்கக் கூடாது. தேவரீர் இப்படி எனக்குச் செய்யாதபடி என்னைக் கொன்றுபோடும், எடுத்துக் கொள்ளும் என்று ஜெபம் பண்ணினார். மோசேயினுடைய முறையிடுதல்களில் இதுவும் ஒன்றாகும். எந்த சமயத்திலேயும் நாம் இறைவனிடத்தில் ஜெபித்து ஆலோசனை பெறுவதே உசிதமான காரியமாகும்.

## எண். 11:16,17.

மோசே இப்படி ஜெபித்ததினிமித்தம் கர்த்தர் மோசேக்கு உதவியாக எழுபது மூப்பர்களைத் தருவேன் என்று வாக்களிக்கிறார். இஸ்ரவேல் மூப்பர்களில் எழுபதுபேரை ஆசரிப்புக் கூடாரத்துக்கு முன்பாக உன்னோடு கூட வந்து நிற்கும்படிச் செய். நான் இறங்கி வந்து அங்கே உன்னோடே பேசி நீ ஒருவன் மாத்திரம் ஜனங்களின் பாரத்தை சுமக்காமல், உன்னோடு கூட அவர்களும் அதைச் சுமப்பதற்காக உன்னிலிருக்கிற ஆவியை அவர்கள் மேலும் வைப்பேன் என்றார்.

இந்த எழுபது முப்பர்கள் எப்படி தெரிந்தெடுக்கப்பட்டார்கள் என்பது நமக்குத் திட்டமாகத் தெரியாது. ஆனாலும் ஒரு வருஷத்துக்கு முன்பாகவே இந்த 70 மூப்பர்கள் தெரிந்தெடுக்கப்பட்டிருந்தார்கள் என்று யாத் 24:1-11 மூலமாக அறிந்து கொள்கிறோம். இவர்கள் சபையின் காரியங்களை கவனிக்கும்படியாக பொறுப்புள்ள சபையின் மூப்பர்கள் என்று வச. 16 ன் மூலமாக நாம் அறிந்து கொள்கிறோம். இவர்கள் ஏற்கெனவே உண்மையுள்ளவர்களாயிருந்தார்கள். மோசேயோடு கூட சபையின் பாரங்களை சுமக்கும்படியாக சபையை நடத்தும்படியாக மோசேயின் தலைமையின் கீழ் சபைக்கு பொறுப்பாளிகளாக விளங்கும்படியாக தேவ ஆவியினால் நிரப்பி உனக்கு உதவியாகக் கொடுக்கிறேனென்று தேவன் வாக்கருளினார். அப்பொழுது தேவன் சொன்னது: உன்னிலிருக்கிற ஆவியை எடுத்து அந்த 70 பேர் மேல் வைப்பேன் என்பதே. அந்த அளவு மோசே ஆவியின் நிறைவு உடையவராக இருந்தார் என்று அறிந்து கொள்கிறோம் (வச. 17.)

## எண். 11. 18-20.

இறைச்சி கேட்டு கர்த்தருக்கு முன்பாக அழுதீர்களே ஒரு நாள், 2 நாள், 5 நாள், 10 நாள், 20 நாள் மட்டுமல்ல ஒரு மாதம் வரைக்கும் நீங்கள் இறைச்சி புசிப்பீர்கள் உங்களுக்கு நான் இறைச்சி கொடுப்பேன் என்று தேவன் சொன்னார்.

## எண். 11:21,22

என்னோடிருக்கிற காலாட்கள், ஊழியர்கள் மாத்திரம் ஆறு லட்சம் பேர். மேலும் எத்தனையோ லட்சம் ஜனங்களும் இருக்கிறார்கள். அவர்களுக்கு இறைச்சி ஒரு மாதம் கொடுப்பேன் என்று தேவரீர் திருவுளம் பற்றுகிறீர். ஆடு மாடுகள் அவர்களுக்கு அடித்தாலும் போதாது. சமுத்திரத்தின் மச்சங்களெல்லாம் அவர்களுக்கு சேர்த்தாலும் அவர்களுக்கு போதுமோ என்று இறைவனிடத்தில் கேட்டார்.

## எண். 11:23

அதற்கு கர்த்தர் மோசேயை நோக்கி: கர்த்தருடைய கை குறுகியிருக்கிறதோ என் வார்த்தையின் படி நடக்குமோ நடவாதோ என்று நீ இப்பொழுது காண்பாய் என்றார். இறைவனால் எதையும் செய்ய முடியும், இறைவன் என்ன சொல்லுகிறாரோ அதை நிறைவேற்றி முடிப்பார். முடிக்க வல்லவர், கடவுளுடைய கை இப்பொழுதும், எப்பொழுதும் குறுகியில்லை. அவர் தாம் சொன்னபடி செய்கிறார். இறைவன்

என்ன செய்கிறர், என்றல் அதற்கு பதில் அவர் என்ன சொன்னாரோ அதை நிறை வேற்றிக் கொண்டிருக்கிறர் என்பதாம்.

இறைவன் சொல்கிறரென்றல் செய்கின்றரென்று அர்த்தம். நாம் ஒரு வார்த்தை சொல்லுகிறேமென்றல் அதை நிறைவேற்றலாம், நிறைவேற்றமல் மறுதலித்து விடுவோம். ஒருவருக்கு 5/- ரூபாய் தருகிறேன் என்று சொல்லலாம். அவர் வந்து கேட்கும் போது ஐயோ, நான் எதிர்பார்த்த இடத்தில் கிடைக்கவில்லை தயவு செய்து மன்னித்து விடுங்கள் என்று நாம் சொல்லுவோம். ஆனால் இறைவன் சொல்லுகிறரென்றல் செய்கிறரென்று அர்த்தம். அது செயல். வெறும் சொல்லல்ல. கர்த்தருடைய வார்த்தையின்படி நடக்குமோ நடவாதோ என்று நீ இப்பொழுது காண்பாய் என்று இறைவன் திருவுளம் பற்றினார். இறைவன் பொய் உரைப்பதில்லை.

(தொடரும்.)

"நாவும் நெருப்புத் தான், அது அநீதி நிறைந்த உலகம்" யாக். 3:6

## சுவிசேஷம்

நம்பிக்கையுடைய சிறைகளே, அரணுக்குத் திரும்புங்கள்; இரட்டிப்பான நன்மையைத் தருவேன், இன்றைக்கே தருவேன் [சகரி. 9:12].

1. இந்த வசனத்தில் குறிக்கப்பட்டவர்கள் சிறைகள். சிறைகள் என்றல் கடன்காரர்கள், பாவிகள் பிசாசினல் பிடிக்கப்பட்டு சிறைபட்டிருக்கிறவர்கள். பலவித கட்டுக்குள், துக்கத்துக்குள் இருக்கிற மக்களை சிறைகள் என்று எழுதப்பட்டுள்ளது. நம்பிக்கையுடைய சிறைகளே என்று எழுதியிருக்கிறதினல் தேவ நம்பிக்கையுடைய மக்களாக இவர்கள் காணப்படுகிறர்கள். ஆனலும், பலவிதமான கடன் பிரச்சனையினலும், பாவத்தினாலும் சிறைக் கைதிகளைப் போல இருக்கிறர்கள்.

2. அவர்கள் செய்ய வேண்டியது இன்னதென்று இந்த வசனத்திலே குறிப்பிடப்பட்டுள்ளது அரணுக்குத் திரும்புங்கள். அரண் என்றல் இரட்சிப்பு. இரட்சணியத்தைத் தேடுவது என்று அர்த்தமாம் [ஏசா. 26:1]. இரட்சணியத்தை அவர்கள் தேட வேண்டும். மெய் தேவனண்டை, தேவனண்டை திரும்ப வேண்டும்.

3. திரும்புகிறவர்களுக்கு உண்டாகும் நன்மை. இரட்டிப்பான நன்மையைத் தருவேன். இரட்டிப்பான நன்மை பரமபாக்கியம் ஆகும். அவர்கள் விடுவிக்கப்படுவார்கள். அவர்கள் சுகமடைவார்கள். அவர்கள் மன்னிப்பைப் பெற்று பரம சமாதானமும், சந்தோஷமும் அடைவார்கள், பரம பாக்கியம் அடைவார்கள் என்பதாம்.

# விழுந்தவர்கள் எழுந்திருக்கிறதில்லையோ?

பின்மாற்றம், விழுதல், வழிவிலகிப் போதல் இவைகளெல்லாம் ஒன்று போல் காணப்பட்டாலும் எல்லாம் ஒன்றில்லை.

பின் மாற்றம்:

ஒருவன் கடவுளை விட்டு விலகுகிறது பின்மாற்றமாகும் (1 இரா. 11:9). இது ஆதியில் கொண்ட அன்பை விட்டு விலகுவதாகும் (வெளி. 2:4). எந்த ஒரு வீழ்ச்சியும் உடனே நிகழ்கிறதில்லை. பின்மாற்றம் படிப்படியாகவே உண்டாகிறது. பின்மாற்றத்திற்கு முக்கிய காரணம் மனமேட்டிமையாகும். ஒருவனிலே பெருமையின் ஆவி கிரியை செய்கையில், அவனுடைய சொல் சபையில் எடுபடவில்லை, அவனுக்கு மரியாதை கிடைக்கவில்லை, அவனுடைய விருப்பம் நிறைவேற வில்லை, அவனுக்கு ஸ்தானங்கள் கிடைக்க வில்லை என்றதும் அவன் பின் மாற ஆரம்பிக்கிறான். அவனுடைய திட்டங்கள் விருப்பங்களுக்கு இடமில்லை என்றதும் பின் மாற அரம்பிக்கிறான் நீதி. 16:18).

அடுத்தபடியாக பொருளாசை, உலக நேசம், பாவ நேசம் வீழ்ச்சியையும், பின்மாற்றத்தையும் உண்டாக்குகிறது. இதற்கு காரணம் தேவ பயமில்லாமையே [எரே. 2:19]. தேவ பயமில்லாதவர்கள், நன்றியில்லாதவர்கள், துணிகரமுள்ளவர்கள். ஒருவன் பாவத்தில் விழுந்தால் அதிலேயே விழுந்து மூழ்கி கிடக்க வேண்டுமென்ற அவசியமில்லை. பிள்ளைகள் விழுகிறார்கள் ஆனால் எழுந்து நடக்கிறார்கள். கர்த்தருக்கு பயப்படாத ஜாதிகளும், ராஜ்யங்களும் அழிக்கப்படும். நியாயத்தீர்ப்பு உன்னை எதிர் நோக்கியிருக்கிறது (சங். 2:15) நீ பாவத்தில் படுத்துக் கிடக்காதே சீ போ! என்று உதறிப்போட்டு எழுந்திரு ஏசா. 30:22). இல்லையென்றால் நீ உன் உயிர் மாத்திரம் தப்பினால் போதும் என்று ஓடும் நாட்கள் வரும். ஒருவனுக்கு எவ்வளவு திரளான ஆஸ்தியிருந்தாலும் அது ஜீவனல்லவே (லூக் 12:15). ஜீவன், நித்திய ஜீவனல்லவா விலையேறப்பெற்றது கபடத்தை பற்றிக் கொண்டிராதே [எரே. 8:5,6]. யதார்த்தம் பேசு, திரும்பி வா, எழுந்திரு (ஓசி. 11:7).

சிலர் பரிசுத்தத்தை வெறுக்கிற ஜாதிகளாயிருப்பார்கள். இவர்கள் கிடக்கிறது கீழே என்றாலும் பரிசுத்தவான்களை, சபையை அல்லது யாரையாவது குறை சொல்லித் திரிவார்கள். தந்திரமான வார்த்தைகளைப் பேசுவார்கள். தங்களுடைய பாவத்தைக் குறித்தும் வெட்கப்படாத பொய்யர்கள். கடவுள் அவர்களோடு இல்லாவிட்டாலும் தாங்கள் ஏதோ சாதிக்கப் போகிறோம் என்பார்கள். கடைசியில் சாத்தானாலும், பாவத்தினாலும் தாக்கப்பட்டு மேற்கொள்ளப்படுவார்கள். தலைவனின் சொல்கேளாத துணிகரமுள்ளவர்கள் இவர்கள், அதற்கான பலனையும் அநுபவிக்கிறார்கள் [எண். 14:43-45; எரே 8:12).

சிலர் விழுகிறதும், எழுந்திருப்பதுமாயிருப்பார்கள். ஊழியம் செய்தாலும் இரண்டு எண்ணமுடையவர்களாய் இருப்பார்கள். செய்வோமா விட்டுவிடுவோமா, எல்லாம் சரியாயிருந்தால் சந்தோஷம். குறைவுண்டானால், குற்றச்சாட்டு உண்டானால், இருதயத்தில் பின்மாற ஆரம்பிப்பார்கள்.

> "எண்ணித்துணிகக் கருமம் துணிந்தபின்
> எண்ணுவமென்பது இழுக்காம்."

கிறிஸ்தவ ஜீவியமோ கோபுரம் கட்டுவது போன்ற ஒரு பெரிய காரியமாகும் [வீடு கட்டுவதல்ல]. பாதியிலே விட்டால் இழுக்கு வரும். தேவ ஊழியமோ ஜீவனைத் தியாகம் செய்வதாகும். பின்னிட்டுப் பாராதே [லூக். 9:62] முக்தி கிடையாது. DO OR DIE என்றொரு பழமொழியுண்டு. செய் அல்லது செத்து மடி. காயம் மார்

யில் பட்டால் பரவாயில்லை [முதுகிலல்ல]!

இறைவனோடு செய்த உடன்படிக்கையையும் அறிந்த சத்தியத்தையும் விட்டு விட்டு தன் வழியில் முயற்சி செய்து தாங்களே கொழுத்தின அக்கினியில் களி கூறுகிறவர்கள். தங்களிடத்தில் கடவுள் இல்லையென்றாலும், தாங்கள் தவறான வழியில் துரோகம் செய்து பாவத்தில் இருக்கிறோம் என்று தெரிந்தாலும் வேளாவேளைகளில் உண்டாகும் உளக்கிளர்ச்சியை வைத்து இவர்களுக்கு திருப்தி, எப்படியும் போய்ச் சேர்ந்திடுவோம் என்ற எண்ணம் [நீதி. 14:14]. ஐயோ பாவம்! எல்லாவற்றையும் இழக்கும் நாட்கள் வருகிறது [எரே. 15:5,6].

கபடற்ற சுவிசேஷசத்திலிருந்து வீழ்ச்சி:

பாவ வீழ்ச்சியைத் தொடர்ந்து உபதேச வீழ்ச்சியுண்டாகிறது. அது ஒரு மயக்க நிலை, தெளிவில்லாமை, அப்போஸ்தலனல்லாத தவறான சொப்பனக்காரர்களைப் பின்பற்றிப் போதல்; கிருபையினின்று விழுதல். அது ஆச்சரியமல்ல. சாத்தானும் ஒளியின் தூதனுடைய வேஷத்தை தரித்துக் கொள்வானே [2 கொரி. 11:13-15; 2 கொரி. 11:3,4; கலா. 3:1-3; 5:4,7,8,9]. தேவன் அதை மிகவும் வெறுக்கிறார்.

நாமத்திற்காகவும், நாளுக்காகவும், வேளைக்காகவும் வைராக்கியம் பாராட்டி தேவனுடைய விசேஷித்தவைகளை விட்டுவிடுகிற, விழுந்த கூட்டம் இவர்களிலே UNITY இருக்காது, பரிசுத்தம் இருக்காது, எந்த ஒழுங்கும் இரா. திருச்சபையாய் இருக்க மாட்டார்கள்.

இப்படிபட்ட வீழ்ச்சிகளிலிருந்து மனந்திரும்பும்படி தேவன் அழைக்கிறார் [2 நாளா. 30:6-9; ஏசா. 3:6; எரே. 3:12,14, 22; ஓசி. 6:1]. அதற்காய் ஜெபம் பண்ணுகிறவர்களே (சங். 80:3;85:4; புல. 5:21). எழும்புவார்கள். இவ்விதமான தவறுதல்களுக்கு மற்றவர்களை வழி நடத்துகிறவர்களுக்கு வரும் தண்டனையோ மிகப் பெரிது [நீதி. 28:10; மத். 18:6].

அறியாமையால் விழுந்து போனவர்கள் எழுந்திருப்பார்கள். மனந்திரும்புவார்கள் (சங். 37:24; நீதி. 24:16) ஆம் நீதிமான்கள் எழுந்திருப்பார்கள் [நீதி. 24:16]. நீ உன் பாவத்தை அறிக்கை செய் [ ஏசா. 59:12,13; எரே. 3:13,14;14:7-9) அப்பொழுது கர்த்தர் உன்னை குணமாக்குவார் [எரே. 3:22; ஓசி. 14:4] உன்னை ஆசீர்வதிப்பார் [நீதி. 28:13,14; ஏசா. 26:3, 4; கொலோ. 1:21-23]. எழுந்திரு, நீ இன்ன நிலையிலிருந்து விழுந்தாய் என்பதை எண்ணி மனந்திரும்பு. கர்த்தர் உன்னை அழைக்கிறார்.

ஒழுங்கான வேத வாசிப்பு, ஜெபம், ஆலய ஆராதனை, கூட்ட ஒழுங்குகள் சகோதர ஐக்கியம் இவைகளை அசட்டை பண்ணுகிறவர்களும் கர்த்தருடைய வசனத்தின்படி தங்களை, தங்களுடைய வாழ்க்கையை அமைத்துக் கொள்ளாதவர்களும் பின் மாற்றக்காரரோடு தொடர்புடையவர்களுமே விழுகிறார்கள்.

நீ விழாதே!

விழுந்திருக்கிற நீ எழும்பு, வா! (லூக். 15:17-20). இறைவன் உன்னை ஏற்றுக் கொள்வார்.



"என் சத்துருவே, எனக்கு விரோதமாய்ச் சந்தோஷப்படாதே; நான் விழுந்தாலும் எழுந்திருப்பேன்." மீகா. 7:8.



சிறுவர் பகுதி

# "கூடி ஜெபித்தால் என்ன நடக்கும்."

"முப்புரிநூல் சீக்கிரமாய் அறுது" என்று வேதம் (பிர. 4:12) சொல்கிறது. அதுபோலவே, நம்முடைய ஜெப வாழ்க்கையிலும் கூட்டு ஜெபம் மிகவும் வலிமையுள்ளது. நாம் கூடி ஜெபித்தால் கோடி நன்மைகள் பெறுவோம் என்பது திண்ணம்.

நீதிபுரம் என்னும் சிற்றூரிலே, நோவா, யோபு, சாமுவேல், என்னும் சிறுவர்கள் ஒரு பள்ளிக் கூடத்தில் படித்து வந்தார்கள். ஒவ்வொருவரும் வெவ்வேறு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்றாலும், பள்ளிகூடத்திற்கு செல்லும்போதும், திரும்பி வரும்போதும் சேர்ந்தே சென்று வருவார்கள். பள்ளிப்படிப்புகளிலும் ஒருவருக்குத்தெரியாத, புரியாத பாடங்களை மற்றவர்கள் சொல்லிக் கொடுத்துக் கொள்வார்கள். ஞாயிறு பள்ளிக்கு அவர்கள் செல்வதும் வழக்கமான ஒன்று. அந்த வாரம் ஞாயிறு பள்ளியில் கீழ்க்காணும் வேத பகுதி போதிக்கப்பட்டது:

"வாரத்தின் முதல் நாளாகிய அன்றைய தினம், சாயங்கால வேளையிலே, [இயேசுவின்] சீஷர்கள் கூடியிருந்த இடத்தில் [உயிர்தெழுந்த] இயேசு வந்து, நடுவே நின்று: உங்களுக்கு சமாதானம் என்றார் (யோ. 20:19)

"யாக்கோபு, தன் குமாரரை அழைத்து நீங்கள் கூடிவாருங்கள், கடைசி நாட்களில் உங்களுக்கு நேரிடும் காரியங்களை அறிவிப்பேன்." (ஆதி. 49:1)

இதைக் குறித்து ஞாயிறு பள்ளியின் ஆசிரியர் விவரித்துச் சொல்லும் போது: பிள்ளைகளே நீங்கள் கூடி வந்து ஜெபிக்கும் போது, இறைவனாகிய இயேசு நாதர் உங்கள் மத்தியில் பிரசன்னமாகி, வருங் காரியங்களை உங்களுக்கு அறிவிப்பார். ஆனபடியால் இன்று முதல் நீங்கள் தினந்தோறும் கூடி ஜெபியுங்கள் என்று போதனை செய்தார். அன்று முதல் நோவா யோபு, சாமுவேல் ஆகிய மூன்று சிறுவர்களும் கூடிஜெபித்து வந்தார்கள்.

அவர்கள் படித்து வந்த பள்ளிக்கூடத்தின் நிர்வாகியான இராஜ துரை ஒரு விக்கிரக ஆராதனைக்காரர். அந்த ஊரிலும் அநேக குடும்பங்கள் விக்கிரகாராதனை செய்து வந்தார்கள். அவ்விக்கிரகங்களுக்கு விழா கொண்டாடும் பண்டிகை நாள் ஒன்று வ ந் த து அந்த ஆண்டு, ப ள் ளி சிறுவர்களிடமிருந்து அவ் விழாவிற்கு கட்டாய நன்கொடை வசூலிப்பதற்கு பள்ளி நிர்வாகம் முடிவு செய்திருந்தது. இராஜதுரை ஊரிலே பெரிய பணக்காரர், ஆதலால் விழா அவரது தலைமையில் நடைபெறும்படியாக ஊர்மக்கள் அவரைக் கேட்டுக் கொண்டார்கள்.

அப்பள்ளியில் படிக்கின்ற மாணவர்களில் பெரும்பாலானவர்கள் விழாவிற்கு நன்கொடை கொடுத்து விட்டார்கள். ஆனால் நோவா, யோபு, சாமுவேல் ஆகிய மூவரும் நன்கொடை கொடுப்பதற்கு மறுத்துவிட்டார்கள். இதைக் கேள்வியுற்ற இராஜதுரை வெகுண்டெழுந்து, இந்த சின்னப் பயல்களுக்கு இவ்வளவு திமிரா? என்னுடைய பள்ளிக் கூடத்தில் படித்துக்கொண்டு என்னுடைய கட்டளைக்கு கீழ்ப்படிய மறுப்பதா! அவர்களை என்ன செய்கிறேன் பாருங்கள், என்று உறுமினார். உடனே தனது காரியதரிசியை பள்ளிக்கு அனுப்பி, பண்டிகைக்கு இன்னும் இரண்டு நாட்கள் தான் உள்ளன. அதற்குள் நீங்கள் மூவரும் மற்றவர்களைப் போல நன்கொடை கொடுத்து விட்டால் நல்லது, இல்லாவிட்டால் பண்டிகை நாளில் எல்லா ஜனங்களுக்கும் முன்பாக

உங்கள் மூன்று பேரையும் அவமானப்படுத்தி, உங்களை என்னுடைய பள்ளியிலிருந்து நிரந்தரமாக வெளியேற்றி விடுவேன் என்று அறிவிக்கச் செய்து அவர்களை மிரட்டினர்.

ஆனால் அவர்களோ அதைக்கண்டு பயப்படவுமில்லை, இராஜ துரையின் கட்டளையை இலட்சியம் செய்யவுமில்லை. நாட்கள் நகர்ந்தன. விடிந்தால் நாளைக்கு பண்டிகை நாள். அன்று மாலையில் தங்களது வழக்கத்தின்படியே அவர்கள் கூடி ஜெபித்தார்கள்.

நோவா:- "கர்த்தாவே! இரண்டு பேராவது, மூன்று பேராவது என் நாமத்தினாலே எங்கே கூடியிருக்கிறார்களோ, அங்கே அவர்கள் நடுவிலே நான் இருக்கிறேன் [மத். 19:20] என்ற உமது வார்த்தையை மகிமைப்படுத்தும்" என்று ஜெபித்தான்.

யோபு:- "என் தேவனே! உமது பிள்ளைகளாகிய அடியார்களுக்கு விரோதமாக பள்ளி நிர்வாகியான இராஜதுரை பேசின பேச்சை நீர் கேட்டீரே; இப்பொழுதும் கர்த்தராகிய நீரே மெய்யான தெய்வம் என்பதை ஜனங்களுக்கு காண்பித்து உம்முடைய நாமத்தை மகிமைப்படுத்தும்" என்று கெஞ்சி ஜெபம் பண்ணினான்.

சாமுவேல்:- "இயேசு கிறிஸ்துவே! எங்கள் இரட்சகரே, நீரே மெய்யான தேவன் வானத்தையும் பூமியையும் உண்டாக்காத தெய்வங்கள் எல்லாம் ஒழிந்து போகட்டும்; அவைகளை நம்புகிறவர்களும் வெட்கப்பட்டு போகட்டும்; இந்த ஊரில் இன்றோடே விக்கிரகாராதனை நின்று போகட்டும். அந்நிய தேவர்களுடைய நாமங்களை நாங்கள் எங்களது நாவினாலும் உச்சரிக்க மாட்டோமே, இப்படியிருக்க அந்த பொல்லாத மனிதன் இராஜதுரையின் கட்டளைக்கு, விருப்பத்துக்கு நாங்கள் இணங்குவது எப்படி? ஆதலால் தேவரீர் இங்கு எங்கள் மத்தியில் எழுந்தருளி, எங்களை இரட்சித்தருளும்" என்று இறைவனிடம் மன்றாடினார்கள்.

விசுவாசமுள்ள அவர்களது ஜெபத்தைக் கேட்டருளி, இயேசு கிறிஸ்து அங்கு பிரசன்னமானார். தேவன் அவர்களை நோக்கி: 'பயப்படாதேயுங்கள், உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக; என்னிடத்தில் விசுவாசமுள்ளவர்களாக இருங்கள். இன்றைக்கு நான் உங்களுக்குச் செய்யும் இரட்சிப்பைப் பாருங்கள்; இன்றைக்கு நீங்கள் காண்கிற அந்த எகிப்தியனை (துன்மார்க்கன் இராஜ துரையை) இனி என்றைக்கும் காண மாட்டீர்கள்' என்று திருவுளம் பற்றினர் [யோ. 14:1, யாத். 14:13].

காரிருள் மெல்ல மெல்ல விலகி, கதிரொளி வீசத் தொடங்கியது. ஊரில் உள்ள நல்லோர்கள் அச்சிறுவர்களுக்கு அன்று வரப்போகிற துன்பத்தை நினைத்து வருந்தினர்கள். ஆனாலும் துன்மார்க்கர்கள் தாங்கள் நினைத்த காரியம் கைக்கூடப் போகிறதை எண்ணிக் கொக்கரித்தார்கள். பள்ளி மைதானத்தில் எல்லோரும் கூடி வந்து விட்டார்கள்.

இராஜதுரையின் வருகைக்கு காத்திருந்தார்கள். நேரம் கடந்து கொண்டே சென்றது. ஆகவே அவரை அழைத்து வருவதற்கு ஆட்கள் அனுப்பப்பட்டனர். ஆனால் அங்கே நடந்தது என்ன? முதல் நாள் இரவு தூங்குவதற்காக படுக்கையறைக்குச் சென்ற இராஜதுரை இன்னும் எழுந்திருக்கவில்லை. கூப்பிட்டு, கதவை தட்டிப் பார்த்தார்கள். பதில் இல்லை. பின்னர் கதவை உடைத்து கொண்டு உள்ளே சென்றார்கள். அங்கே அவர்கள் கண்ட காட்சி, ஐயோ! பரிதாபம் இராஜ துரை மாரடைப்பினால் மரித்துப் போயிருந்தார். தேவன் முதல் நாள் அச்சிறுவர்களுக்கு சொன்னபடியே காரியம் இராஜதுரைக்கு சம்பவித்தது.

'தேவன் ஒருவரே . . .'
THERE IS ONE GOD...

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

தேவனுடைய பிள்ளைகளுக்கு விரோதமாக எழும்பி நின்ற துன்மார்க்கர்களின் பண்டிகை நாள் துக்கநாளாக மாறியது. தேவ பிள்ளைகளுடைய சஞ்சலம் சந்தோஷமாகவும், அவர்களுடைய துக்கம் மகிழ்ச்சியாகவும் மாறினது. அத்துடன் அந்த விக்கிரகாராதனை பண்டிகை அவ்வூரில் நிறுத்தப்பட்டது. அநேக மக்கள் மனந்திரும்பி, மெய் தெய்வத்தின் மேல் விசுவாசம் வைத்து, இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டார்கள்.

கிறிஸ்துவுக்குள் அன்பான பிள்ளைகளே, நாமும் அவர்களைப் போல தினமும் கூடி வந்து ஜெபம் பண்ணுவோமாக. அப்பொழுது தேவன் நம்மை இரட்சித்து நம்முடைய தேவைகளை எல்லாம் சந்திப்பார். அற்புதங்கள் செய்வார்; அதிசயங்களை நாம் காணும்படியாக நம்மை நடத்துவார். நீங்கள் ஒருவரை ஒருவர் [ஜெபத்தில்] தாங்கி, ஒருவருக்காக ஒருவர் ஜெபம் பண்ணுங்கள் இது கர்த்தருக்குப் பிரியமானது.

"அவர்களெல்லாரும் ஒரு மனப்பட்டு ஓரிடத்திலே வந்திருந்தார்கள். அவர்கள் ஜெபம் பண்ணினபோது, அவர்கள் கூடியிருந்த இடம் அசைந்தது."

அப். 2:1;4:31.

### வாசகர்களின் கவனத்திற்கு:-

பத்திரிகையின் சந்தா எண் (Mailing List) மாற்றப்பட விருப்பதால் தங்களுடைய சந்தா எண், முகவரி தெளிவாக எழுதி புதுப்பித்துக் கொள்ளவும், இதுவரை சந்தா செலுத்தாதவர்கள் ஜூலை இறுதிக்குள் செலுத்தி புதுப்பித்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கின்றோம்.

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   5 [திங்கள்] ஜூலை 1993
   2 [திங்கள்] ஆகஸ்ட் 1993
   1 [புதன்] செப்டம்பர் 1993
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   CHIEF PASTOR. N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078. INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் *111* - JULY '93



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

— மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்)
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) எனகின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப் 1 : 1; 10:40-43)

CHIEF PASTOR N LAZAR

### இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

தேவ சித்தம் செய்வதில் குழப்பமடையும் விசுவாசிகள் வேதத்தையும், சாட்சி ஆகமத்தையும் கவனிக்கவேண்டும். கிறிஸ்தவர்களில் அறவுரை கூறுவோர் அநேகர் உண்டு. அருளுரை கூறுவோரே இப்பொழுது தேவை. இதைச்செய், அதைச் செய்யாதே என்று கூறும் வாழ்க்கையல்ல கிறிஸ்தவ வாழ்க்கை. நமக்குள் வாசம் பண்ணும் பரிசுத்த ஆவியானவரால் வழி நடத்தப்படும் தினசரி வாழ்க்கையே கிறிஸ்தவ வாழ்க்கை. அவர், நாம் சுயக்கட்டுப்பாடுடன் நடக்கவும் ஆண்டவருடைய வசனத்திற்கேற்ப வாழவும் உதவுகிறார். உண்மையுள்ளவைகளெவைகளோ, கற்புள்ளவைகளெவை களோ அவைகளையே சிந்தித்துக் கொண்டிருங்கள் பிலி. 4:8 ன்படி நமது மனத்தின் இந்த எண்ணங்களையே நாம்சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது, பரிசுத்த ஆவியானவர் நம்மை வழி நடத்துவதற்கேற்ப நாம் நடக்கும் போது ஆண்டவரை மகிமைப்படுத்தி வாழ்க்கை வழி முறைகளை நாம் உருவாக் கிக் கொள்ள முடியும். தேவசித்தத்திற்கு மாறாக அறவுரை கூறும் ஆட்களைக் குறித்து எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். ஒரு வகையில் பார்த்தால் இயேசுவும் கூட பஸ்கா பண்டிகை வரை தமது மரணத்தைத் தள்ளிப்போட்டார். அவரது விரோதிகள் அவரைக் கொல்லத் திட்டமிட் டிருப்பதை அறிந்த அவர், அவர்களிடம் பிடிபடுவதை, காலத்துக்கு முன் மரிப்பதை கவனமாக தவிர்த்தார். அவர்களிடம் முன்னதாகவே சிக்கி சிலுவை மரணத்துக்குத் தப்புவது அவருக்கு எளிதாக இருந்திருக்கலாம் ஆனாலும் அவர் காத்திருந்தார். தமது வேளை வரும் வரை பிதாவா னவருக்குக் கீழ்ப்படிவதையே தெரிந்து கொண்டார். ஆகையால், நம் மைக்குறித்த தேவனுடைய சித்தந்தை நிறைவேற்றும் தீர்மானத்தோடு வாழ வேண்டும். ஆண்டவருக்கு நாம் ஒப்புக்கொடுத்த வாழ்க்கை, அவர் நமக்கு நியமித்த பணியை நிறைவேற்றி முடிக்க வேண்டும். நமக்கு இறைவன் நியமித்திருக்கிற ஓட்டத்தை ஓடி முடிக்க வேண்டும். உங்களுக்குரிய ஆண்டவருடைய சித்தத்தையே செய்யுங்கள். சகலமும் நிறைவாயிருக்கும். அறவுரை கூறுவோரை, காரமற்ற சாந்து பூசுகிறவர்களை அகற்றுங்கள்; அருளுரை கூறுவோரைத் தேடுங்கள். கர்த்தர் உங்களைசரியாய் வழி நடத்துவார்.

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

# சத்திய வேதம்

*[தொடர்ச்சி]*

பொதுவாக மற்ற மதங்களிலேயும் குறிசொல்லுதல் தீர்க்கதரிசனங்கள் போல் காணப்பட்டாலும் அவைகள் தீர்க்கதரிசனங்கள் அல்ல. அவைகள் மனிதர் தங்கள் பகுத்தறிவினாலும், பல ஏதுகளினாலும் இன்னது இப்படி நடக்குமென்று யோசனையாக சொல்லுகிறதாகும். அவைகள் சந்தேகத்துக்கு இடமாக அவர்கள் இரு அர்த்தத்துடன் சொல்லுகிறபடியால் அவைகள் தீர்க்கதரிசனமென்றல்ல, முன்னறிவு என்று சொல்லலாம்.

ஒரு காரியம் நிச்சயமாய் சம்பவிக்கும் என்று அறிவிப்பது தேவனுக்கு மாத்திரம் உண்டு. ஆதலால் நடந்தவைகளுக்கு சம்பந்தமில்லாத ஒன்று நடப்பதற்கு ஏற்ற ஏதுக்கள் இல்லாமலும், பின்பு இவ்விதமாய் நடக்கப்போகிறது என்று முன்னறிவிக்கிறது தேவனுடைய செய்கையாகும். அது மெய்யான தீர்க்கதரிசனம். ஆகிலும் விக்கிரகபுத்திகாரர்கள் தங்களுக்குள்ளும் தீர்க்கதரிசனங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன என்றும் அவர்கள் சொல்லிக் கொள்ளலாம். ஆனால் ஒத்துப் பார்த்தால் அதில் மிகுந்த வித்தியாசம் இருக்கும். முன்னறிவு உள்ளவர்கள் சில காரியங்களை சொல்ல முடியும்.

ஒருவர் பஸ்ஸில் பிரயாணம் செய்து வந்திருக்கிறுரென்றல் அவரது வலது பக்கத்தில் தூசி பட்டிருந்தால் அவர் அந்த பஸ்ஸிலே வலது பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறர் என்று அறிந்து கொள்ளலாம். இடது பக்கத்திலிருக்கிறவர்களின் மேல் தூசி படிந்திருக்காது. அவ்விதமாக ஒருவருடைய மனநிலையை அவர் உட்காரும் நிலையின் மூலமாக அறியலாம். இதெல்லாம் தீர்க்கதரிசனமல்ல. இது முன்னறிவினால் பகுத்தறியக் கூடியதாகும்.

கிரேக்க தேசத்திலே ஒலிம்பி டெல்பி (OLYMPI, DELPHY) என்னப்பட்ட ஒரு கோயில் இருந்தது. டெல்பி அந்த கோயில் விக்கிரகத்துக்குப் பணிவிடை செய்த பூசாரியான ஒரு ஸ்திரீ. அவள் குறி சொல்லுகிறவளாயிருந்தாள். அக்காலத்தில் அதைப்பற்றிய விளம்பரம் அதிகமாயிருந்தது. இந்த ஸ்தலத்தில் அஞ்ஞான இராஜாக்கள் வெகு பணம் செலவழித்து குறிகேட்டு வந்தார்கள். இரண்டு அர்த்தங்கொள்ளும் சிலேடை அலங்காரத்தில் அவள் குறி சொல்வதுண்டு. அந்த ஸ்திரீ மனிதரை வெகு காலமாய் ஏத்திக் கொண்டு வந்தாள்.

திருஷ்டாந்தரமாக மகா அலெக்ஸான்டர் என்ற ராஜா இந்த பூசாரியான ஸ்திரீயை வெகுவாய் வருத்தப்படுத்தி தனக்கு குறி சொல்ல கேட்ட பொழுது அவள் கோபமாய் "நீ ஜெயிக்கப்படாதவன்" என்று கிரேக்கப் பாஷையிலே சொல்லிப் போட்டாள். (Thou art a witch) அதாவது, தான் குறி சொல்லேன் என்று சொல்லியும், குறிசொல்ல அலெக்ஸ்ஸாண்டரால் கட்டாயப் படுத்தப்பட்டபடியினல் அவள் சொன்னது அலெக்ஸாண்டர் தன்னுலே ஜெயிக்கப்படக் கூடாதவன் என்ருவது, அல்லது யுத்தத்தில் ஜெயிக்கப்படாத வல்லமையுள்ள அரசன் என்ருவது இரண்டு அர்த்தம் கொள்ளும்.

வேதத்திலும் இவ்விதமாய் கள்ளத்தீர்க்கதரிசிகள் கள்ள தீர்க்கதரிசனம் சொன்ன சம்பவங்கள் எழுதப்பட்டுள்ளன. 1 இரா. 22-ம் அதிகாரத்தில் கள்ள தீர்க்கதரிசிகள் தங்களுடைய தந்திரத்தினல் ஒரு திருஷ்டாந்தரத்தை சொன்ஞர்கள்.

400 தீர்க்கதரிசிகள் இஸ்ரவேல் இராஜாவுக்கு யுத்தத்துக்கு போகும்படிச் சொன்னது: நீர் போகலாம், தேவன் ராஜாவுடையகையில்

ஒப்புக் கொடுப்பார் என்றார்கள். இது தேவன் ராமோத், கிலெயாத் பட்டணத்தை ஆகாஸ் ராஜாவின் கைக்கு ஒப்புக்கொடுப்பாரென்றாவது, தேவன் இஸ்ரவேலரை சீரியா தேசத்தின் ராஜாவின் கையில் ஒப்புக் கொடுப்பாரென்றாவது இரண்டு அர்த்தம் கொள்ளலாம். சீரியரால் இஸ்ரவேலர்கள் அடிக்கப்பட்டார்கள்.

கள்ளத் தீர்க்கதரிசனங்கள் உண்டாயிருக்கிறபடியால் எல்லா தீர்க்கதரிசனங்களும் பொய் என்று தீர்ப்பது மிகுந்த புத்தியீனமான காரியமாகும். நல்ல தீர்க்கதரிசனங்கள் உண்டு. அவைகளை வேதாகமத்தின் மூலம் அறியலாம். தீர்க்கதரிசனம் பொய்யோ மெய்யோ என்று அதின் பொருளை உணர்த்துவிக்கிறதுமின்றி அது தீர்க்கதரிசனங்களை சொல்லுகிறவர்களுடைய தன்மையினாலும் தீர்க்கதரிசன உண்மை விளங்கும்.

தேவன் நன்மைக்கும், பரிசுத்தத்திற்கும், காரணமாகையால் தீமைக்கும், அசுத்தத்திற்கும் இடம் கொடுக்கும் தீர்ககதரிசனத்துக்கு அவர் காரணமாயிருக்கமாட்டார் (உபா. 13:1) ஒலி வடிவினாலும், வரிவடிவினாலும் குறிப்பினாலும் தீர்க்கதரிசனங்கள் உரைக்கப்பட்டது.

சில தீர்க்கதரிசனம் இரண்டு அர்த்தங் கொள்ளும். அதெப்படியெனில் ஆபிரகாமுக்கு வாக்குப்பண்ணின வாக்குத்தத்தம் ஈசாக்கையும் கிறிஸ்துவையும் குறிக்கும் அப்படியே மத். 24-ம் அதிகாரத்திலிருக்கிற தீர்க்கதரிசனம் இரண்டு அர்த்தங்கள் உடைய மெய் பொருளாகயிருக்கிறது. சந்தேகத்துக்கு இடமான சொற்களாக அல்ல திட்டமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிற காரியங்கள் வேதாகமத்திலுண்டு.

அப்படியே இக்காலத்திலும் நடக்கிற பலவிதமான துஷ்டதனங்களும், போதை வஸ்துகளும், நிர்வாணமும், பலவிதமான அசுத்த நடவடிக்கைகளும் சர்வசாதாரணமாய் இப்பொழுது இவ்விதமாய் நடக்கிறது நடக்கப் போகிறதாக வேதாகமத்தில் முன்னாலே அறிவித்திருக்கிறது. மேலும் முரட்டுத்தனமும் பலவிதமான சீர்கேடுகளும் இந்தியாவிலும் உலகமெங்கும் காணப்படுகிற இந்த சம்பவங்கள் இவ்விதமாய் நடக்கும் என்று வேதாகமத்தில் திட்டமாக அறிவித்திருக்கிறது.

மனுஷர்கள் தற்பிரியராயும், அவர்கள் கெட்டவர்களாயும், சுபாவ அன்பில்லாதவர்களாயும் இருப்பார்கள் என்று மிகவும் தெளிவாக 2 தீமோ. 3-ம் அதிகாரத்தில் பரிசுத்த ஆவியானவர் குறிப்பிட்டிருக்கிறார். அந்த சம்பவங்கள் நடைபெறுகிறது. இப்படி நடைபெறுகிறதினால் வரும் நாட்களிலேயும் இவ்விதமாக நடந்து முடியும் என்று வேதாகமத்தில் குறிப்பிட்டிருக்கிற தீர்க்கதரிசனங்களின்படி சம்பவங்கள் நிகழும் என்று திட்டமாக மூலமாக வேதாகமத்தின் அறிந்து கொள்ளுகிறோம்.

வேதாகமம் மார்க்க விஷயமாய் கூறுகிறது. விஞ்ஞான சம்பந்தப்பட்டு அது சொல்வது நம்பிக்கைக்குரியதல்ல என்று சிலருடைய அபிப்பிராயம். விஞ்ஞானத்தைப் போதிப்பது சத்திய வேதத்தின் விசேஷித்த நோக்கமல்ல. இருப்பினும் அந்நூலில் விஞ்ஞான சம்பந்தமான பல சொற்கள் காணப்படுகின்றன. வேத நூலுக்கு தேவனே பரம ஆக்கியோனாகையால் உலகத்துக்கு ஆதிகாரணர் அவரே. அவர் கூறுவது எல்லாம் தவறற்ற உண்மை என்று அறிந்து உணருவோமாக.

இப்படியிருக்க மனிதர் கற்றறியக் கூடிய சர்வ விஞ்ஞானத்தையும் கடவுள் அறிவதோடு எல்லாக் காலங்களிலும் ஜீவிக்கும் மனிதருக்கு விளங்கத்தக்கதாகவும் பிழையில்லாமலும் எழுதுவிக்க அவராலே கூடும் என்று அறிகிறோம்

முதலாவது மனிதனின் விஞ்ஞான அறிவு வரவர அதிகரிக்கிறதேயன்றி, அது பூரணமானது அல்ல. ஆனபடியால் விஞ்ஞான சாஸ்திரிகள் பற்பல இயற்கையான தத்துவ சத்துவங்களை கண்டுபிடிக்க பிடிக்க தங்கள் அபிப்பிராயங்களை மாற்றி மாற்றி வருகின்றனர். இயற்கையைக் குறித்து தாங்கள் அறிந்து கொள்ளக் கூடியது எல்லாவற்றையும் கண்டு கொண்டாயிற்று என்று மனிதன் சாதிப்பதற்கு ஒருக்காலும் இடமிராது. இப்படியிருக்க நாம் விஞ்ஞான பிரமாணங்கள் முதலியவற்றை சத்திய வேத மொழியோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது இவ்விஷயத்தை ஒரு பொழுதும் மறக்கலாகாது.

இரண்டாவது, சத்திய வேதத்தில் காணப்படும் இயற்கைக்குரிய குறிப்புகள் தற்கால விஞ்ஞான சாஸ்திரிகளின் அபிப்பிராயங்களுக்கேற்ப எழுதப் பெறவில்லை. அப்போப்பட்ட குறிப்புகள் சதா காலத்தவருக்கும், சர்வ ஜாதியாருக்கும் விளங்கக் கூடிய பாஷை நடையாக எழுதப் பெற்றுள்ளன. ஆகவே வேதத்திலுள்ள இக் குறிப்புகள் விஞ்ஞான போங்காக காணப்படாவிடினும் இவை தப்பிதமென்று ஒருவரும் நினைக்கலாகாது.

1. சத்திய வேத சொற்கள் இயற்கைக்குரிய பிரமாணங்களுக்காவது சத்துவ தத்துவங்களுக்காவது விகற்பமாயில்லை, ஒத்தே வருகின்றன.

2. விஞ்ஞான சட்டங்களைக் கொண்டு வேத மொழிகளை பரிசோதனை செய்வோமாகில் அம்மொழிகள் மனிதருக்கில்லாத பரம ஞானமும் அறிவும் அடங்கியிருக்கக் காண்போம்.

3. ஆகவே சத்திய வேதம் ஒரு விஞ்ஞான அதிசய நூலாகும்.

சத்திய வேதம் இயற்கை சம்பந்தமான சொற்கள் நிறைந்துள்ளன. அவை தேவ ஆவியின் ஏவுதலினாலே எழுதப் பெற்றன என்பதற்கு அவைகளில் அடங்கிய அதிசய ஞானமும் அறிவும் பலத்த அத்தாட்சி இதில் சற்று திருஷ்டாந்தமாய்க் காண்போம்.

ஆதியாகமத்தை எழுதினவர் மோசே. மோசேயின் காலம் கிட்ட தட்ட 4000 வருஷங்களுக்கு முந்தினதாகும். ஆதியாகமம் முதல் அதிகாரத்தில் விவரித்துள்ள உலக சிருஷ்டிப்பின் ஒழுங்கு அல்லது வரிசைக்கிரமம் விஞ்ஞான போதகத்திற்கு மிகவும் ஆச்சரிய விதமாக ஒத்து வருகிறதைக் கவனிக்கவும். எப்படியெனில் விஞ்ஞானமும் வேதமும் ஒன்று போல பின் வரும் வரிசைக்கிரமப்படி இவ்வுலகம உண்டானது என்று கூறுகின்றது.

1. சகலமும் ஒழுங்கின்மையாய் இருந்தது.

2. ஒளி உண்டானது.

3. வான விரிவில் ஆகாயம் உண்டானது.

4. வெட்டாந்தரை காணப்பட்டது.

5. தாவர வர்க்கங்கள் உண்டாயின.

6. நீர் வாழும் ஜீவன்கள் உண்டாயின.

7. ஆகாயத்தில் பறக்கும் ஜீவன்கள் உண்டாயின.

8. பூமியில் வாழும் ஜீவன்கள் உண்டாயின.

9. மனிதர் உண்டாயினர்.

யோபு பக்தன் சர்வ சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுளைக் குறித்து: அவர் பூமியை அந்தரங்கத்தில் தொங்க வைக்கிறார் என்று சொன்னார் [யோபு. 26:7]. ஏசாயா தீர்க்கதரிசி, தண்ணீர்களை தமது கைப்பிடியால் அளந்து மலைகளைத் தராசில் நிறுத்

தவர் என யார் வினவினார் [ஏசா. 40:12]. இந்த வேத வாக்கியத்திற்கிசைய தற்கால விஞ்ஞானிகள் சாதிப்பது யாதெனில் அந்தந்த சமுத்திரத்தின் ஆழமும் அதற்கு அருகிலுள்ள பூமியின் உயரமும் கிட்டதட்ட ஒரே அளவு என்பதும் இவ்வுலகத்திலுள்ள உயிர்கள் சுவாசிக்க வேண்டிய ஆகாசம் இருக்கத்தக்கதான தன்மைதான் உலகத்தில் உண்டு என்றும் கண்டுபிடித்துள்ளனர்.

எரேமியா தீர்க்கதரிசி: வானத்தின் நட்சத்திரங்கள் எண்ணப்படாததும், கடற்கரை மணல் அளக்கப்படாததுமாய் இருக்கிறது என்றார் (எரே. 33:22). இந்த வேத மொழி உண்மையே என்று விஞ்ஞானிகள் நிச்சயித்து கொஞ்ச காலம்தான் ஆயிற்று. நாம் வேதம் கூறுவதை நம்பாதபடி விஞ்ஞானம் எதையும் ருசுப்படுத்த முடியாது.

ஆம், கடவுளின் வசனம் என்றென்றைக்கும் வானங்களில் நிலைத்திருக்கிறது. மனிதரின் விஞ்ஞானம் ஒழிந்து போகும் வரைக்கும், ஒழிந்த பின்னரும் அந்தத் திருவசனம் நிலைக்குமென்பது நிச்சயம். மனிதரின் அறிவைக் காட்டிலும், மனுவை சிருஷ்டித்தவரின் அறிவு மேலானது என்று எழுதும் திறமையை விட அவர்களை உண்டாக்கினவர் எழுதுவிக்கும் திறமை மேலானது என்றும் தீர்ப்பிடுவது ஞானம்.

ஆம், வேதத்திலுள்ள விஞ்ஞான குறிப்புகள் அவ்வேதத்தை இயற்றிய கடவுளை மேன்மைப்படுத்துகின்றன. சூரிய சந்திர நட்சத்திரங்களாகிய ஒளி மாத்திரமல்ல வேறொரு ஒளி இந்தப் பூமிக்கு ஆகாசத்திலிருந்து பூமிக்கு ஆதரவாக வேறு வெளிச்சம் உண்டு என தற்கால விஞ்ஞானம் கண்டு பிடித்துள்ளது. ஆதியாகமம் முதலாம் அதிகாரத்தில் இதற்கு அனுசரணையான வாக்கியம் காணப்படுகிறது.இறைவன் வெளிச்சம் உண்டாகக்கடவது என்றார், வெளிச்சம் உண்டாயிற்று என்று பார்க்கிறோம் (ஆதி. 1:3).

சூரியனின் கதிர்கள் ஆரோக்கியத்திற்கு உதவுவன என்று வேதாகமம் குறிப்பிட்டுள்ளது [மல். 4:2]. சூரியனைக் காண்பது கண்களுக்கு நல்லது [நீதி. 11:7]. தேவரீர் ஒளியையும், சூரியனையும் படைத்தீர் (சங். 74:16). பகலில் ஆள சூரியனைப் படைத்தவரை ஸ்தோத்தரியுங்கள்; இரவில் ஆள சந்திரனைப் படைத்தவரை ஸ்தோத்தரியுங்கள் என்று சங். 136:8 ல் குறிப்பிடப்பட்டுள்ளது.

பூமி உருண்டை என்று வேதாகமம் முன்னதாகவே தெரிவித்துள்ளது ஏசா. 40:22 ல் பூமி உருண்டையின் மேல் தேவன் வீற்றிருக்கிறார் என்று குறிப்பிட்டுள்ளது. பூமி உருண்டையாயிருக்கிறது என்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்து திட்டமாக அறிந்திருந்தார். கலிலியோ பூமி உருண்டை என்று கண்டுபிடிக்கு முன்பாகவே வேதாகமம் திட்டமாக அறிவித்திருந்தது.

இதை அறியாமல் சிலர் புரணி பேசிக் கொண்டிருக்கலாம். லூக். 17:24 முதல் வாசித்தோமென்றால் இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையின் போது நடக்கும் சம்பவங்கள் குறிப்பிடப்பட்டுள்ளது. சிலர் வீட்டின் மேல் இருப்பார்கள் என்றும், சிலர் நித்திரையில் இருப்பார்கள் என்றும், சில ஸ்திரீகள் அப்பொழுது மாவு அரைத்துக் கொண்டு இருப்பார்கள் என்றும், சிலர் வயலில் வேலை செய்வார்கள் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

இந்த இராத்திரியில் ஒரே படுக்கையில் படுத்திருக்கிற இரண்டு பேரில் ஒருவன் ஏற்றுக் கொள்ளப்படுவான் மற்றவன் கைவிடப்படுவான் என்று 34 ம் வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு பக்கம் இரவாகவும் இன்னொரு பக்கம் பகலாகவும் இன்னொரு பக்கம் விடிந்து கொண்டும் இருக்கும் என்று இயேசு கிறிஸ்து இதிலே தெளிவாக திருவுளம் பற்றியிருக்

கிறார். அளபடியினுல் பூமி உருண்டை என்றும், பூமியும் சமுத்திரமும் சேர்ந்தே பூமி உருண்டை என்றும் வேதாகமம் திட்டமாக அறிவித்திருக்கிறது.

பூமியைச் சுற்றிக் கொண்டு சமுத்திரத்துக்குள்ளாக இராட்சதன் ஒளிந்துக் கொண்டான் பாயைப் போல சுற்றிக் கொண்டு என்றும், பூமியை ஆமை சுமந்துக் கொண்டிருக்கிற தென்றும், யானை சுமந்து கொண்டிருக்கிறதென்றும், பாம்பு சுமந்து கொண்டிருக்கிறதென்றும் தவறான மதங்களில் எழுதப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட கட்டுக்கதைகள் எல்லாம் ஏராளம் உண்டு. வேதாகமத்தில் அப்படிப்பட்ட வம்பான காரியங்கள் எதுவும் எழுதப்படவில்லை.

தண்ணீர்களை தமது கைப்பிடியால் அளந்து, மலைகளை தராசில் நிறுத்தவர் யார் என்று ஏசா. 40:12 ல் ஏசாயா சொல்லியிருக்கிறார். இந்த வேத வாக்கியத்துக்கு இசைய தற்கால விஞ்ஞானிகள் சாதிப்பது யாதெனில் அந்தந்த காலங்களில் விஞ்ஞானத்தின் மூலமாக கண்டுபிடிக்கப் படுகிறதேயொழிய ஏற்கெனவே வேதாகமத்தில் எழுதியிருக்கிறது சரி என்று ஒப்புக் கொள்கிறார்கள்.

உறைந்த மழையின் பண்டக சாலை என்று யோபு 38-ம் அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நாட்களிலேயும், வெடிமருந்து போன்ற திடீரென்று தீப்பிடிக்கக் கூடிய பொருட்களை ஐஸ்கட்டிகளினுல் பொதியப்பட்ட அறைக்குள் வைத்து பாதுகாத்து யுத்த காலங்களில் உபயோகிக்கிறதைப் பார்க்கிறோம் [யோபு 38:22]. யோபின் புஸ்தகத்தில் அநேக விஞ்ஞான குறிப்புகள் காணப்படுகின்றன.

மேலும், சரித்திர பூர்வ கால சம்பவங்களும் திட்டமாக வேதாமகத்தில் குறிப்பிட்டுப்பட்டிருக்கிறது. விஞ்ஞானம் மாத்திரமல்ல, பண்டைக்கால சரித்திர ஆதாரங்களும் வேதாகமம் மூலமாக திட்டமாக நாம் அறிந்து கொள்ள முடியும். வேதாகமத்தில் காணப்படுகிற விஞ்ஞான குறிப்புகள் அநேகம்.

நாகூம் புஸ்தகத்தில் வாசிக்கிறோம்: இரதங்கள் தெருக்களில் கட கடவென்று ஓடி வீதிகளில் இடது சாரி வலது சாரி வரும் அவைகள் தீவட்டிகளைப் போல விளங்கி மின்னல்களைப் போல வேகமாய்ப் பறக்கும் என்று நாகூம் 2:4 ல் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த நாட்களில் பார்க்கிறோம் மின்சார இரயில்கள் (Electric Trains) கடகட வென்று ஓடி இடது சாரி வலது சாரி வருகிறதும், தீவட்டிகளைப்போல விளங்கி மின்னல்களைப் போல வேகமாய் பறப்பதையும் நாம் பார்க்கிறோம்.

வானங்களைச் சிருஷ்டித்து, பூமியையும் வெறுமையாய் இருக்கச் சிருஷ்டியாமல் குடியிருப்புக்காக தேவன் செய்து படைத்து உருவேற்படுத்தினர் என்று ஏசா. 45:18 ல் குறிப்பிடப் பட்டுள்ளது. வானங்களைச் சிருஷ்டித்து, பூமியை வெறுமையாய் இருக்க சிருஷ்டியாமல் அதை மனிதனின் குடியிருப்புக்கான சகல வசதிகளும் பூமியிலே தான் உண்டு. அவன் ஆகாயத்தில் பறந்தாலும், அங்கே கூடு கட்டினுலும் இங்கேயிருந்து ஆக்ஸிஜன் அவன் கொண்டு போக வேண்டியிருக்கும். அது தீர்ந்து போனுல் அவன் செத்து வானமண்டலத்திலே அவன் சுற்றிக் கொண்டுதான் வர வேண்டியிருக்கும்.

எனவே மனிதன் குடியிருப்பதற்குத் தகுதியான சகல விதமான சீதோஷ்ண, வாயு, சகலவிதமான சத்துவ ஆதாரங்களோடுகூட பூமியை தேவன் மனிதனின் குடியிருப்புக்காக சிருஷ்டித்தார். மனிதனும், மனிதனேடு சம்பந்தப்பட்ட பிராணிகளும் ஜீவராசிகளும் பிழைக்க பூமியே ஏற்றது என்று நாம் நன்ருக அறிவோம்.

(தொடரும்.)

"அவர் காற்றுக்கு அதின் நிறையை நியமித்து, ஜலத்துக்கு அதின் அளவைப் பிரமாணித்துள்ளார்." யோபு. 28:25

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

"மேற் சொல்லியபடி கிறிஸ்து மார்க்கத்தினாலே அநேக நன்மைகள் பொதுவாக உலகத்தில் உண்டாயிருக்கிறதுமல்லாமல் தனித்தனியே ஆத்துமாக்களுக்கு அதினால் உண்டாகும் நன்மைகள் மிகவும் முக்கியமானவைகளாய்த் தோன்றுகின்றன.

பரிசுத்தமானதை பரியாசம் பண்ணுகிறவன் அதைக் கனம் பண்ணுகிறவனாகவும், வெறி கொள்ளுகிறவனை புத்தியுள்ளவனாகவும், காமவிகாரம் உள்ளவனை கற்புள்ளவனாகவும், அநீதிமானை நீதியுள்ளவனாகவும், பொய்யனை மெய்யனாகவும், திருடனை தேவ பக்தியுள்ளவனாகவும் செய்கிறது கிறிஸ்து மார்க்கமே.

இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவன் பிசாசின் அதிகாரத்தினின்று விடுதலையாக்கப்பட்டு தேவனுக்கு அடிமையானபடியினாலே பரிசுத்தமாகிறதற் கேதுவான பலனை அனுபவித்துக் கொண்டு இப்படி பொறுமையோடே இடைவிடாமல் நன்மைகளைச் செய்து சத்திய வசனத்தினாலே ஆறுதலடைந்து இவ்வுலகத்தின் பாடுகளை சந்தோஷமாய்ச் சகித்து இயேசு கிறிஸ்துவின் மூலமாய் உண்டாகிற திவ்விய பலனாகிய நித்திய ஜீவனை மகிழ்ச்சியோடு அனுபவித்து மரணத்திற்குப் பயமின்றி பூரணமான நித்திய ஜீவனைப் பெற்றுக் கொள்ளப் போகிறோம் என்ற நம்பிக்கையோடுகூட அவனுடைய வாழ்க்கைப் பிரயாணம் தொடர்கிறது.

இந்தப் பிரகாரம், கிறிஸ்தவ மார்க்கம் சகல விதமான மனிதருக்கும் தகுதியாய் இருக்கின்றது. கிறிஸ்தவன் செய்கிற நன்மையினால் ஆசீர்வதிக்கப் பட்டவனாகிறான். அவைகளைச் செம்மையாய் அனுபவித்து எளியோர்களுக்குக் கொடுக்கும்படி வேதத்தினாலே புத்தியடைந்து அவன் குறைவுபட்டவனானால் எந்த நிலைமையிலேயும் பொறுமையாயிருக்கும்படிக் கற்றுக்கொண்டபடியினாலே எந்த நிலையிலும் முறுமுறுக்காமல் தாழ்மையாய் இருக்கவும், பொறுமையாயிருக்கவும், குறைவு படவும், பரிபூரணத்தை அனுபவிக்கவும் அறிவுள்ளவனாயிருக்கிறான்

தேவ பக்தியினால் அவனுக்கு எல்வித்திலும் பிரயோஜனம் உண்டாகிறது. தேவனுக்கும், ராஜாவுக்கும் சகல மனிதருக்கும் செய்ய வேண்டிய கடமைகளை அவன் பலவந்தமாயல்ல, மனப்பூர்வமாய்ச் செய்து சன்மார்க்கத்திற்குரிய கீர்த்தியடைகிறான். இந்த தேகத்தில் இருக்குமளவும் அவன் வருத்தமில்லாதவன் அல்ல, வேதம் அவைகளை நீக்காமல் அவைகளைக்குறித்து நல்லறிவுகளைக் கொடுக்கின்றது.

ஆதலால் அவன் உபத்திரவ காலத்திலே தன் தேவனாகிய இரட்சகராலே மிகுந்த ஆறுதலடைந்து, உபத்திரவங்களினின்றும் நன்மைகளை எடுத்து தன் கவலைகள் எல்லாவற்றையும் அவர் மேலே

வைத்து விடுகிறதற்கு அதிகாரம் பெறுற வேதத்தைப் பற்றிக் கொள்ளாதவர்களால் அறியப்படாத சமாதானத்தை அனுபவித்து, உபத்திரவக் காலத்திலும் மேன்மை பாராட்டியும் இருக்கிறார்கள்.

அவன் சகலத்தையும் உண்மையோடு நடப்பித்துக் கொண்டு வருகிறபடியினால் அவனுடைய மனது அவனுக்கு நற்சாட்சி பகருகிறது. நன்றி மிகுந்த சந்தோஷத்தையும் கொடுக்கின்றது. மற்றவர்கள் அவனுக்குத் துன்பம் செய்தால் கிறிஸ்துவின் அன்பு அவனுக்கு அமைதியையளிக்கும். அவனுடைய லௌகீக ஆஸ்திகள் பறித்துக் கொள்ளப் பட்டாலும், அவனுடைய பொக்கிஷம் பரலோகத்தில் உள்ளது என்றறிந்து சந்தோஷப்படுவான்.

அவன் தன் வீட்டிலிருந்து துரத்தப்பட்டாலும், தனக்கு பரலோக பாக்கியம் இருக்கிறது என்று அறிந்திருக்கிறபடியினால் ஆறுதலடைவான். அவன் சங்கிலிகளினால் கட்டப்பட்டாலும் அவன் மனம் கட்டப்படாமல்விடுதலையாகவேயிருக்கும். அவனுடைய தேகம் அழிக்கப்பட்டாலும் அது கடைசி நாளிலே அழியாமையாய் எழுப்பபடும் என்றும் தன்னுடைய ஆத்துமா உடனே கர்த்தாவினிடததுக்குச் செல்லும் என்றும் அவன் அறிந்து திடமுள்ளவனாவான்.

பரலோகமானது இந்தப் பூமியிலுள்ள ஆகாசத்திலுள்ள பெருங் காற்றுகளுக்கு உயர்ந்ததாயிருக்கிறதுபோல அவனுடைய மனது இவ்வுலகத்தின் உபத்திரவங்களுக்கு உயர்ந்ததாயிருக்கும் அவனுடைய இருப்பிடம் பரமண்டலத்திலே உள்ளது. அவனுடைய ஜீவன், இயேசு கிறிஸ்துவுடனே தேவனுக்குள் மறைந்திருக்கிறது. அல்லாமலும் அவனுக்கு மரணம் வருகிறபொழுது பயங்கரத்தைக் கொடுக்கத்தக்க அந்த நேரத்திலே அவன் இதை விட்டு இயேசுவினிடத்தில் செல்லும் படிக்கு ஆசையுள்ளவனாய் தன் பாவங்களெல்லாம் மன்னிக்கப்பட்டபடியினாலே, பரலோகத்தை நோக்கி மிகுந்த பாக்கியத்தோடே உயிரோடு எழுந்திருப்பதற்கும் அசைவில்லாமல் எக்காலத்திலும் மனம் குன்றாமலிருக்க அழியாத சுதந்தரத்தை உடையவனாய் இருக்கிறான்.

மேற் சொல்லிய மகிமையான காரியங்கள் எல்லாம் கிறிஸ்துவை பின்பற்றாதவனுக்கு இல்லை, மற்ற மார்க்கங்கள் ஒவ்வொரு ஊராருக்கும் ஒரு ஜாதியாருக்கும் மாத்திரமே ஏற்படுத்தப்பட்டிருக்க, கிறிஸ்தவ மார்க்கம் உலகத்திற்கு ஒரு சூரியனைப்போல எல்லாருக்கும் வெளிச்சம் கொடுக்கத்தக்கதாயிருக்கிறது. இந்த மார்க்கத்தின் பிரகாசத்திற்கு முன் மற்றெல்லா மார்க்கங்களும் பிரகாசமில்லாத நட்சத்திரங்களைப் போலிருக்கின்றன.

கிறிஸ்து மார்க்கம் மற்ற மார்க்கங்களை உதாரணத்தோடே பொய்யென்று தீர்த்து மற்ற மார்க்கங்களுக்கு அடுத்தவைகளையெல்லாம் வேரோடே தகர்த்தெறிந்து உலகத்தாரை நோக்கி, "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான் என்று தீர்மானமாய்ச் சொல்லுகிறது (மாற். 16:6).

கிறிஸ்தவ மார்க்கம் முதன் முதலில் யூதேயா தேசத்தில் பிரசங்கிக்கப் பட்டது. கிறிஸ்து மரித்த 50-ம் நாளில் அப்போஸ்தலரில் ஒருவராகிய பேதுருவினுடைய பிரசங்கத்தினால் மூவாயிரம் பேர் குணப்பட்டார்கள். அதற்குச் சில நாட்களுக்குப் பின்பு எருசலேமிலே பண்ணப்பட்ட பிரசங்கத்தில் ஐயாயிரம் பேர் இருந்தார்கள் [அப். 2:41; 4:4; 8:7;8:1; 9:1,20]. கிறிஸ்து மரித்து பத்து வருஷத்துக்குப்பின்பு கிறிஸ்தவர்கள் அதிகமாய்ப் பெருகினபடியால் ஏரோது என்பவன் சபையைத் துன்பப்படுத்தத் தொடங்கினான் [அப். 12:1]. கிறிஸ்து மரித்த இருபது வருஷத்துக்குப் பின்பு அநேக ஆயிரம் கிறிஸ்தவர்கள் இருந்தார்கள் [அப். 21:20]. கிறிஸ்து மார்க்கம்

ரோம இராஜ்யத்திலும்; கிரேக்க தேசத்திலும் சீக்கிரமாய் பிரபல்யப்படுத்தப் பட்டது.

ஆதியிலேதானே, கொரிந்து, எபேசு, பெரோயா, தெசலோனிக்கேயா, பிலிப்பி முதலிய பட்டணங்களில் சபைகள் ஸ்தாபிக்கப்பட்டிருந்தன.

[தொடரும்.]

இயேசு கிறிஸ்து: "நானே வழியும், சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்"

யோ. 14:6.

# ஒய்வு நாளை ரோமன் கத்தோலிக்க சபை மாற்றிற்று?

## ஒய்வு நாளை மாற்றினது யார்?

பொதுவாக ரோமன் கத்தோலிக்கரின் தவறான கணிப்புகளில் இதுவும் ஒன்று.

1. குழந்தை ஞானஸ்நானத்துக்கு நேரடி கட்டளை வேதாகமத்தில் இல்லாதது போல, ஞாயிற்றுக் கிழமையை பரிசுத்தமாய் ஆசரிக்கவும் கட்டளையில்லை.

2. பரிசுத்த அப்போஸ்தல சபை அதிகாரத்தினலே ஏழாம் நாளிலிருந்து முதலாம் நாளுக்கும் சனிக் கிழமையிலிருந்து ஞாயிற்றுக் கிழமைக்கும் கத்தோலிக்க சபை மாறுதல் செய்தது.

3. ஒய்வு நாள் ஏழாம் நாளிலிருந்து முதல் நாளுக்கு மாற்றப்பட்டிருக்கிறது என்பதற்கு வேத ஆதாரம் இல்லை.

4. கர்த்தருடைய நாளான ஞாயிறு ஆசரிப்பு, பராபரனின் எந்த கட்டளையின் பேரிலும் ஸ்தாபிக்கப்படாமல் சபையின் அதிகாரத்தின் பேரில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

5. கிறிஸ்தவர்கள் ஒய்வு நாள் ஞாயிற்றுக் கிழமை என்று வேதத்தில் இல்லை. ஆதிச் சபையார் அது ஒய்வு நாள் என்று அழைக்கவும் இல்லை.

6. வாரத்தின் முதல் நாளை கிறிஸ்தவ ஒய்வு நாளாக நாம் ஆசரிக்க வேண்டுமென்று வேதத்தில் இல்லை.

7. கிறிஸ்தன்தின் ( Christantine ) ராயன் தனது அஞ்ஞான பிரஜைகளை எவ்விதத்திலும் வருத்தப்படுத்தாதபடிக்கு அவர்களுக்கிணங்கி சூரிய வணக்க நாளான ஞாயிற்றுக் கிழமை கர்த்தருடைய நாள் என்று பேரிட்டான்.

8. கொன்ஸ்திந்தின் ராயனல் ஞாயிறு சம்மந்தமான கட்டளை ஏ மு, மூன்று கி. பி. 321 ல் கட்டளையிடப்பட்டது.

9. கி. பி. 364 ல் கூடின லவோதிக்கேயா சங்கமானது ஒய்வு நாளை மாற்றி கர்த்தருடைய நாளை கைக் கொள்ள கட்டளையிட்டது.

10. பிராட்டஸ்டண்டருடைய ஆராதனைக்குரிய முக்கிய நாளாய் விளங்கும்

இந்த ஓய்வு ஆசரிப்பு சத்திய வேதாகமத்தை அதாரமாகக் கொண்டிராமல், அதின் எழுத்துக்கும் முறைமைக்கும் எதிர் மாறான கொள்கையாக இருக்கிறது. கத்தோலிக்க சபையே ஓய்வு நாள் ஆசரிப்பை ஞாயிற்றுக் கிழமைக்கு மாற்றிற்று. ஆக, பிராட்டஸ்டண்டர்களின் ஞாயிற்றுக் கிழமை ஆசரிப்பானது அவர்களது கொள்கைக்கும் வேதத்துக்கும் மாறாக கத்தோலிக்க திருச்சபை ஏற்படுத்திய வழக்கத்தைப் பின்பற்றுகிறார்கள்.

11. வேதத்தைக் கொண்டே நடத்தப்படுவதாக காண்பித்துக் கொள்ளும் பிராட்டஸ்டண்ட்காரர்கள் ஞாயிற்றுக் கிழமையை ஆசரிப்பதில் தங்களையே மறுக்கிறவர்களாக இருக்கிறார்கள் என்பதே.

இதற்கு நாம் கொடுக்கும் விளக்கம்:

வேத புரட்டர்களான சில கிறிஸ்தவர்கள் பெந்தெகொஸ்தே நாளில் பரிசுத்த ஆவியானவர் கி. பி. 33 ல் பூமியில் இறங்கி வந்து கூடியிருந்த சீஷர்கள் கூட்டத்தை அபிஷேகித்து விட்டார். பின்பு ஒரு போதும் பரிசுத்த ஆவியானவருக்காக தேவனுடைய பிள்ளைகள் காத்திருங்கள் என்று வேதத்தில் எழுதப்படவில்லை; இப்பொழுது இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவன் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்று விட்டான், விசுவாசித்தவுடனே பெற்றிருக்கிறான் என்று சொல்லுவார்கள்.

இவர்கள் கையாடும் வார்த்தை 'வேதத்தில் இல்லை' என்ற பொய்மையுரையாகும். பெந்தெகொஸ்தே நாளுக்கு 9- வருஷத்துக்குப் பின் இயேசுவை ஏற்றுக் கொண்ட சவுல், அனனியா வந்து தலையில் கைவைத்து ஜெபித்த பின்னே பரிசுத்த ஆவியினால் நிறையப்பட்டார் என்றும் (அப்.9·17), சமாரியர்கள் பெந்தெகொஸ்தே நாளுக்கு 8 வருஷத்துக்குப் பின்பு விசுவாசிகளாகி ஞானஸ்நானம் பெற்றிருந்த போதிலும் எருசலேமிலிருந்து அப்போஸ்தலர்கள் வந்து ஜெபித்த பின்னே அவர்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்றுக் கொண்டார்கள் என்றும், பரி. லூக்கா அப் 1:5-8 ல் என்னிடத்தில் கேள்விப்பட்ட பிதாவின் வாக்குத்தத்தம் நிறைவேற காத்திருங்கள் என்ற வார்த்தையை பெந்தெகொஸ்தே நாளுக்கு 33 வருஷங்களுக்குப்பின் எழுதினார் என்றும், பரிசுத்த ஆவிக்காக வேண்டிக் கொண்டால் தான், ஜெபித்தால் தான் பிதாவானவர் தம்முடைய பிள்ளைகளுக்கு பரிசுத்த ஆவியைத் தருவாரென்று அதாவது பரிசுத்த ஆவிக்காக வேண்டிக் கொள்கிற தேவனுடைய பிள்ளைக்கு பரிசுத்த ஆவியானவர் அருளப்படுவார் என்று லூக். 11:13 ல் கி. பி. 58-63 க்குள் எழுதினார் என்பதையும் இந்த வேத புரட்டர்கள் மறந்து விட்டு, மறைத்து விட்டு பேசி, எழுதித் திரிவது போல் ரோமன் மார்க்கத்தாரும் தவறான சரித்திர சான்றுகள் ஓய்வு நாளைப் பற்றிக் கூறுகிறார்கள்.

ஞாயிற்றுக் கிழமையும் கிறிஸ்தவர்களும்.

1. வாரத்தின் முதல் நாள் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மரணத்திலிருந்து உயிரோடெழுந்து தம்முடைய சீஷருக்குத் தரிசனமானார் (யோ. 20:19,20).

2. மறு ஞாயிற்றுக் கிழமை மறுபடியும் அவர்களுக்குத் தரிசனமானார் (யோ. 20·26).

3. பரிசுத்த ஆவியானவர் பெந்தெகொஸ்தே நாளில் பூமியில் இறங்கினார். அது வாரத்தின் முதல் நாள் ஞாயிற்றுக் கிழமையாகும் (அப். 2:1-4).

4. ஞாயிற்றுக் கிழமை பெந்தெகொஸ்தே நாளன்று பூமியிலே புதிய ஏற்பாட்டின் திருச்சபை எழும்பிற்று. அன்று கர்த்தருக்கு ஆராதனை செய்து அப்பம் பிட்டு ஆராதனை செய்தார்கள் (அப். 20: 1-42).

5. புறஜாதிக் கிறிஸ்தவர்களுக்கு ஒய்வு நாள் சனிக் கிழமைப்பற்றிய கட்டளை யில்லை (அப். 15:28,29).

6. ஞாயிற்றுக் கிழமை, வாரத்தின் முதல் நாள் கூடிவந்து கர்த்தருடைய பந்தியை ஆசரித்தார்கள். அப்பம் பிட்டு ஆராதனை ஆசரித்து கர்த்தரைத் தொழுது கொண்டு பிரசங்கம் பண்ணினார்கள்; ஆதி அப்போஸ்தலர்களால் கைக்கொள்ளப்பட்டு வந்தது (அப். 20:7).

7. பழைய உடன்படிக்கையை தேவன் இஸ்ரவேலரோடு மட்டும் செய்தார். அதில் ஒய்வு நாள் சனிக் கிழமையும் விருத்தசேதனமும் அவர்களுக்கும் தேவனுக்கும் அடையாளமாகக் கொடுக்கப்பட்டது (ஆதி. 17:10,11; அப். 7:8; எசே. 20 ம் அதி. யாத். 32).

8. புதிய உடன்படிக்கையின் காலத்தில் நாம் இருக்கிறோம். பழைய உடன்படிக்கை மாற்றப்பட்டது. நாளும் மாற்றப்பட்டது. இது கர்த்தருடைய நாள். இது கர்த்தர் உண்டுபண்ணின நாள் (சங். 118:22-24).

9. ஞாயிற்றுக் கிழமை கூடி வந்து தேவனுக்கு ஆராதனை செய்து காணிக்கை சேர்த்தார்கள் (1 கொரி. 16:2)

10. ஞாயிற்றுக் கிழமை ஒய்வு நாளல்ல. அது கர்த்தருடைய நாள். அது பரிசுத்த நாள்; அது கர்த்தர் மரணத்தை ஜெயித்து உயிர்த்தெழுந்த நாள் அது நமக்கு பண்டிகை நாள். அது கர்த்தருடைய நாள் (வெளி. 1:10).

11. கிறிஸ்தவன் எந்த நாளுக்கும் கட்டுப்பட்டவன் அல்ல. தன் கடவுளுக்குப் பரிசுத்தமாய் ஞாயிற்றுக் கிழமையை ஆசரிக்கிறது அவனுக்கு ஆதி அப்போஸ்தலர் காலத்திலிருந்து இறைவன் கட்டளையிட்ட கட்டளையாகும். அதை ஒய்வு நாளைக்காட்டிலும் அதிக பரிசுத்தமாய் கடைபிடிக்க வேண்டும். ஆனால் அவனுக்குப் பிரியமானால் எந்த ஒரு நாளையும் அவன் அப்படி ஆசரிக்கலாம். தெரிந்து கொள்ளலாம். ஞாயிற்றுக் கிழமை மாதிரியாக இருக்கிறதினால் அந்த நாளிலே நாம் ஆராதனை செய்கிறோம்; அது சரி (ரோம. 14:5,6; கலா. 4:10,11; கொலோ. 2:16,17).

ஒய்வு நாளை, ரோமன் மார்க்கத்தார் மாற்றினார்கள் என்று சொல்வது தவறு ஆனபடியால் ரோமன் கத்தோலிக்கர்கள் வேதத்தை மறுதலித்து நாட்களையும், பிரமாணங்களையும், காலங்களையும் மாற்றுகிறவர்களான தவறான மார்க்கத்தார் என்று தானியேலின் புஸ்தகத்தில் கூறியுள்ளது போல் (தானி. 7:25,26) காணப்படுகிறது. தவறான சரித்திர சான்று கூறி அவர்கள் ஒய்வு நாளைமாற்றினதாய் சொல்கிறார்.

கிறிஸ்தவர்களுக்கு ஒய்வு நாள் இல்லை. ஞாயிற்றுக் கிழமை பரிசுத்த நாள். அது கர்த்தருடைய நாள். வேத ஆதாரத்தின்படியும், பாரம் பரியத்தின்படியும். அந்த நாளில் கர்த்தருக்கு ஆராதனை செய்வதும், அதை நன்மை செய்யவும் நாம் உபயோகிக்கிறோம் ஆமென்!



"கர்த்தருடைய நாளில் ஆவிக்குள்ளானேன்" வெளி. 1:10.





# சாப்பிட நேரமில்லை ஆனால், ஜெபம் பண்ண நேரம் உண்டு கர்த்தருக்கு, உனக்கு எப்படி?

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய ஜெப வாழ்வு. நம் மெல்லாருக்கும் மாதிரியாக சுவிசேஷங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஜெபத்தின் முக்கியத்துவத்தை தேவ ஜனம் விளங்கி, ஜெபம் பண்ணுகிறவர்களாக இருப்பது நல்லது. தூங்க நேரமுண்டு. குளிக்க நேரமுண்டு. டிரஸ் பண்ண நேரமுண்டு. சாப்பிட நேரமுண்டு. வேலை செய்ய நேரமுண்டு. விளையாட நேரமுண்டு. ஊர்வம்பு பேச நேரமுண்டு. உல்லாச பயணம் செய்ய நேரமுண்டு. எல்லாவற்றிற்கும் நேரமுண்டு. ஜெபிக்க மாத்திரம் நேரமில்லை என்று ஜெப வாழ்வை அசட்டை செய்யாதிருக்கும்படி நம்முடைய கர்த்தரின் ஜெப வாழ்வை நோக்கிப் பார்ப்பது நல்லது.

கர்த்தரைத் தேடி வருகிறவர்களும், போகிறவர்களும் அநேகராயிருந்தபடியால் அவருக்கு போஜனம் பண்ணுகிறதற்கும் சமயம் கிடைக்கவில்லை. இளைப்பாறலாம் என்று வனாந்தரத்திற்கு போனாலும், அங்கேயும் அவரைப் பின் தொடர்ந்து ஜனங்கள் போய் உபதேசம் கேட்டார்கள் (மாற். 6:31-33). இவ்விதம் அவருக்கு சாப்பிட, இளைப்பாற சமயம் இல்லாத அளவுக்கு அவர் கிரியை (ஊழியம்) செய்து கொண்டிருந்து அவ்வளவு ஓய்வின்றி இருந்தாலும் அவருக்கு ஜெபிக்க சமயம் அதிகமாக இருந்தது.

பெத்சாய்தா பட்டணத்தைச் சேர்ந்த வனாந்தரத்தில் சற்று இளைப்பாறலாம் என்று சீஷரோடு இரகசியமாய் சென்ற போதிலும் அவரைத் தேடிக் கொண்டு திரளான ஜனங்கள் வந்துவிட்டார்கள். அவர்கள் மேல் அவர் மனதுருகி, அவர்களை ஏற்றுக் கொண்டு தேவனுடைய இராஜியத்துக்குரியவைகளைப் பேசி, அநேக காரியங்களை உபதேசித்து, சாயங்காலம் வரை ஊழியம் செய்து விட்டு 5 அப்பங்களையும் 2 மீன்களைக் கொண்டு 5000 பேரை போஷித்து விட்டு, ஆ! பெரிய ஊழியம் செய்தாயிற்று ஓய்வு எடுக்கலாம் என்று போகாமல் எல்லாரையும் அனுப்பி விட்டு, சீஷர்களையும் படகில் அனுப்பி விட்டு, தனிமையில் ஜெபம் பண்ண சாயங்காலத்தில் மலைக்குப் போனார். ஜெபித்தார், ஜெபித்துக் கொண்டே இருந்தார். மாலையிலிருந்து நாலாம் ஜாமம் (அதிகாலை 3-6 மணி) வரை ஜெபித்து பின்னர் கடலிலே தத்தளித்துக் கொண்டிருந்த சீஷர்களை சந்திக்க வந்தார்.

தேவ ஜனமே, ஒரு பெரிய காரியம் அல்லது ஊழியம் நடைபெற்ற பின் முடிந்தது என்று களைத்துப் போய் தூங்கப் போய்விட்டால், பாதிக்கப்பட்ட பிசாசு, நாம் செய்த ஊழியத்தின் பலனை அழிக்க யுத்தம் பண்ணுவான், ஆகையால் ஊழியம் நடந்த பின்னும் நீண்ட ஜெபம் பண்ண வேண்டும்.

தேவாலயத்தில் ஓய்வு நாளிலே பிரவேசித்து, சூம்பின கையுடைய மனிதனை குணமாக்கினார். அதைக் கண்ட வேதபாரகரும், பரிசேயரும் மூர்க்க வெறி கொண்டு இயேசுவை என்ன செய்யலாமென்று ஒருவரோடொருவர் ஆலோசனை பண்ணினார்கள் (லூக். 6:11). ஆபத்தான சூழ்நிலை. ஒரு பெருங்கூட்டம் எதிரிடையாக தீமை செய்ய ஆலோசனை செய்கிறது. ஊழியத்தை விட்டு விட்டு ஓடி

விடலாமா, எங்காவது மறைந்து போய் விடுவோமா? அல்லது பிரச்சனை இல்லாத இடத்துக்குப் போய் விடுவோமா? என்று நினைக்கத் தோன்றும்.

ஆனால், இயேசு, அந்நாட்களிலே அதாவது இப்படி தீமை நெருக்கி நிற்கிற "அந்நாட்களிலே அவர் ஜெபம் பண்ணும்படி ஒரு மலையின் மேல் ஏறி இரா முழுவதும் தேவனை நோக்கி ஜெபம் பண்ணினார்" (லூக். 6:12). பொழுது விடிந்தபோது, 12 அப்போஸ்தலரை தெரிந்தெடுத்தார். தொடர்ந்து செய்ய வேண்டிய கிரியைகளை செய்து கொண்டே இருந்தார்.

எதிர்ப்பு வந்து விட்டது என்று பயந்து போய் தேவ சித்தத்தை செய்யாமலிருக்கக் கூடாது, யாக்கோபைப் போல, கர்த்தரைப் போல நீண்ட ஜெபம் பண்ணி எதிர்ப்பை மேற்கொண்டு, கிரியை செய்து கொண்டே இருக்க வேண்டும்.

பல ஊர்களிலே போய் பிரசங்கிக்க வேண்டுமென்பது தேவ தீர்மானம் அந்த ஊழியத்தை ஆரம்பிக்கும் முன்னால், அதிகாலையில் இருட்டோடு எழுந்து புறப்பட்டு வனாந்தரமான இடத்தில் போய் ஜெபம் பண்ணி ஆயத்தமானார் (மாற். 1:38,35).

எந்த ஒரு காரியத்தையும் செய்யுமுன் அதற்காக விசேஷ ஜெபம் செய்து ஆயத்தமாவது நல்லது.

ஒரு ஊழியர் சொன்னாராம், "தம்பி நான் ஜெபம் பண்ணி ஒரு மாதமாயிற்று அவ்வளவு ஊழியம், ஜெபம் கூட பண்ண சமயமில்லை" என்று. இது கர்த்தர் காட்டிய மாதிரி அல்ல. திரளான ஜனங்கள் அவருடைய உபதேசத்தைக் கேட்பதற்கும், சுகம் பெற்றுக்கொள்ளவும் கூடி வந்தார்கள். அவரோ, (உபதேசிக்க, சுகப்படுத்த தீவிரப்படாமல்) வனாந்தரத்தில் தனித்து ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தார் (லூக். 5:1516).

கர்த்தர் தனி ஜெபம் பண்ணினார், சீஷரோடு ஜெபம் பண்ணினார் [லூக்.9:18). திரும்பத் திரும்ப ஜெபம் பண்ணினார் [மத். 26:36]. கர்த்தருடைய வாழ்வே ஜெப வாழ்வு, ஆகையால் அது ஜெய வாழ்வு. அவருக்கே இவ்வளவு நேர ஜெபம் தேவை என்றால், உனக்கும், எனக்கும் எவ்வளவு ஜெபம் வேண்டும்.

எப்பொழுதும் ஜெபம் பண்ண வேண்டும், இல்லாவிடில் அவருக்கு முன் நிற்க முடியாது [லூக். 21:36). ஜெபம் பண்ண நேரமில்லா கிறிஸ்தவனின் நம்பிக்கை வீணாகும். நாம் ஜெபிப்போம், ஜெயிப்போம்.

"இடைவிடாமல் ஜெபம்பண்ணுங்கள்"
1 தெச. 5:17.

பரிசுத்தவிவாகம்

| மணமகள் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|

யையும் நாடுகிறோம்.

எழும்பி கட்டுவோம் வாருங்கள்! பண்டிகை கொண்டாடுவோம். இன்னும் வரும் 25-ம் ஆண்டே வருக! வருக! வருக!

" எருசலேமிலே குடியிருக்க மனப்பூர்வமாய்ச் சம்மதித்த மனுஷர்களையெல்லாம் ஜனங்கள் வாழ்த்தினார்கள்."
நெகே. 11:2

# வேத பாடம்

(தொடர்ச்சி)

## எண்ணாகமம

### எண். 11:24-30.

கர்த்தர் கட்டளையிட்ட பிரகாரம் இஸ்ரவேல் ஜனங்களில் எழுபது பேரைக் குறிப்பிட்டு கூடாரத்தைச் சுற்றிலும் அவர்களை மோசே நிறுத்தினார். அவர்களில் பேர் குறிக்கப்பட்ட இரண்டு பேர் கூடாரத்துக்கு வரவில்லை. அவர்கள் தங்களுடைய கூடாரத்தில் இருந்தார்கள். கர்த்தர் மேகத்தில் இறங்கி மோசேயோடு பேசி, மோசேயின் மேலிருந்த ஆவியை அந்த மூப்பராகிய எழுபது பேர் மேலும் வைத்தார். அந்த ஆவி அவர்கள் மேல் வந்து தங்கின மாத்திரத்தில் அவர்கள் தீர்க்கதரிசனம் சொன்னார்கள். அங்ஙனமே ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலில் கூடி வராமல் பின் தங்கியிருந்த இரண்டு பேர் மீதும் ஆவியானவர் இறங்கி அவர்களும் தீர்க்கதரிசனம் சொன்னார்கள். இதை ஒரு வாலிபன் கண்டு மோசேக்கு அறிவித்தான். அப்பொழுது யோசுவா அவர்களைத் தடை செய்யும்படி மோசேயினிடத்தில் கேட்டார். ஏனென்றால் அவர்கள் கூட்டத்திற்கு [Meeting] வரவில்லை என்பதே காரணம். கர்த்தர் இறங்கி வந்து மோசேயின் மேலிருந்த ஆவியை எடுத்து அந்த எழுபது பேர் மேலும் வைத்து, மோசேயோடு கூட சேர்ந்து சபையின் பாரத்தை சுமக்கும்படியாகச் சபையை ஆளுகை செய்யும்படியாக, மோசே யோடு கூட உதவியாய் இருக்கும்படியாக கர்த்தர் கொடுத்தார்.

திருச்சபையினுடைய ஆளுகையும் இப்படியே இருக்கும் என்றும், தலைமையானவரோடுகூட ஐக்கியமாயிருந்து ஒரே ஆவியுடையவர்களாய் திருச்சபையை ஆளுகை செய்கிறவர்களாக காணப்பட வேண்டும். வெவ்வேறு விதமான மனநிலையுடையவர்களாகவோ, வேறுபாடு உடையவர்களாகவோ, அவர்கள் இராதபடி மோசேயிலிருந்த ஆவியை எடுத்து தேவன் அவர்களுக்கு பகிர்ந்து அளித்தார் என்று பார்க்கிறோம். ஆனபடியால், அவர்கள் ஒரே ஆவியுடையவர்களாய் சபையை நடத்தினார்கள்.

ஏற்கெனவே, ஜனங்களின் மேல் பத்து பேர் மேலும், நூறு பேர் மேலும், ஆயிரம் பேருக்கு மேலும் ஐம்பது பேருக்கு மேலும் அதிபதிகள் நியமிக்கப்பட்டிருந்தார்கள், அவர்கள் சபையின் காரியங்களைக் கவனித்தார்கள் இவ்விதமாக தேவனுக்குப் பயந்த, உண்மையுள்ளவர்களும், பொருளாசையை வெறுக்கிறவர்களுமாகிய திறமையுள்ள மனிதர்கள் ஜனங்களின் மேல் அதிபதிகளாக வைக்கப்பட்டிருந்தார்கள்.

'தேவன் ஒருவரே...'

# THERE IS ONE GOD...

Regd No. 040088/84
Postal Regd No. MH [illegible]
Tamil Monthly Magazine





யாத். [illegible] 22 [illegible] பொழுது நியமிக்கப்பட்ட இந்த எழுபது [illegible] அந்த அதிபதிகள் [illegible] எல்லாம் அதிகாரமுடைய நியாயாதிபதிகளாக [Jodes] நியமிக்கப்பட்டார்கள். [illegible] சனதரீம் சங்கத்திற்கு இது ஆரம்பமாயிருந்தது என்று சொல்லலாம். திருச்சபை என்று சொல்லப்படுகிறதை இவ்விதமாக ஒரே ஆவியும், ஏராளமான தலைவர்களால் ஆளப்பட வேண்டும். சபைகளிலே மாறுபாடு, கொள்கையிலே மாறுபாடு, கருத்திலே மாறுபாடு, தலைமைப்பற்றிய பகைகள், விரோதங்கள், ஒருவருக்கு விரோதமாக இன்னொருவர் கீழ்ப்படியாமை போன்ற காரியங்கள் காணப்படுகிறது திருச்சபையல்ல என்பதை இதன் மூலமாக அறிந்து கொள்ளலாம்.

எண்ணாகமம் 29,30-ல் தேவ ஜனங்கள் எல்லாரும், இஸ்ரவேலர் எல்லாரும் தேவ ஆவியைப் பெற்று தீர்க்கதரிசனம் சொல்ல வேண்டுமென்று மோசே விரும்பினதாகப் பார்க்கிறோம். தேவ ஜனங்களில் தேவ ஆவியானவர் இறங்கி வந்தவுடனே, அவரவர்கள் செய்ய வேண்டிய பணிகளுக்கேற்ற திறமை **(ability)** பரிசுத்த ஆவியானவருடைய வரங்கள் அருளப்படுகிறது என்று நாம் அறிகிறோம் [1 கொரி. 12:8-11].

[தொடரும்]

"அவர்கள் இச்சித்தது போல நாமும் பொல்லாங்கானவைகளை இச்சியாதபடிக்கு, இவைகள் நமக்குத் திருஷ்டாந்தங்களாயிருக்கிறது" 1 கொரி. 10:6.

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   2 [திங்கள்] ஆகஸ்ட் 1993
   1 [புதன்] செப்டம்பர் 1993
   1 [வெள்ளி] அக்டோபர் 1993
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **CHIEF PASTOR N LAZAR**
   **"NEW JERUSALEM CHURCH"**
   **CHURCH LANE, TILAK NAGAR,**
   **DARGA ROAD, BHANDUP,**
   **BOMBAY-400 078 INDIA**
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும் -
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 112 - AUG. '93




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்"

- மாற்கு 13 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிகையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே 4:11-16)

## புதிய எருசலேம சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின அஸ்திபார உபதேசங்கள் :

1 உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத் 28:18; மாற்கு 16:15

2 விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).

3 திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20

4 அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23

5 அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா 21:15-17.

6 இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)

7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும் இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப 1 - 1; 10 40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை

இந்த நாட்களில் கள்ள மதங்கள் பெருகிப்போய் விட்டது. பொய்யுடையோன் ஒருவன் சொல்வன்மையினல் மெய் போலுமே மெய்போலுமே, மெய்யுடையோன் ஒருவன் சொல்வன்மையின்மையினல் பொய் போலுமே, பொய் போலுமே என்ற சேக்கிழாரின் கவியின் படி பொய்யுடையவர்கள் தங்களுடைய எழுத்துத் திறமையினலும், வக்கணையினலும், பிறரை தூஷிக்கிறதினலும் தங்களை மெய் போலக் காண்பிக்கிருர்கள். மெய்யுடையவர்கள், எழுத்துத் திறமையும் ஆள் பலமும், வக்கணையும் இல்லாதபடியினலே அவர்களால் மெய்யை நிருபிக்க முடியவில்லை. அது பொய் போல் காணப்பட்டாலும் மெய் மெய்தான்; பொய் பொய்தான். ஒரு நாள் சத்தியம் ஜெயிக்கும். மனிதர்களை பாவம் மேற்கொண்டு வருகிறது. மனிதன் கிரியைகளினல் முக்தியடையலாம் என்று பிரயாசப் படுகிருன். அது "சான் உயர முழம் சறுக்கின" கதையாகவே இருக்கும். மதங்கள் தங்களை புனர்வுத்தானம் செய்து கொள்ளுகிறதாகச் சொல்லி, எழுச்சி என்று சொல்லி மக்கள் பொய் சொல்லவும், துஷ்ட கிரியைகள் செய்யவும், கிரிமினல்களாக மாறிக் கொண்டிருக்கிற ஒரு காலமாக இது இருக்கிறது. இதன் மத்தியில் மெய் மார்க்கத்தின் தேவ ஜனங்கள் பக்தி மேல் பக்தியடைந்து பரலோகத்தைத் தேடும் பாக்கியத்தைப் பெற்று வருகிருர்கள். தேவன், தேவ ஜனங்களுடைய இருதயங்களை விருத்தசேதனம் பண்ணி, அவர்கள் அவருடைய கற்பனைகளின்படி நடக்க, அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ள, தேவன் மேல் முழு இருதயத்தோடும் அன்பு கூர அனுக்கிரகம் செய்யப் போகிருர். கடைசிக் காலத்தில் இஸ்ரவேலர் (மெய்யான இஸ்ரவேலராகிய கிறிஸ்தவர்கள்) களுக்கு தேவன் இவ்விதமாக வாக்கருளியிருக்கிறபடியினல் நாம் மிகவும் சந்தோஷமும் மகிழ்ச்சியுமாய் பூரணமான ஒரு நிலையை அடைவோமென்று எதிர்பார்த்து இருக்கலாம். கர்த்தர் வாக்கருளின காலங்கள் நெருங்கிக் கொண்டிருக்கிறது. மக்கள் முழு இருதயத்தோடும், முழு ஆத்துமாவோடும், முழு மனதோடும், முழு பலத்தோடும் தேவனில் அன்பு கூரவும், அவருடைய கற்பனைகளைக் கைக் கொள்ளவும் தக்கதான நல்ல இருதயத்தை தேவன், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து உண்மையாய் அவரைப் பற்றிக் கொண்டு அவரைப் பின்பற்றுகிற தேவ ஜனங்களுக்கு, அவருக்குக் கீழ்ப்படிகிறவர்களுக்கு அருளப்போகிருர். ஆனபடியினல், மெய் ஜெயங்கொள்ளும் காலமாயிருக்கிறது. வல்லமையை தேவன் அனுப்பிக் கொடுப்பார். "காகங்கள் ஆயிரம் கூடினலும் கல் ஒன்று போதும்" என்று பழமொழியுண்டு. அதினல் சத்துருவின் கோஷ்டங்களைக் கண்டு அஞ்சாமல் தேவ ஜனங்கள் கர்த்தருக்காய் நிற்கவும்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

## 12 அப்போஸ்தலர்கள்.

இயேசுவானவர் தம்முடைய ஊழியப் பணியை உலகத்தில் எல்லா மக்கள் மத்தியிலும் கொண்டு செல்வதற்கென்றும், தம்முடைய ராஜ்யத்தை பூமியில் ஸ்தாபிப்பதெற்கென்றும் தம்முடைய சீஷர்களில் பன்னிரண்டு பேரைத் தெரிந்து கொண்டார். இவர்கள் அப்போஸ்தலர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். இவர்கள் கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கவும், அவருடைய வாழ்க்கை மற்றும் உயிர்த்தெழுதலைக் குறித்து சாட்சிகளாய் செயல் படுத்துவதும் அவசியமாயிற்று. தெரிந்து கொள்ளப்பட்ட பன்னிரண்டு பேர்களின் நாமங்களாவன:

சீமோன் (இயேசுவால் பேதுரு என்று மறுபேரிடப்பட்டவர்),

இவருடைய சகோதரன் அந்திரேயா,

அல்பேயுவின் குமாரர்கள் யாக்கோபு, யூதா (ததேயு),

சீமோன்,

செபதேயுவின் குமாரர்கள் யாக்கோபு, யோவான்,

பிலிப்பு,

பர்தொலொமேயு (நாத்தான்வேல்),

மத்தேயு (லேவி),

தோமா,

யூதாஸ் என்பவர்களே.

இவர்களில் குறிப்பிடத்தக்க காரியம் என்னவென்றால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களில் ஒருவராகிலும் பெருந் திறமையோ கல்வியறிவோ இல்லாதவர்களாயிருந்தார்கள். மேலும், வரிவசூலிப்பவலும், செல்வந்தருமான மத்தேயுவைத் தவிர, எல்லாரும் ஏழைகளும், எளிமையான சூழ்நிலையிலிருந்து வந்தவர்களுமாயிருக்கிறார்கள். இவர்கள் யாவருக்கும் தலைவராக வரக்கூடிய பேதுரு மீன்பிடிக்கும் தொழில் செய்பவராயிருந்தார், ஆகிலும், யூதாஸைத் தவிர அவர்கள் எல்லாரும் தகுதியானவர்களும், கிறிஸ்துவின் தலைமையின் கீழ் போதனை பெற்று வைராக்கியத்திலும், பரிசுத்தத்திலும் வளர்ச்சியடைந்த தேவ பக்தியுள்ள மனிதர்களாக இருந்தார்கள்.

இயேசுவானவர் பரத்திற்கு எழுந்தருளிப் போன பின்பு யூதாஸின் இடத்தில் இன்னொருவரை நியமிக்க அவர்கள் கூடி வந்து பரிசுத்த ஆவியின் நடத்துதலின்படி மத்தியாவை சீட்டுப் போட்டுத் தெரிந்து கொண்டார்கள். பெந்தெகொஸ்தே நாளன்று அவர்கள் மேல் பரிசுத்த ஆவியானவர் அக்கினி மயமான நாவுகளுடன் வந்திறங்கினதினால் அவர்கள் உடனடியாக வீரமுள்ள பிரசித்தி வாய்ந்த நபர்களாக மாற்றப்பட்டு உலகத்தின் எல்லா மூலைகளிலும் சென்று சபைகளை ஸ்தாபித்து அற்புதங்களை நடப்பித்து இயேசுவின் வார்த்தைகளைப் பிரசங்கித்தார்கள். அவர்களுடைய பிரயாசங்கள் புரியாத அளவிற்கு வெற்றி வாய்ந்ததாக இருந்தது. அப்போஸ்தலனாகிய யோவானைத் தவிர மற்ற எல்லாரும் விசுவாசத்திற்காக, சத்தியத்திற்காக இரத்த சாட்சிகளாக மரித்தார்கள் என்று நம்பப்படுகிறது.

யோவானைக் குறித்து, இவர் எபேசு பட்டணத்தில் கி. பி. 100 ல் மரித்தார் என்று பாரம்பரியம் உள்ளது. இயேசுவானவர் தாம் சிலுவையில் மரிக்கும் தறுவாயில் இருக்கும் நேரத்தில் தம்முடைய தாயாகிய மரியாளை அன்பான சீஷன் என்றழைக்கப்பட்ட இந்த யோவானிடத்தில் பொறுப்பாக ஒப்படைத்தார். அப்போஸ்தலர் யாவரும் யூத இனத்தவர்கள். பேதுருவும், பிலிப்பும் விவாகமானவர்கள். இவைகளைத் தவிர அவர்களுடைய தனிப்

பட்ட வாழ்க்கையைக் குறித்து அதிகமாக ஒன்றும் தெரியாது. பின்பு அப். பவுல், அப்போஸ்தலனாக எழும்பினர் என்று அறிகிறோம். இவர்கள் எல்லாரும் கர்த்தருக்கு சாட்சியாக பிரசங்கித்தும், ஜீவித்தும் இயேசு கிறிஸ்துவினுடைய மெய் மார்க்கத்தை உலகமெங்கும் பரப்பினார்கள். இயேசு கிறிஸ்துவின் போதனைகளை எழுதி வைத்தார்கள். அவைகளை புதிய ஏற்பாட்டில் காணலாம்.

மிஷன்: **(MISSION)** இது அனுப்பப்படும் என்று அர்த்தங்கொள்ளும் லத்தீன் மொழியாகும். திருச்சபையானது பல் வேறு தேசங்களுக்கும் சத்திய வேத போதகரை அனுப்புகிறதே மிஷன் எனப்படும். மிஷனரிகள் **(Missionary)** என்றால் அனுப்பப்பட்டவர்கள் என்று அர்த்தங்கொள்ளும். அனுப்பப்பட்டவர்கள் என்றர்த்தங்கொள்ளும் அப்போஸ்தலன்மார் இயேசு கிறிஸ்துவினால் நீங்கள் உலகமெங்கும் போய் சகல சிருஷ்டிக்கும், யாவருக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் [மாற். 16:15] என்று முதன் முதல் அதிகாரம் கொடுக்கப்பட்டதே இந்த மிஷனரிகளுக்கு ஆதாரமாயிற்று அது முதல் இதுவரைக்கும் பற்பல காலங்களில் திருச்சபையார் அஞ்ஞானிகளை திருச்சபைக்குட்படுத்த பலவிதமாக பிரயாசப்பட்டு வருகிறார்கள்.

கிறிஸ்து பிறந்து 600 வருஷத்துக்குப் பின்பு பெரிய கிரகோரி **(Gregory)** பாப்பு இங்கிலாந்து தீவுக்கு சில போதகர்களை அனுப்பினர். அதற்கு முன்னமே இங்கிலாந்து தேசத்தாரில் சிலர் கிறிஸ்தவர்களாக இருந்தார்கள். பிற்பாடு தாத்தாரி தேசத்திலும், சீன தேசத்திலும் சத்திய வேதத்தை பிரபல்யப்படுத்தத் தொடங்கினார்கள்.

போர்த்துக்கீசியர்கள் சமுத்திரவழியாய் அநேக தேசங்களைக் கண்டுபிடித்தபோது கிறிஸ்து மார்க்கத்தை ஆங்காங்கு கொண்டு போய் ஸ்தாபித்தார்கள். அமெரிக்கா தேசத்தை கண்டுபிடித்த கொலம்பஸ் என்பவரும் ரோமன் மார்க்கத்தை அவ்விடத்திலே ஸ்தாபிக்க ஆசையாயிருந்தார். ஆனால் போர்த்துக்கீசியரும் ஸ்பானியா தேசத்தாரும் மிக ஆர்வமாய் தங்களுடைய மார்க்கத்தை தாங்கள் கண்டுபிடித்த தேசத்தில் தீவிரமாக பரப்பி ஸ்தாபித்தார்கள்.

1540 ல் இயேசு சபை **(Society of Jesus)** என்ற ஒரு மிஷன் ஏற்படுத்தப்பட்டது. அதைச் சேர்ந்த பாதிரிகள் மிகவும் வைராக்கியமுள்ளவர்களாய் பல தேசங்களிலும் ரோமன் மார்க்கத்தைப் பிரசித்தப்படுத்தினார்கள். அவர்களைக் கண்டு பிரான்ஸிஸ் கர் டோமனிக்கர்கள் முதலான சபையார்களும் அந்நிய தேசத்தாரை கிறிஸ்தவர்களாக்க பிரயாசப்பட்டார்கள். 1672 ல் ரோமாபுரியிலே சத்திய வேதத்தை ஸ்தாபிக்க பரிபாலன சங்கம் **(College de propaganda)** ஸ்தாபிக்கப்பட்டது. பின் இப்படிப்பட்ட பல்வேறு மிஷனரி ஸ்தாபனங்கள் எழும்பி பலதேசங்களுக்கு மிஷனரிகளை அனுப்பியது. பிராட்டஸ்டண்ட் எனப்பட்ட சுவிசேஷ சபையார் முதன் முதலில் அல்மார்க் தேசத்திலும் ஜெனிவா பட்டணத்திலுமிருந்து 1556-வது வருஷத்திலே அமெரிக்க கண்டத்திற்கு போதகர்களை அனுப்பினார்கள்.

[தொடரும்.]



இதோ, உலகத்தின் முடிவு பரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனே கூட இருக்கிறேன் என்றார் ஆமென்.

மத். 28:20.



# சத்திய வேதம் [தொடர்ச்சி]

## அதிசய திவ்விய நூல்.

பண்டைக்கால சரித்திர சம்பவங்கள் அகழ் ஆராய்ச்சியின் மூலமாக ருசுவாகின்றன. எரிகோ பட்டணம் திடீரென்று வீழ்ச்சியடைந்த மதிற்சுவரும், அந்தப் பட்டணம் சுட்டெரிக்கப்பட்டதற்கான ஆதாரம் இப்பொழுது கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. அவ்விதமாகவே, வேதாகமத்தில் குறிப்பிடப்படுகிற அநேக நகரங்களும், தேசங்களும், குடிகளும் இருந்தன என்பது ஆராய்ச்சிப் பண்ணப், பண்ண உண்மையாக நிருபணம் ஆகிக் கொண்டிருக்கின்றன.

## மனுவைக் குறித்து வேதம் போதிப்பது:

தற்காலத்தில் தத்துவ சாஸ்திரம் வெகுவாய் முன்னேற்றம் அடைந்திருப்பதால் தத்துவ சாஸ்திரிகள் தங்களைக் குறித்து அதிகம் சிந்தித்தும், பேசியும் வருகின்றனர். அவர்கள் தங்கள் சரீரத்தின் தத்துவங்களை மட்டுமல்ல, தங்கள் மனோ தத்துவங்களையும் மென்மேலும் ஆராய்ந்து வருகின்றனர். இவ்விஷயங்களையும், மனுஷ ஜாதியாகிய சரித்திரத்தையும் குறித்து சத்திய வேதம் போதிப்பவைகளை சற்றுக் கவனிப்போம்.

மனிதனை சரீரம், ஆத்துமம் என தத்துவ சாஸ்திரிகள் போதிக்கின்றனர். சத்திய வேதமோ விசுவாசிகளை ஆவி, ஆத்துமா, சரீரம் என்று மூன்று அம்சங்கள் உடையவைகளாக போதிக்கிறது (1 தெச. 5:23). இவ்விரண்டுக்குமுள்ள பேதாபேதங்களை நாம் நன்கு கவனிக்க வேண்டும். மேற்சொல்லிய சாஸ்திரிகள் ஆவிக்குரிய ஜீவனை அசட்டை செய்து மனிதனின் சரீரமே அவனது விசேஷித்த பாகம் என்பதாய்க் கூறுகின்றார்கள். இந்த சாஸ்திரிகளின் அபிப்பிராயத்தின்படி நமக்கு ஆவி இல்லாவிடில் நமது சரீரமே முதன்மையாய் இருக்கும். ஆனால், அப்படியில்லாமல் மெய்க் கிறிஸ்தவர்கள் ஆவி, ஆத்துமா சரீரம் ஆகிய மூன்றையும் உடையவர்களாய் இருக்கிறார்கள் என்பதாய்க் கடவுள் கூறுகிறார் இந்த மூன்று அம்சங்களையும் பின் வருமாறு விளக்கிக் காட்டலாம்.

அதாவது, ஆவி என்பது கடவுளை அறிந்து அவரோடு சம்பந்தப்படும் தன்மையைக் குறிக்கும். சரீரம் என்பது மனிதன் தன்னைச் சுற்றியுள்ள இந்த உலகத்தை உணர்ந்து அதோடு சம்பந்தப்படும் தன்மையைக் குறிக்கும். ஆகவே ஜீவனானது உணர்ச்சி அல்லது சம்பந்தம், அல்லது அனுபவம் எனச் சொல்லலாம். திருஷ்டாந்தமாக நமது கை ஒரு மரத்தில் மோதி நசுக்கப்பட்டால் நமக்கு உணர்ச்சியும் நோவும் உண்டாகும். எனக்கு சரீரத்திற்குரிய உயிர் உண்டு என்பதற்கு அதுவே சரியான அத்தாட்சியாகும். அது போலவே நான் ஒரு புத்தகத்தைப் படித்து அதன் பொருளை சிந்தனை செய்தால் அவ்வாறு சிந்திக்கும் சக்தியானது எனக்கு ஆத்தும ஜீவன் உண்டு என்பதை ருசுப்படுத்துகின்றது.

அதுபோலவே, நாம் உண்மையாகக் குணப்பட்ட கிறிஸ்தவனாய் இருப்போமானால் ஜெபத்தின் மூலம் கடவுளின் சமுகத்தை உணர்ந்து கொள்ளுவோம். இந்த அனுபவம் எனக்கு ஆவிக்குரிய ஜீவன் இருக்கிறது என்பதற்கு அத்தாட்சியாய் இருக்கிறது.

மறுஜென்மம் அடையாத ஒரு மனிதனே ஆவிக்குரிய ஜீவன் அற்றவனாயிருக்கிறான். அவன் சரீர விஷயத்தில் சுக ஜீவியாய் இருக்கலாம். அவன் சரீர

சுகமும், பெலமும் அழகும் உள்ளவனுய் இருக்கலாம். அவன் ஆத்துமம் உயிருள்ளதாக இருக்கிற அவனின் மனேதத்துவங்கள் சுறுசுறுப்பாகவும் ஏராளமான கல்வி கற்றதாகவும் இருக்கலாம். அவன் நற்குணசீலனுயும் கூட நீதியும், சாந்தமும், சன்மார்க்கமுமுடையவனுக நடந்து கொள்ளலாம். இருப்பினும் ஒரு செத்த சரீரம் எப்படி சொரணையற்றிருக்கிறதோ அப்படியே அவனது ஆவி உயிரற்ற நிலையிலே இருக்கிறது.

கடவுளோடு ஐக்கியப்பட வேண்டிய அந்த ஆவி கடவுளை அறியாமலும் அவர் சமுகத்தை நாடாமலும் இருக்கிறது. மறு பட்சத்தில் பரமனின் திவ்விய ஆவியால் மறுபடியும் ஜெநிப்பிக்கப்பட்டு குணப்பட்ட கிறிஸ்தவர்கள் யாவரும் சரீர விஷயமாக மட்டுமல்ல, ஆவிக்குரிய விஷயமாகவும் சொரணை, உணர்ச்சி, சம்பந்தம், அனுபவம் உடையவர்களே. இதற்கிசைய சத்திய வேதத்தில் ஒருவன் மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தைக் காணமாட்டான் என்று எழுதியிருக்கிறது [யோ. 3:3,5]. மீண்டும் மறுஜென்மமானது ஆவிக்குரிய பார்வையை உண்டாக்குகிறது.

ஆனபடியினுல் அற்ப கல்வியும், அறிவும் உடையவராய் ஒருவர் இருந்த போதிலும் ஒருவன் உண்மைக் கிறிஸ்தவனுயிருந்தால் எந்த சாஸ்திரியைக் காட்டிலும் அதிக ஞானமுள்ளவனுயிருப்பான் ஏனெனில் குணப்படாத ஒரு சாஸ்திரிக்கு மெய் ஞானமில்லை. அதுவுமின்றி குணப்பட்ட யாவருக்கும் ஆவிக்குரிய செவியுண்டு. ஆதலால், இயேசுவானவர் வேறே ஆடுகளும் எனக்கு உண்டு, அவைகள் என் சத்தத்துக்குச் செவி கொடுக்கும் என்ருர் [யோ. 10:14]. அந்நியருடைய சத்தத்தை அறியாதபடியினுல் அவைகள் அந்நியருக்குப் பின் செல்லாமல் அவனை விட்டோடிப்போம் என்றும் யோவான் விளம்பினுர். மேலும், உண்மையுள்ள விசுவாசிகள் கடவுளின் பிரசன்னத்தை உணர்ந்து கொள்ளவும், தேவ வல்லமையுடையவர்களாகப் பேசவும் கூடும். சத்திய வேதம் மனிதனைக் குறித்துக் கூறுவதை பின்வருமாறு சுருக்கிச் சொல்லலாம்.

1. எல்லாவிதத்திலும், அவனது சகல அங்கங்களிலும் மனிதன் பூரணமாக சிருஷ்டிக்கப் பெற்ருன்.

2. பாவத்தில் சிக்குண்டதினுல் ஆவிக்குரிய பான்மையாக செத்தவன். ஆகையால், அவன் பாவஞ்செய்யக் கூடிய ஜீவன் உடையவனுய் இருக்கிருன். கடவுளுக்கென ஜீவிக்கத் தகுந்த உயிர் அவனுக்கில்லை.

3. தேவ ஆவியால் உண்டாகும் மறுஜென்மத்தால் கிறிஸ்துவின் ஜீவனைப் பெறுவதே மனிதன் ஆவிக்குரிய ஜீவனைத் திரும்பப் பெறுவதாகும்.

4. ஒருவனுடைய ஆவிக்குரிய ஜீவன் பெலப்பட, பெலப்பட அவன் தேவனேடு அதிகமதிகமாய் ஐக்கியப்படுகிருன். அம்மனிதனுக்கும் இவ்வுலகத்திற்குமுரிய சம்பந்தங்கள் வர, வர அற்றுப் போகின்றன. மரணம் அளிக்காத ஜீவன் அவனுக்குள் இருக்கிறபடியால் நித்தியமாய்ப் பிழைப்பான்.

5. மறுஜென்மமடையாத ஒரு மனிதன் சுக பெலமுள்ள சரீரமும், கல்வி கற்ற மனமும், சற்குணமும் சன்மார்க்கமுமான தன்மையுடையவனுமாயினும் அவன் ஆவிக்குரிய உயிர் அற்றவனே. மரணமானது அப்படிப் பட்டவனுடைய ஜீவனை அழித்து விடும். அந்த ஜீவன் தேவ சமுகத்தில் நிலைக்காது. உலகமும் அதின் இச்சையும் ஒழிந்து போகும் தேவனுடைய சித்தத்தின்படி செய்கிறவனே என்றென்றைக்கும் நிலைத்திருப்பான் (1 யோ. 2:17).

ஆனபடியினால் மனுவைக் குறித்து சத்திய வேதாகமம் போதிப்பதே முறைமையானதாக இருக்கிறது.

(தொடரும்)

''உங்களுடைய ஆவி, ஆத்துமா, சரீரம் முழுவதும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரும் போது குற்றமற்றதாயிருக்கும்படி காக்கப்படுவதாக''
1 தெச. 5:23.



## வேத பாடம்

(தொடர்ச்சி)

எண்ணாகமம

எண். 11. 31-34.

அப்பொழுது கர்த்தரிடத்திலிருந்து புறப்பட்ட ஒரு காற்று சமுத்திரத்திலிருந்து காடைகளை அடித்துக் கொண்டு வந்து பாளயத்திலும், பாளயத்தை சுற்றிலும் இந்தப் பக்கம் ஒரு நாள் பிரயாணம் மட்டும் அந்தப் பக்கம் ஒரு நாள் பிரயாணம் மட்டும் கரையின் மேல் இரண்டு முழ உயரம் விழுந்து கிடக்கச் செய்தது. அப்பொழுது ஜனங்கள் எழும்பி அந்தப்பகல் முழுவதும், இராமுழுவதும், மறுநாள் முழுவதும், காடைகளைச் சேர்த்தார்கள். கொஞ்சமாய்ச் சேர்த்தவன் பத்து ஓமர் அளவு சேர்த்தான். அவைகளை பாளயத்தைச் சுற்றிலும் தங்களுக்குக் குவித்து வைத்தார்கள். இஸ்ரவேலர்கள் மாம்சம் புசிக்க ஆசை கொண்டு மாம்சத்திற்காக அழுதார்கள். தங்களுக்கு இறைச்சி கொடு என்று மோசேயைப் பார்த்து அழுதார்கள் என்று வச 13 ல் நாம் வாசிக்கிறோம்.

மனிதன் இச்சையினால் நிரம்பும் போது அதை நிறைவேற்ற அவன் விரும்புகிறான். அவ்விதமாக தங்களுடைய விருப்பத்திற்கு இறைவன் உதவி செய்யவேண்டுமென்றும் அவர்கள் கேட்கலாம். ஆனால், தேவனுடைய சித்தத்தின்படி, தேவன்கொடுக்கிற ஆகாரத்தையே மனிதன் புசிக்க வேண்டும் இல்லையென்றால் அமர்ந்திருக்க வேண்டும். அவர்கள் இறைச்சிக் கேட்டார்கள், கர்த்தர் அவர்களுக்கு இறைச்சி கொடுத்தார். அவர்கள் இச்சையுடையவர்களாகி தேவனைப் பரீட்சைப பார்த்தார்கள். எங்களுக்கு இறைச்சி கொடுப்பவர் யார் என்று கேட்டார்கள் [சங். 106:14]. அவர்கள் இறைச்சி புசித்தார்கள் அவர்கள் இச்சித்ததை தேவன் அவர்களுக்குக் கொடுத்தார். ஆகிலும், அவர்கள் ஆத்துமாக்களிலே இளைப்பை அனுப்பினார் என்று நாம் வாசிக்கிறோம் (சங். 106:15).

நாம் இச்சித்ததை எல்லாம் தேவன் நமக்குக் கொடுக்கிறது நமது ஆத்துமாவுக்கு பிரயோஜனமாயிராது. சரீர ஆசை, சரீர உணர்ச்சிகளை நாம் அடக்க வேண்டும். மனிதன் உணர்ச்சியை சார்ந்து ஜீவித்தால் அதனால் கேடுண்டாகும். கடைசியிலே

அழிவு வரும். மனிதன் புத்தியை, அறிவை, ஞானத்தை உபயோகிக்க வேண்டும். உணர்ச்சிக்கு எப்போதும் கட்டுப்படக் கூடாது. மனித சரீரத்திலே இருக்கும் போதே இந்தப் போராட்டம் மனிதனுக்கு இருக்கும். இவைகளிலிருந்து நாம் நம்மைக் காத்துக் கொள்ள வேண்டும்.

அவர்களுக்கு இறைச்சியை தேவன் ஏராளமாகக் கொடுத்தார். ஒரு நாள், இரண்டு நாள், மூன்று நாள் அல்ல ஒரு மாதம் மட்டும் இறைச்சி புசிப்பீர்கள் என்று சொல்லப்பட்டது. அவ்விதமாக அவர்களுக்கு இறைச்சி அளிக்கப்பட்டது. அவர்கள் இறைச்சியைப் புசித்தார்கள் ஆனாலும் அவர்கள் மத்தியிலிருந்த கொழுத்தவர்கள் மேல் சங்காரத்தை தேவன் அனுப்பினார். இறைச்சியை அவர்கள் புசித்து அதிலே திருப்தியடையாமல் மேலும், மேலும் அவர்கள் புசித்தார்கள். அதனால் வாதையுண்டாயிற்று. வாதையினால் அநேகர் செத்தார்கள்.

சங். 105:40 ல் கேட்டார்கள், அவர் காடைகளை வரப் பண்ணினார். வானஅப்பத்தினாலும் அவர்களை திருப்தியாக்கினார் என்று நாம் வாசிக்கின்றோம். மனிதன் இச்சையின்படி ஜீவித்தால் சாவான். கொழுத்தவர்களுக்குள்ளே இளைப்பை அனுப்புவார். பட்சிக்கிற அக்கினியை அவன் மகிமையின் மேல் கொழுத்துவார் என்று எழுதப்பட்டுள்ளது [ஏசா. 10:16]. எனவே, நாம் நம் முடைய தேவைகளுக்காக தேவனிடத்தில் ஜெபிக்கலாமே தவிர தேவனை பரீட்சை பார்க்கக் கூடாது என்று அறிந்து கொள்கிறோம். அங்கே அவர்களுக்குள் தண்டனை உண்டாகி அநேகர் மரித்தபடியினால் அந்த இடத்துக்குக் கிப்ரோத் அத்தாவா என்று பேரிட்டார்கள். இச்சையின் பிரேதக் குழிகள் என்று அதற்கு அர்த்தமாம். இவ்விதமாக அவர்கள் இச்சைக்கு இடங்கொடுத்ததினிமித்தம் தேவன் அவர்கள் மேல் கோபங் கொண்டார்.

இந்து மார்க்கத்தில் மாம்சம் புசிக்கக் கூடாது என்று சிலர் சொல்லுகிறார்கள். மாம்சம் புசிக்கக் கூடாது என்றால் மாம்சத்தை இச்சிக்கக் கூடாது என்றர்த்தம். ஸ்திரீயை இச்சிக்கக் கூடாது என்றர்த்தமேயொழிய இறைச்சி சாப்பிடுகிறதைப் பற்றிய காரியமல்ல அது.

## எண். 11:35.

பின்பு ஜனங்கள் கிப்ரோத் அத்தாவா என்னுமிடத்தை விட்டு ஆஸ்ரோத்திற்கு பிரயாணம் பண்ணி, ஆஸ்ரோத்திலே தங்கினார்கள் என்று வாசிக்கிறோம். இந்த ஆஸ்ரோத் சீனாயை விட்டு அவர்கள் புறப்பட்டு முதலாவது தங்கிய இடம் ஆகும். இங்கேயிருந்து நான்கு நாள் பிரயாணத்தில் காதேஸ"க்குப் போய்ச் சேரலாம். அதாவது, கிட்டத்தட்ட 40 மைல் தூரம்தான். சீனாய் மலையிலிருந்து காதேஸ் 40 மைல் தூரமாம்.

## எண்ணாகமம் 12:1-3

## மிரியாமும், ஆரோனும் மோசேக்கு விரோதமாய்க் குற்றஞ் சொல்லுதல்:

மோசே விவாகம் பண்ணியிருந்த ஸ்திரீயினிமித்தம் மோசேயை இவர்கள் குற்றப்படுத்தி பேசுகிறார்கள். பேசின விதம் மிகவும் வேடிக்கையாக இருக்கிறது. மிரி

யாமும், ஆரோனும் மோசேக்கு விரோதமாகப் பேசி கர்த்தர் மோசேயைக் கொண்டு மாத்திரம் பேசினாரோ எங்களைக் கொண்டும் அவர் பேசினதில்லையோ என்றார்கள், கர்த்தர் அதைக் கேட்டார். மோசேயானவர் பூமியிலுள்ள சகல மனிதரிலும் மிகுந்த சாந்த குணமுள்ளவராயிருந்தார்.

கர்த்தர் மோசேயைக் கொண்டு மாத்திரமல்ல ஆரோன் மிரியாம் மூலமும் ஜனங்களை நடத்தினார். உண்மைதான். தேவன் திருச்சபையிலும் பல தலைவர்களை எழுப்பலாம். ஆனாலும் மோசேயும், இவர்களும் சமம் என்று நாம் சொல்வதற்கில்லை. மோசே வேதாகமத்தில் காணப்படுகிற விதிவிலக்கான மனிதர். ஆரோன் பிரதான ஆசாரியனாய் இருந்த போதிலும் அவன் தேவ சந்நிதானத்தில் எப்பொழுதும் செல்ல முடியாது. வருஷத்தில் ஒரு தடவை பாவ நிவாரண நாளில் தனக்காகவும், தன் குடும்பத்திற்காகவும், பிற ஜனங்களுக்காகவும் பாவ நிவாரண பலியின் இரத்தத்தோடு கூட மகா பரிசுத்த ஸ்தலத்திற்குள் பிரவேசித்து பணிவிடை செய்யலாம். மற்றப்படி அவன் மகா பரிசுத்த ஸ்தலத்திற்குள் போக அனுமதி கிடையாது. பரிசுத்த ஸ்தலத்திற்குள் தினந்தோறும் போய் விளக்கேற்றலாம், தூபமிடலாம், அப்பம் அடுக்கலாம், பல பணிவிடைகளைச் செய்யலாம். ஆனால் மகா பரிசுத்த ஸ்தலத்திற்குள் அவன் போகக் கூடாது. மோசேயோ அப்படியல்ல, தனக்கு விருப்பமான போதெல்லாம் தேவ சந்நிதானத்திற்குப் போய் தேவனோடு கூட உறவாடலாம். தேவனுடைய கட்டளைகளைப் பெறுவார், ஜனங்களுக்கு அறிவிப்பார்; ஜனங்களுடைய காரியத்தையும் போய் தேவனிடத்தில் தெரிவிப்பார் (எண். 7:89).

மோசே தேவனுடைய மனிதன். மோசேயைக் குறித்து இங்கே நாம் ஒரு குறிப்பைப் பார்க்கிறோம். மோசே பூமியிலுள்ள சகல மனிதரிலும் மிகுந்த சாந்த குணமுள்ளவனாயிருந்தான் என்று எழுதப்பட்டிருக்கிறது. பரிசுத்த ஆவியானவர் இவ்விதமான ஒரு நிறைவுடைய மனிதனாய் மோசேயை உருவாக்கி இருந்தார். எந்த ஒரு மனிதனும் தன்னுடைய தவறைக் குறிப்பிட்டு காண்பிக்கமாட்டான், எழுதமாட்டான். ஆனால் இதே புஸ்தகம் 20-ம் அதிகாரம் 12-ம் வசனத்தில் மோசே செய்த தவறை தேவன் கண்டித்ததை அவர் குறிப்பிட்டிருக்கிறார். யாத். 4:24 ல் கர்த்தர் மோசேயைக் கொல்லப் பார்த்தார் என்பதையும் அவர் குறிப்பிட்டிருக்கிறார். உபா. 1:37 ல் கர்த்தர் மோசே மேல் கோபங்கொண்டதை குறிப்பிட்டிருக்கிறார். மோசே தனக்காக தன்னுடைய பெருமைக்காக வாழவில்லை. மோசே ஊழியத்திலும் தன்னுடைய பிள்ளைகளை பதவியில் வைத்து, பொறுப்பில் வைத்து தன்னுடைய பிற்கால சந்ததிக்கு ஆயத்தம் செய்ய வேண்டுமென்று எதுவும் செய்யவில்லை. தகுதியில்லாத பிள்ளைகளை அப்படிச் செய்ய முடியாது

ஆனால் இந்நாட்களில், ஊழியர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் தங்களுடைய ஊழியத்தையும், பிற்காலத்தையும் பாதுகாக்கிறதற்கு தன்னுடைய பிள்ளைகளை பதவியில் வைக்கிறதும் சில முக்கியமான பொறுப்புகளை தங்களுடைய பிள்ளைகள் கைகளிலே ஒப்படைக்கிறதுமான காரியங்களைச் செய்கிறார்கள். ஏலியும், சாமுவேலும் இப்படிப்பட்ட காரியங்களைச் செய்து தோல்வியடைந்தார்கள் என்பதை நாம் பார்க்கிறோம். கர்த்தருடைய வெளிப்படுத்தலும், கட்டளையும் இருந்தாலொழிய அப்படிச் செய்யக் கூடாது. மோசேயும் மற்ற ஊழியர்களும் சமமானவர்களல்ல மோசே விவாகம் பண்ணிய ஸ்திரீயினிமித்தம் இங்கே அவர்கள் குறை சொன்னார்கள் என்று பார்க்கிறோம். பரிசுத்தவானுடைய வாழ்க்கையில் ஏதாவது குற்றம்

கிடைக்கிறதா என்று கண்டு பொறாமையினால் குறை சொல்பவர்கள் இருப்பார்கள். "மோசே விவாகம் பண்ணியிருந்த எத்தியோப்பியா ஸ்திரீயினிமித்தம்" என்று எழுதப்பட்டுள்ளது.

மீதியானிய ஸ்திரீயை விவாகம் பண்ணியதாக நாம் யாத்திராகமத்தில் வாசிக்கிறோம். மோசே எகிப்தின் ராஜாவாகிய பார்வோனுக்குப் பயந்து மீதியான் தேசத்துக்கு ஓடிப் போனார் என்றும், மீதியான் தேசத்து ஆசாரியனின் குமாரத்திகளில் ஒருத்தியை விவாகம் பண்ணினார், அந்த ஸ்திரீயின் பெயர் சிப்போராள் என்றும் நாம் யாத். 2:15 முதல் வாசிக்கிறோம். இந்த மீதியான் தேசத்து ஆசாரியனாகிய எத்திரோவைப் பற்றி நாம் ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். மீதியானியர்கள் ஆபிரகாமின் சந்ததியாயிருக்கிறார்கள். ஆபிரகாமுக்குக் கேத்தூராள் மூலமாக சந்ததிகள் உண்டாயிருந்தது. அதிலே மீதியானும் ஒருவர் (ஆதி. 25:1,2). ஆனபடியால், மோசேயினுடைய மனைவி எத்தியோப்பிய ஸ்திரீ என்று எண்ண வேண்டியதில்லை. ஆபிரகாமுடைய சந்ததியிலுள்ள ஒரு ஸ்திரீ என்று நாம் அறிந்து கொள்ள வேண்டும். மீதியான் தேசம் எத்தியோப்பிய ஆளுகைக்குட்பட்டிருந்தது.

மிரியாமுக்கும் ஆரோனுக்கும் தங்களுடைய தம்பியின் மேல் பொறாமை உண்டாயிற்று. அவனுடைய உயர்ந்த பதவியும், ஜனங்கள் அவனுக்கு கொடுக்கிற கனமும் இவர்களால் தாங்க முடியவில்லை. ஆகையால், ஏதாவது சொல்ல வேண்டுமே என்று குறை கூறினார்கள். கர்த்தர் அதை கேட்டார். ஆனால், மோசே அதற்கு எந்த பதிலும் சொல்லாமல் அமைதியாயிருந்தார் என்று பார்க்கிறோம். ஏற்கெனவே ஜனங்களுடைய கலகங்களினாலும், அவிசுவாசத்தினாலும் முரட்டாட்டத்தினாலும், அவர்களால் உண்டான பலவிதமான நெருக்கங்களினாலும் மோசே மிகவும் பக்குவமடைந்த, அமைதியான புருஷனாகவும் அவர் வளர்ச்சியடைந்த ஆத்தும நிலையுடையவராயுமிருந்தார்.

மோசே அமைதியாயிருந்தார் என்று பார்க்கிறோம். உடனே கர்த்தர் மோசேயையும், ஆரோனையும் மிரியாமையும் நோக்கி நீங்கள் மூன்று பேரும் ஆசரிப்புக் கூடாரத்துக்குப் புறப்பட்டு வாருங்கள் என்றார். மூன்று பேரும் போனார்கள். அப்பொழுது கர்த்தர் மேகத் தூணில் இறங்கி கூடார வாசலில் நின்று ஆரோனையும் மிரியாமையும் கூப்பிட்டார். அவர்கள் இருவரும் போனார்கள். அப்பொழுது அவர் என் வார்த்தையைக் கேளுங்கள். உங்களுக்குள்ளே ஒருவன் தீர்க்கதரிசியாயிருந்தால் கர்த்தராகிய நான் தரிசனத்திலே என்னை அவனுக்கு வெளிப்படுத்தி சொப்பனத்தில் அவனோடு பேசுவேன். என் தாசனாகிய மோசேயோ அப்படிப்பட்டவனல்ல. என் வீட்டில் எங்கும் அவன் உண்மையுள்ளவன். நான் அவனுடன் மறைமுகமாக அல்ல முகமுகமாய் பிரத்தியட்சமாய்ப் பேசுகிறேன். அவன் கர்த்தரின் சாயலைக் (Spirit Body) காண்கிறான். இப்படியிருக்க, நீங்கள் என் தாசனாகிய மோசேக்கு விரோதமாய்ப் பேச உங்களுக்குப் பயமில்லாமல் போனதென்ன என்றார். கர்த்தரின் கடுங்கோபம் அவர்கள் மேல் மூண்டது என்று எழுதப்பட்டுள்ளது.

(தொடரும்).

"இவர்கள் .. மகத்துவங்களை தூஷிக்க அஞ்சாதவர்கள்" 2 பேது. 2:10.

# விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன:

"விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன: என் நாமத்தினாலே பிசாசுகளை துரத்துவார்கள், நவமான பாஷைகளை பேசுவார்கள், சர்ப்பங்களை எடுப்பார்கள், சாவுக்கேதுவான யாதொன்றைக் குடித்தாலும் அது அவர்களைச் சேதப்படுத்தாது. வியாதிஸ்தர் மேல் கைகளை வைப்பார்கள் அவர்கள் சொஸ்தமாவார்கள்" என்றார் (மாற். 16:17-18).

இந்த வசனங்களின் அர்த்தத்தை சரியாக விளங்கிக் கொள்ளாமல், விசுவாசிகளாகிய அநேகர், பிசாசுகளை துரத்த முற்பட்டு, பிசாசினால் தாக்கப்பட்டவர்கள் உண்டு, வியாதிஸ்தர் மேல்கையை வைத்து அவர்களிடமிருந்து வியாதியை வாங்கிக் கொண்டவர்கள் உண்டு. இயேசுவை விசுவாசித்தால் இந்தக் கிரியைகளெல்லாம் செய்யலாம் என்று அநேக அரை குறை பிரசங்கிகளும் தூண்டி விட்டு மக்களைக் கெடுக்கிறானர். ஒரு வசனத்தை சரியாய் விளங்க மேலேயும், கீழேயும் சம்பந்தப்பட்ட மற்ற ஆகமங்களிலும் கவனிக்க வேண்டும்.

விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் (மாற். 16:16). ஒருவனை சீஷனாக்கி ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும், இயேசு என்னை இறைவனிடம் சேர்ப்பார் என்று அவரை விசுவாசித்து, அவரிடம், பிதாவிடம் சேரும் வழியைக் கற்றுக் கொள்ள தன்னை ஒப்புக் கொடுக்கிறவனே சீஷன். அவனே விசுவாசி அவனுக்குத்தான் ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும்.

ஒருவனை சீஷனாக்க முதலாவது அவனுக்கு சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க வேண்டும் (அப் 8:35;16:31,32). இயேசுவே அந்த சுவிசேஷம் (எபே. 3:8) அதை அவன் கேட்டு விசுவாசமுள்ளவனாகிறான். அவனுக்கு ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும்.

அப்போஸ்தலராகிய பதினொருவரும் போஜன பந்தி இருக்கையில் உயிர்த்தெழுந்த இயேசு அவர்களுக்கு தரிசனமாகி, நீங்கள் உலகமெங்கும் போய் சர்வ சிருஷ்டிகளுக்கும் சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள் என்று கட்டளையிட்டார் (மாற். 16:14). உயிர்த்தெழுந்த இயேசு தரிசனமானபோது, சிலர் சந்தேகப்பட்டார்கள் (மத். 28:17). அப்பொழுது இயேசு அவர்களை நோக்கி, வானத்திலும், பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் நீங்கள் (சந்தேகப்படாமல், விசுவாசத்துடன்) புறப்பட்டுப் போய் சுவிசேஷத்தை பிரசங்கித்து, சீஷராக்கி ஞானஸ்நானம் கொடுங்கள், உங்களுடன் இருந்து கிரியை செய்வேன் என்றார் [மத். 28:19,20].

இந்தக் கட்டளையை ஏற்று விசுவாசத்தோடே அவர் நாமத்தில் புறப்பட்டுச் செல்லுகிறவர்களால், நடக்கும் அடையாளங்களாவன அவர் நாமத்தினால் பிசாசுகளை துரத்துவார்கள், .... வியாதிஸ்தர் மேல் கைகளை வைப்பார்கள் அப்பொழுது அவர்கள் சொஸ்தமாவார்கள் [மாற். 16:17,18] என்றார். சீஷர்கள் அவரது கட்டளையை ஏற்று புறப்பட்டுப் போய், சொன்னபடி பிரசங்கம் பண்ணினார்கள். கர்த்தர் தாம் சொன்னபடி அவர்களுடனே கூட இருந்து, கிரியை நடப்பித்தார். மேலே சொல்லப்பட்ட அடையாளங்கள் நடந்தது. விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்க

ளாவன [மாற். 16:17,18] என்ற வசனம் உறுதிப்பட்டது (மாற். 16:20).

ஆகவே வசனத்தின் அர்த்தம் யாதெனில், கர்த்தரால் அனுப்பப்பட்டவர்கள் மூலம் நடக்கும் அடையாளங்களே அவைகள். விசுவாசிகள் எல்லாரும் நடத்தும் அடையாளங்கள் அல்ல அவை. சில இடங்களில் ஸ்திரீகளும் புருஷர்கள் தலையில் கை வைக்கிறார்களாம். இது தவறு.

ஆதாமுக்கு ஏழாம் தலை முறையான ஏனோக்கு தேவனோடு சஞ்சரிக்கிறவராயிருந்து, கர்த்தர் வருகையை தீர்க்கதரிசனமாய் முன்னறிவித்தார் [யூதா. 14,15]

ஆபிரகாம் ஒரு தீர்க்கதரிசி அவன் உனக்காக வேண்டுதல் செய்வான் [ஆதி. 20:7] என்று கர்த்தர் சொன்னார்.

சொப்பனங்களுக்கு அர்த்தம் சொல்லுதல் தேவனுக்குரியது, அவைகளை என்னிடம் சொல்லுங்கள் என்றார் யோசேப்பு (ஆதி. 40:8)

எகிப்திலிருந்து இஸ்ரவேலரை அழைத்துச் செல்ல கர்த்தர் மோசேயை அனுப்பினார், அவர் மூலம் பலத்த செய்கைகளை செய்தார். அவருக்குப் பின் யோசுவா வல்ல பெரிய காரியங்களை செய்தார்.

கிதியோன், சிம்சோன், சாமுவேல், தாவீது, சாலொமோன், தானியேல், ஏசாயா, எரேமியா, எலியா, எலிசா இப்படி ஜனத்தாரில் விசேஷித்த மனிதர்களைக் கொண்டு தான் தேவன் கிரியை செய்தார்; தமது வல்லமையை வெளிப்படுத்தினார். எல்லாரையும் கொண்டு தேவன் தீர்க்கதரிசனம் உரைக்க வில்லை, எல்லாரும் அற்புத அடையாளம் செய்யவில்லை, எல்லாரும் பெரிய காரியங்களைச் செய்யவில்லை.

தேவனால் ஞானஸ்நானம் கொடுக்கும்படி அனுப்பப்பட்ட யோவான் பாவ மன்னிப்புக்கென்று மனந்திரும்புதலுக்கேற்ற ஞானஸ்நானம் கொடுத்தார். இயேசுவுக்கு திரளான சீஷர்கள் இருந்தார்கள் (லூக். 6:13). அவர்களில் 12 பேரை தெரிந்து, அவர்களுக்கு அதிகாரம் கொடுத்து, கட்டளை கொடுத்து ஊழியம் செய்ய அனுப்பினார் (மத். 10:5-10). அது போதாதென்று, பின்னும் 70 பேர்களை தெரிந்தெடுத்து, அவர்களுக்கும் அதிகாரம் கொடுத்து, ஊழியம் செய்ய இரண்டிரண்டு பேராக அனுப்பினார்.

எல்லாருக்கும் கர்த்தர் அதிகாரம் கொடுக்கவில்லை. எல்லாரையும் அனுப்பவும் இல்லை. அனுப்பப்பட்டவர்கள் பிசாசுகளை துரத்தினர், வியாதியஸ்தர்களை சுகமாக்கினர், அற்புத அடையாளங்கள் பல செய்தனர், பரிசுத்த ஆவி ஊற்றப்பட்டபின், முதல் பிரசங்கத்தை பேதுரு நிகழ்த்தினார் (அப். 2:14). தேவாலய வாசலண்டை இருந்த சப்பாணியை அப்போஸ்தலனாகிய பேதுரு குணப்படுத்தினார் [அப். 3:1-13].

## பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro மகிபாலன் | Sis. பேரின்பராணி | களக்காடு | 30-6-93 |
| Bro. ஆபிரகாம் | Sis எஸ்தர் | கொடைக்கானல் | 31-8-93 |
| Pr டேவிட் | Sis. பிரிஸ்கில்லா | திருச்சி | 8-9-93 |

இயேசுவின் நாமத்தில் உம்முடைய ஊழியக்காரர், அற்புத அடையாளங்கள் நடத்தி, பிணியாளிகளை குணமாக்கி, உம்முடைய வசனத்தை முழு தைரியமாய் சொல்ல அநுக்கிரகித்தருளும்'' (அப். 4:30) என்று சபையார் ஊக்கமாய் ஜெபிக்க, தேவன் கேட்க, அந்த இடம் அசைய. இயேசுவின் உயிர்த்தெழுதலைக் குறித்து அப்போஸ்தர்கள் பலமாய் சாட்சி கொடுத்தார்கள் என்று எழுதியிருக்கிறது.

விசுவாசமும், பரிசுத்த ஆவியும் நிறைந்த ஊழியனாகிய ஸ்தேவான் பெரிய அற்புதங்களையும் அடையாளங்களையும் செய்தார் (அப். 8:6). சுவிசேஷகனாகிய பிலிப்பு அதிசயங்களைச் செய்தார் (அப். 8:6). யோப்பா பட்டணத்து தபீத்தாள் அம்மா இறந்த போது அங்கிருந்த சீஷர்கள் (விசுவாசிகள்) லித்தாவிலிருந்த பேதுருவை அழைத்து வந்து ஜெபிக்கச் சொல்ல, அவர் ஜெபிக்க தபீத்தாள் உயிரோடு எழுந்தார்கள் (அப். 9:36,37). அப். பவுல் முடவனை நடக்க வைத்தார் [அப். 14:9].

இந்தப் பிரகாரம் பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் கவனிக்கையில் அடையாளங்கள் அற்புதங்கள் நடத்தினவர்கள் விசேஷித்த தேவ மனிதர்களே, எல்லாரையும் தேவன் எல்லா காரியத்திற்கும் உபயோகிக்கவில்லை. அனுப்பப்பட்டவர்களும், ஊழிய அபிஷேகம் பெற்றவர்கள், கட்டளை பெற்றவர்களுமே விசேஷ கிரியைகள் நடப்பித்திருக்கிறார்கள். வேதாகம மாதிரியின்படி செய்யக் கவனமாயிருப்பது நல்லது.

ஒரு குடும்பத்தில் பலர் விசுவாசிகளாய் இருக்கலாம். அதிலே ஒருவர் வியாதிப்பட்டால் அவர் தலையில் மற்றவர் கை வைத்து ஜெபியுங்கள் என்று வேதம் மாதிரி காண்பிக்காமல், வேதம் சொல்லுகிறது ஒருவன் வியாதிப்பட்டால், சபையின் மூப்பன் வரவழைக்கப்பட வேண்டும். அவன் நீதிமான், அவன் விசுவாசமுள்ளவன், அவன் எலியாவைப் போன்ற ஒரு ஊழியன், அவன் கருத்தாய் ஜெபம் பண்ணுவான். சுகமுண்டாகும். இது தான் சத்தியம். அதன்படி செய்ய எச்சரிக்கையாக இருங்கள். நாம் திருச்சபையல்லவா திருச்சபையார் வசனத்தைக் கைக் கொள்ளவும்.

''அப்போஸ்தலருடைய கைகளினாலே அநேக அடையாளங்களும் அற்புதங்களும் ஜனங்களுக்குள்ளே செய்யப்பட்டது'' அப். 5:12.

## ஜெபம் பண்ணுங்கள்.

*யாருக்காக?*

உங்களுக்காக (1 நாளா. 4:10)
உங்கள் பிள்ளையின் நல் வாழ்வுக்காய் (ஆதி. 17:18)
உங்கள் மனைவிக்காய், புருஷனுக்காய் (ஆதி. 25:21)
பரிசுத்தவான்களுக்காய் (எபே. 6:18)
உங்கள் சிநேகிதருக்காய் (யோபு. 42:10)

உடன் சகோதரர்களுக்காய் ( 1 யோ. 5:16)
தேசத் தலைவர்களுக்காய் (1 தீமோ. 2:2)
எல்லா மனுஷர்களுக்காகவும் ஜெபம் பண்ணுங்கள் ( 1 தீமோ. 2:1).

*எதற்காக?*

உங்கள் நிந்தை நீங்க ( 1 சாமு. 1:10)
ஆசீர்வாதம் வேண்டி ( 1 நாளா. 4:10)
உங்கள் எல்லை பெரிதாக (1 நாளா. 4:10)
தீங்கு வராதிருக்க ( 1 நாளா 4:10)
நற்புத்தி உண்டாக (நீதி. 30:8)
தரித்திரம் வராமலிருக்க (நீதி. 30:8)
ஐசுவரியம் வேண்டாம் என்று (நீதி. 30:8)
தேவ பாதுகாவலுக்காக (எஸ்று 8:21).
உங்கள் எதிராளிக்கு விரோதமாக (2 இரா. 19:20)
ஞானம் உண்டாக (1 இரா. 3:7-9)
வேதமறிய (சங். 119:18)
விசுவாசம் பெருக (லூக். 17:5)
சமாதானம் நிலைக்க (சங். 122:6)
பாவம் நீங்க (மத். 6:12; சங். 51:7)
பரிசுத்தமாக (யோ. 17:17)
வியாதி நீங்க (எபே. 17:14)
எல்லாவற்றிற்காகவும் ஜெபம் பண்ணுங்கள் (பிலி. 4;6)

*எப்படி?*

விழித்திருந்து [மத். 26:41]
சோர்ந்து போகாமல் [லூக். 18:1]
கருத்தாய் [யாக். 5:17]
கவலையின்றி [பிலி. 4:6]
விசுவாசத்தோடே [யாக். 5:15]
ஊக்கமாய் [லூக். 22:44]
உறுதியாக [அப். 2:42]
உபவாசித்து [அப். 13:3]
உள்ளத்தை உடைத்து [சங். 51:17]
உள்ளத்தை ஊற்றி [1 சாமு. 1:15]
ஒரு மனப்பட்டு [அப். 4:24]
முழங்கால் படியிட்டு [அப். 20:36]
ஆவியினால் [எபே. 6:18]
ஜாக்கிரதையாய் ஜெபம் பண்ணுங்கள் [1 பேது. 4:7]

மேலும்

வார்த்தையைக் கொண்டு [ஓசி. 14:2]
வாக்குத்தத்தத்தைப் பிடித்து [ஆதி. 32:9,12]

ஸ்தோத்திர பலியிட்டு [கொலோ. 4:2]
பொருத்தனைகளை செலுத்தி [சங். 50:14,15]

*யாருடன்?*

தனித்து ஜெபம் பண்ணுங்கள் [மத். 14:23]
ஒருமித்து ஜெபம் பண்ணுங்கள் [அப். 12:12]

*எங்கே?*

தேவாலயத்தில் [2 நாளா 7:15]
வீட்டில் [அப. 10:30]
மேல் வீட்டில் [அப். 10:9]
ஆற்றங்கரையில் [அப். 16:13]
வனாந்தரத்தில் [லூக். 5: 16]
கடற்கரையில் [அப 20:36]

எல்லா இடங்களிலும் [தேவன் அனுமதித்த] ஜெபம் பண்ணுங்கள் [1 தீமோ. 2:8] [பொதுவான இடங்களில் அதிகாரம் பெற்ற ஊழியருடன் கூடி வர வேண்டும். இல்லையேல் அசுத்த ஆவிகளின் தாக்குதலுக்குள்ளாக வாய்ப்பு உண்டு].

*எப்பொழுது?*

காலையிலே [மாற் 1:35].
மாலையிலே [மத். 14:23]
மத்தியானத்திலே [சங். 55:17]
நடுராத்திரியிலே [அப். 16:25]
இராமுழுவதும் [லூக் 6:12]
இடைவிடாமல் [கொலோ. 4:2]
எப்பொழும் ஜெபம் பண்ணுங்கள் [லூக். 21:36]
ஜெபம் பண்ண விட்டால் பாவம் [1சாமு. 12,23].

"அவன் இப்பொழுது ஜெபம் பண்ணுகிறான்" அப். 9:11.

## நான், நாங்கள், நீங்கள்.

ஒரு பண்டாரம் ஒருவர் இருந்தார். சுற்றி சுற்றி வருவார். பின்னர் ஒட்டை அவர் அதிகாலை எழுந்து தெருக் குழாயில் எடுத்துக் கொண்டு ஒவ்வொரு வீட்டு குளிப்பார் பக்கத்தில் இருக்கிற கோவிலை முன்பும் கையேந்துவார். வயிறு நிறைந்த

வுடன் தெருவிலே கிடக்கிற பேப்பர்களை பொறுக்கிக் கொண்டு வருவார். தெரு விளக்கிலே அவைகளைப் படிப்பார். நேராக பிளாட் ஃபார்ம் (Plat form) ல் போய் படுத்துத் தூங்குவார். இது இவர் வழக்கம்.

இவர் ஒரு நாள் மத்தியான வேளை ஒரு மரத்தடியில் உள்ள திண்ணையில் உட்கார்ந்து இளைப்பாறிக் கொண்டிருந்தார். சுமார் 40 வயதுள்ள ஒருவர் பக்கத்தில் வந்து சோக முகத்தோடே உட்கார்ந்தார். பண்டாரத்திற்கு ஆவல் பொங்க, ஏன் தம்பி இப்படி கவலையாக இருக்கிறீர்கள் என்று கேட்டார். அவர் தன் உள்ளத்தில் நிறைந்திருந்ததை கொட்ட ஆரம்பித்தார். மின்சார கட்டணம் கட்ட வேண்டும், தண்ணீர் கட்டணம் கட்ட வேண்டும், வீட்டுவரி கட்ட வேண்டும் இவ்வளவு பணத்திற்கும் எங்கய்யா போவது என்றார்.

பண்டாரம் தன்னை பெரிய புத்திசாலி என்று நினைத்துக் கொண்டு, தம்பி, மின்சார கட்டணம் கட்ட வேண்டுவதே இல்லை, பாருங்கள் இந்த தெருவிளக்கு அணைவதே இல்லை. தண்ணீருக்கு போய் யாராவது பணம் கொடுப்பார்களா? பாருங்க இந்த குழாயில் எப்பொழுதும் தண்ணீர் வந்து கொண்டே இருக்கும். வீட்டு வரியா அது என்னத்திற்கு, யார் நாம் படுப்பதை தடை செய்ய முடியும் என்று அடுக்கி கொண்டே போனார்.

யோவ், பண்டாரம் ஒன்றும் தெரியாமல் பேசாதிரும் என்று விளக்கம் கொடுக்க ஆரம்பித்தார். பண்டாரம் எல்லாம் தெரிந்தவர் போல் கெக்கெக்கே என்று சிரிக்க ஆரம்பித்தார். குடும்பஸ்தனுக்கு கோபம் பொத்துக் கொண்டு வந்தது. அடக்கிக் கொண்டு, இவனுக்கு வீடு வாசல் என்று இருந்தால் தானே, மின்சார கட்டணம், தண்ணீர் கட்டணம் பற்றித் தெரியும். இவனிடம் போய் பேசினேனே என்று தன்னையே நொந்து கொண்டு எழுந்து போய் விட்டார்.

இந்த பண்டாரத்தைப் போல் இந்நாட்களில் அநேகர், சபை என்று ஒன்றும் கிடையாது, அப்போஸதலன் என்று கிடையாது, ஊழியர்கள் என்று கிடையாது, போதகர்கள், விசுவாசிகள் என்று வித்தியாசம் கிடையாது, எல்லாரும் ஒன்று தான் ஓட்டுநர் என்று கிடையாது, பிரயாணிகள் என்று கிடையாது, யாரும் பஸ்சை ஓட்டலாம், எங்காவது போய் முட்டி மோதிக் கொள்ளலாம் என்று எண்ணுகிற வர்களாக இருக்கிறார்கள்.

தேவன் ஒரு கூட்டம் ஜனத்தை புறஜாதிகளிலிருந்து இரட்சிக்க சித்தம் கொண்டார் [எபே. 3:3]. ஜன சமுதாயத்திலிருந்து அவர்களை முன் குறித்துத் தெரிந்து கொண்டார் அவர்களை தமது குமாரனுடைய சாயலுக்கு ஒப்பாக மாற்ற வேண்டும் என்று சித்தமுடையவராக இருந்தார் (ரோ. 8:29). உலகத்துக்கு பைத்தியமாக தோன்றுகிற பிரசங்கத்தினாலே விசுவாசிகளை இரட்சிக்க தேவனுக்குப் பிரியமாக இருந்தது [1 கொரி. 1:21]. இதைத் தேவன் இரகசிய திட்டமாக வைத்திருந்தார்.

முற்காலங்களில் மனு புத்திரருக்கு இதை அறிவிக்க வில்லை [எபே. 3:6]. காலங்கள் நிறைவேறின போது, இரகசிய திட்டத்தை நிறைவேற்ற பிரியங் கொண்டார். அதை ஒப்புவிக்க ஒரு மனிதனை நியமிக்கிறார் [1 தீமோ. 2:7] அவனுக்குத் தரிசனமாகிறார் [அப். 26:16]. அவனிடத்தில், விசுவாசிக்கிறவர்களை இரட்சிக்கத் தக்க பிரசங்கத்தை ஒப்புவிக்கிறார் [தீத். 1:4]. அந்த பிரசங்கம் சிலுவையில் அறையப்பட்ட கிறிஸ்துவே [1 கொரி. 1:23]. அது சுவிசேஷமாய் புறஜாதியாருக்கு தேவன் தெரிந்து கொண்ட மனிதன் மூலமாய் அறிவிக்க தேவனுக்கு பிரியமாயிற்று [கலா. 1:16].

அதற்காகவே தாம் தெரிந்து கொண்ட மனிதனை, பிரசங்கியாக அப்போஸ்தலனாக, விசுவாசத்தையும், சத்தியத்தையும் விளங்கப் பண்ணுகிற போதகனாக நியமிக்கிறார் [1 தீமோ. 2:7]. கட்டளைப் பெற்ற அப்போஸ்தலன் (அப். 13:47) சொல்கிறார்:

நான் அப்போஸ்தலன் 1 கொரி. 9:1

நான் சுயாதீனன் 1 கொரி. 9:1

நான் இயேசு கிறிஸ்துவை தரிசித்தேன் 1 கொரி. 9:1

நான் உங்களுக்கு ஒப்புவித்ததைக் கர்த்தரிடம் பெற்றுக் கொண்டேன் 1 கொரி11:2

நான் மனுஷன் மூலம் பெறவில்லை மனுஷனிடம் கற்க வில்லை

நான் கர்த்தராகிய இயேசுவிடம் பெற்ற ஊழியம் அப். 20:24

நான் கை வைத்ததினால் உனக்குண்டான தேவ வரம் 2 தீமோ. 1:6

நான் ஊழியக்காரனானேன் கொலோ 1:23

நான் தேவனுடைய சுவிசேஷ ஊழியத்தை நடத்தும் ஆசாரியன் ரோ 15:15

நான் பிரசங்கியாகவும், அப்போஸ்தலனாகவும் புறஜாதியாருக்கு போதகனாகவும் நியமிக்கப்பட்டேன் 2 தீமோ. 1:11

நான் உங்களுக்கு ஒப்புவித்ததைக் கர்த்தரிடம் பெற்றுக்கொண்டேன் 1 கொரி. 11:23

நான் உங்களை கிறிஸ்துவுக்கு ஒப்புக் கொடுக்க வைராக்கியம் கொண்டிருக்கிறேன் 1 கொரி. 11:2

நான் அவனை சாத்தானுக்கு ஒப்புக் கொடுக்கத்தீர்ப்புச் செய்கிறேன் 1 கொரி. 5:5.

நான் எதை மன்னித்திருக்கிறேனோ அதை கிறிஸ்துவின் சந்நிதானத்தில் மன்னித்திருக்கிறேன் 2 கொரி. 2:10

எனக்கு ஒப்புவிக்கப்பட்ட பிரசங்கம் தீத்து 1:4

இந்த இரகசியத்தை எனக்கு வெளிப் படுத்தினார் எபே. 3:3

இயேசு கிறிஸ்துவே எனக்கு வெளிப் படுத்தினார் கலா. 1.12

என் போதகம் 2 தீமோ. 3:10

ஊன்றக் கட்ட எனக்குக் கொடுத்த அதிகாரம் 2 கொரி. 13:10

எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிற ஆரோக்கியமான உபதேசம் 1 தீமோ. 1:11

சுவிசேஷமாய் அறிவிக்க கிறிஸ்துவை எனக்குள் வெளிப்படுத்த தேவன் பிரியமானார் கலா. 1:16

என்னை நியாயம் விசாரிக்கிறவர் கர்த்தர் 1 கொரி. 4:3

என்னை இந்த ஊழியத்திற்கு ஏற்படுத்தினார் 1 தீமோ. 1:12

தேவன் எனக்கு அளித்த கிருபை ரோ. 15:16

என்னை பின் பற்றுகிறவர்களாக இருங்கள் 1 கொரி. 11:1

எல்லாவற்றிலும் என்னை நினைத்துக் கொள்ளுங்கள் 1 கொரி. 11:2

என்னிடம் கற்று அடைந்து, கேட்டு கண்டு இருக்கிறவைகளெவைகளோ அவைகளையே செய்யுங்கள் பிலி. 4:9

## Who has authority to claim like this?

இப்படிச் சொல்லத்தக்க அதிகாரமுடையவன் யார்? அவனே அப்போஸ்தன். சேனை இருந்தால் தலைவன் உண்டு, சபை உண்டென்றால் அப்போஸ்தலன் உண்டு, அப்போஸ்தலன் உண்டென்றால் உபதேசம் உண்டு, உபதேசம் உண்டென்றால் பரிசுத்தம் உண்டு, பரிசுத்தம் உண்டென்றால் நித்திய ஜீவன் உண்டு [ரோ. 6:17-22].

இப்படிப்பட்ட அதிகாரத்தை உடைய அப்போஸ்தலனாகிய பவுல் முன்னறிந்து சொன்னார் "நான் போன பின்பு மந்

தையை [தேவனை தமது சுய இரத்தத்தினாலே சம்பாதித்த சபை] தப்பவிடாத கொடிய ஓநாய்கள் உங்களுக்குள்ளே வரும், உங்களிலும் சிலர் எழும்பி, சீஷர்களைத் தங்களிடம் இழுத்துக் கொள்ளும்படி மாறுபாடானவைகளைப் போதிப்பார்கள் [அப் 20:28-30]

அவர் சொன்னபடியே ஆயிற்று எங்கும் உபதேசக் குழப்பம். வீட்டுக்கு வீடு சபை சபைக்கு சபை மாறுபட்ட உபதேசம். மனுமக்களை இரட்சிக்க, தேவன் வெளிவித்த பிரசங்கம் எங்கே? சுவிசேஷம் எங்கே? வேறு ஒரு சுவிசேஷம் இல்லையே [கலா. 1:8; 2 கொரி. 11:4,5]

உபதேசக் குழப்பமிருந்தால் பரிசுத்தம் எப்படி உண்டாகும்? எக்காளம் ஊதப்படாமல் எவன் யுத்தத்துக்கு ஆயத்தமாவான்? எக்காளம் ஊதுகிறவனில்லாமல் எப்படி எக்காளம் தொனிக்கும்? அப்போஸ்தலன் இல்லாமல் எப்படி உபதேசம் வரும்? மறுபடியும் மக்களை உயிர்மீட்சி அடையப்பண்ணும் சுவிசேஷம் மறுபடியும் [இரண்டாம் விசை] தீர்க்கதரிசனமாய் அறிவிக்கப்பட வேண்டும் என்று வெளி 10:11ல் குறிப்பிடப்பட்டுள்ளது.

மெய்யான திருச்சபையில் அப்போஸ்தலன் உண்டு. வெளிப்படுத்தப்பட்ட உபதேசம் உண்டு. அதினால் பரிசுத்தம் உண்டு. ஆயத்தம் உண்டு. தேவ இரகசியம் நிறைவேறும்.

இயேசுவிடம் இந்த ஊழியத்தைப் பெற்ற அப்போஸ்தலனே, ஒருவராய் இந்த ஊழியத்தை நிறைவேற்ற முடியாதல்லவா? ஆனபடியினால் அவர் ஊழியக்காரர்களை ஏற்படுத்துகிறார் ( I had oppointed thee [Titus] தீத்து 1:5) அப்போஸ்தலனது கட்டளையின் படி பரிசுத்த ஆவியினால் பட்டணங்கள் தோறும் மூப்பர்கள் [கண்காணிகள்] உதவிக்காரர்கள் ஏற்படுத்தப்படுகிறார்கள் [அப் 20:17,28; தீத் 1:5; 1 தீமோ 3 அதி]

அப்போஸ்தலருக்கு வெளிப்படுத்தப்பட்ட பிரசங்கத்தினால் தேவபக்திக்கேதுவான சத்தியத்தை அறிகிற அறிவும், விசுவாசமும் தெரிந்து கொள்ளப்பட்டவர்களுக்கு உண்டாகும்படி, அப்போஸ்தலனால், உடன் ஊழியர்களால், மூப்பர்களான கண்காணிகளால் போதிக்க பரிசுத்த ஆவியானவர் ஒழுங்கு செய்கிறார் [தீத். 1:3-5; 2 தீமோ. 2:2]. இப்பொழுது தேவனுடைய ஸ்தானாதிபதிகளாய் ஊழியர்கள் [2 கொரி 5:20] ஒரு பக்கமும்; இவர்களுடைய ஆளுகைக்குள்ள சபையார் மறுபக்கமும் இருப்பதைக் காணலாம்.

நாங்கள் இயேசு கிறிஸ்துவினிமித்தம் உங்கள் ஊழியக்காரர்கள் [2 கொரி. 4:5]

நாங்கள் தேவனுக்கு உடன் வேலையாட்கள் நீங்கள் தேவனுடைய பண்ணை [1 கொரி. 3:9]

நாங்கள் கிறிஸ்துவின் ஊழியக்காரர்கள் [1 கொரி 4:1]

நாங்கள் தேவனுடைய இரகசியங்களின் உக்கிராணக்காரர் [1 கொரி 4:1]

ஒப்புரவாக்குதலின் ஊழியத்தை எங்களுக்கு ஒப்புக் கொடுத்தார் [2 கொரி. 5:18]

ஒப்புரவாக்குதலின் உபதேசத்தை எங்களிடத்தில் ஒப்புவித்தார் [2 கொரி. 5:19]

நாங்கள் புதிய உடன்படிக்கையின் ஊழியக்காரர் [2 கொரி. 3:6]

நாங்கள் உபத்திரவப்படுகிறோம் நீங்கள் ஆறுதல் அடைகிறீர்கள் [2 கொரி 1:6]

நாங்கள் உங்களுக்கு புத்தி சொல்லுகிறோம் [2 கொரி. 5:20]

ஊழியர்கள் விசுவாசிகளுக்கு மாதிரி [1 தீமோ 4:12]

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

மூப்பர்கள் மந்தைக்கு மாதிரி [1 பேது. 5:2,3]

உங்களை நடத்துகிறவர்கள் உங்கள் ஆத்துமாக்களுக்கு உத்திரவாதிகள் [எபி. 13:17]

நீங்கள் எங்கள் ஊழியத்தினால் உண்டாகிய கிறிஸ்துவின் நிருபமாயிருக்கிறீர்கள் [1 கொரி 3:3]

மரணமானது எங்களிடத்திலும் ஜீவனானது உங்களிடத்திலும் பெலன் செய்கிறது [2 கொரி. 4:12]

கிறிஸ்து உண்டென்றால் அவர் சரீரமான சபை உண்டு. சபை உண்டென்றால் அந்த சபைக்கு அப்போஸ்தலன் [ஊழியக்காரன்] உண்டு [கொலோ. 1:26] அப்போஸ்தலன் உண்டென்றால் பூரண உபதேசம் உண்டு [கொலோ. 1:25] உபதேசம் உண்டென்றால் போதிக்க ஊழியர்கள் உண்டு. ஊழியர்கள் உண்டென்றால் விசுவாசிகள் உண்டு [கொலோ. 1:1,2] மேய்ப்பர்கள் உண்டென்றால் மந்தை உண்டு.

இதுவே மெய்யான திருச்சபையின் லட்சணம். நாம் சபையாய் கிறிஸ்துவின் வருகைக்கு ஆயத்தப்படுவோமாக.

இதோ "புதிய எருசலேம் சபை"

"நான் இவர்களுக்காக வேண்டிக் கொள்கிறதுமல்லாமல் இவர்களுடைய வார்த்தையினால் என்னை விசுவாசிக்கிறவர்களுக்காகவும் வேண்டிக் கொள்கிறேன்"
யோ. 17:20.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   29 [வெள்ளி] அக்டோபர் 1993
   29 [திங்கள்] நவம்பர் 1993

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்

5. புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 113 - SEP/OCT '93



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிகையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 25:18; மாற்கு 16:15
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஞானஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்)
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப. 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப. 1:1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

வேதம் கிடைக்காத, தேவ வசனம் கிடைக்காத பஞ்சகாலம் வருமென்று தீர்க்க தரிசனத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதனுடைய அர்த்தம் என்னவென்றால் தேவ வசனம் கிடைக்கும், பைபிள் இருக்கும், ஆனால் வசனம் விளங்காது, வெளிப்படுத்தல் இருக்காது, வசனத்தினுடைய உண்மையான அர்த்தம் மக்களுக்கு தெரியாது. ஒருவன் இதை வாசி என்றால் எனக்குத் தெரியாது என்று சொல்வான் என்று ஏற்கனவே சத்தியத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இவ்விதமான காலம் நெருங்கிக்கொண்டிருக்கிறது. இப்பொழுதே அநேகருக்கு சத்திய வசனத்தினுடைய உண்மையான அர்த்தம் தெரியாமல் தங்களுடைய மனதின் படியும், தோற்றத்தின்படியும் அபிப்பிராயங்களையும், மனித விருப்பங்களையும் தெரிவித்துக் கொண்டு இருக்கிறார்கள், ஆனால் இந்தக் காலத்தில் தேவன் திருச்சபையை எழுப்பி, அதில் பரிசுத்தவான்களை நியமித்து, தம்முடைய வசனங்களை வெளிப்படுத்தி வருகிறார். தேசத்தில் பஞ்சமுண்டான பொழுது ஜனங்கள் எல்லோரும் பார்வோனை நோக்கி ஓலமிட்டார்கள். பார்வோன் என்னிடத்தில் நீங்கள் வருகிறதென்ன யோசேப்பினிடத்தில் போங்கள் என்று சொன்னான். அப்படியே, தேவனுடைய ஜனங்கள் தேவனுடைய வசனத்தின் உண்மையான அர்த்தத்தை அறியவும், வெளிப்படுத்தலையறியவும் ,தங்கள் வழிகளை அறியவும், கர்த்தருடைய சித்தத்தையறியவும் திருச்சபைய்யைத் தேடிவரும் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது "முன் நடந்ததே இனிமேலும் நடக்கும்" என்ற திரு வசனத்தின்படி கர்த்தருடைய தீர்க்க தரிசனங்கள் நிறைவடையப் போகின்றன ஆனபடியினால் தேவ ஜனங்கள் மிகவும் ஊக்கமாக கர்த்தரை விசுவாசிக்கவும். கர்த்தருடைய சபை கட்டும் பணியில் தீவிரிக்கவும் வேண்டும்.

இதோ கர்த்தர் வருகிறார்!

*கிறிஸ்துவுக்குள்*

**(CHIEF PASTOR N. LAZAR)**

(தொடர்ச்சி)

# கிறிஸ்தவ மார்க்கம்

16-ம் நூற்றுண்டின் ஆரம்பத்திலே
சிலோன் தீவைக் கட்டிக் கொண்ட
ஒலாந்தக்காரர் அநேக இந்துக்களை
ஞானஸ்நானப்படுத்தி கிறிஸ்தவர்களாக்கி
ஞர்கள். அக்காலத்தில் கர்த்தருடைய
ஜெபத்தின் பத்து கற்பனைகளையும் ஜெபம்
பண்ணுவதற்கு முன்னும் போஜனம்
பண்ணுகிறதற்கு முன்னும் பின்னும்
ஜெபங்களை படித்துக் கொண்டவர்கள்
ஞானஸ்நானம் பெற்ருர்கள். 1706-வது
வருஷத்தில் டென்மார்க் தேசத்தில் இருந்து
போதகன்மார்கள் தரங்கம்பாடியில் வந்து
இறங்கினுர்கள். 1644-ம் வருஷத்தில்
இங்கிலீஷ்காரர்கள் அமெரிக்கா கண்
டத்தை கிறிஸ்து மார்க்கத்துக்கு உட்படுத்த
பிரயத்தனம் பண்ணினுர்கள்.

1701-வது வருஷத்திலே அந்நிய
தேசத்தில் சுவிசேஷத்தைப் பிரசங்கம்
பண்ணும் சங்கம் இங்கிலாந்தில் ஸ்தாபிக்
கப்பட்டது. (Society of the Propaganda
of the Gospel in Foreign Parts) 1786-வது
வருஷத்திலே பாப்டிஸ்ட் சபையார் ஒரு
மிஷனை ஏற்படுத்தி பங்களா தேசத்துக்
குப் போதகர்களை அனுப்பினுர்கள் 1795
வது வருஷத்திலே லண்டனில் மிஷன்
சங்கம் ஏற்படுத்தபபட்டு இந்த சங்கத்தார்
முதன் முதலில் தென் சமுத்திர தீவுசளுக்கு
போதகர்களை அனுப்பினுர்கள். பின்பு
1804-வது வருஷத்திலே இந்து தேசத்திற்கும்
மூன்று வருஷத்திற்குப் பின்பு சீன தேசத்
துக்கும் போதகர்களை அனுப்பினுர்கள்.

நாம் முன்னமே சொன்னேம், 1706-வது
வருஷத்திலே டென்மார்க் தேசத்தைச்
சேர்ந்த இரண்டு போதகர்கள் தென்னிந்
தியாவின் கீழ்ப்பகுதியிலுள்ள தரங்கம்
பாடியில் வந்து இறங்கினுர்கள் என்று.
சர்ச் மிஷன்கள் சங்கம் 1814-வது வருஷத்
திலே ஸ்தாபிக்கபபட்டு ஆப்பிரிக்கா
கண்டத்திற்கும் இந்து தேசத்திற்கும்
போதகர்கள் அனுப்பப்பட்டார்கள். 1817
வது வருஷத்திலே வேருெரு மிஷனும்
ஸ்தாபிக்கப்பட்டு ஆப்பிரிக்கா கண்டத்
திற்கும் இந்து தேசத்திற்கும் போதகர்கள்
அனுப்பப் பட்டார்கள். ஸ்காச்சுமிசியோன்
சங்கத்தாரும் அமெரிக்கன் மிஷன் சங்கத்
தாரும் பல இடங்களில் போதகர்களை
அனுப்பி பள்ளிக்கூடங்களை ஸ்தாபித்தார்
கள். இந்த மிஷன்கள் எல்லாம் தர்ம
பணத்திலேலே நடத்தப்பட்டது. அரசாங்க
உதவி கிடையாது.

பரமண்டலத்திலிருந்து வந்த அப்
போஸ்தலனும், பிரதான ஆசாரியனுமாகிய
இயேசு கிறிஸ்து [எபி. 3:1] கட்டளையிட்ட
படியே திருச்சபையார் எத்தேசத்தாருக்கும்
சத்திய சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க
வேண்டியது அவர்களது கடமையாயிருக்கி
றது. [மத். 28:16-20] கிறிஸ்தவர்களுக்கு
தங்கள் மார்க்கத்தாலே நன்மை கிடைத்
திருக்குமானல் அந்த நன்மையை மற்றவர்
களுக்குக் கொடுப்பது நியாயமல்லவா?
பூமியின் இருளான இடங்கள் கொடுமை
யுள்ள குடியிருப்புகளால் நிறைந்திருக்கிறது
என்று [சங். 74:20] சொல்லியிருக்கிறது
போல கிறிஸ்தவ மார்க்கமாகிய சூரியன்
பிரகாசிக்காத இடங்களெல்லாம் விக்கிரக
ஆராதனையினுலும் அதனல் உண்டாகும்
எண்ணிறந்த தீமைகளினுலும் நிறைந்தி
ருக்கிறதே. உலகத்தார் இப்படிப்பட்ட
சீரில் அமிழ்ந்திருக்கும் போது அன்பின்
வேதத்தை உடையவர்களாகிய கிறிஸ்தவர்
கள் தங்கள் ஆண்டவருடைய கட்டளை
யை அலட்சியம் பண்ணி உலகத்தாருக்கு
தாங்கள் அடைந்த நன்மைகளை கொடா
மலிருப்பார்களா? கூடாதே.

அன்பிற்குமுண்டோ அடைக்குந்தா
ழார்வலர்
புண் கணீர் பூசல் தரும் [குறள்]

அன்பினால் ஏவப்பட்ட அப்போஸ்தலர்கள் எங்கும் போய் அநேக தடைகளிருந்தும் தைரியமாய் ஊக்கமுற்று சத்தியத்தைப் போதித்து ஆத்துமாக்களை பரகதி சேர்த்தார்கள். ஒரு விசை அப்போஸ்தலர்களை நோக்கி இயேசுவின் நாமத்தைக் குறித்துப் பரிச்சேதமாய்ப் பேசாமலும் போதியாமலும் இருக்க அவர்களுக்குக் கற்பித்த போது அவர்கள் நாங்கள் தேவனுக்குக் கீழ்ப்படிகிறதைப் பார்க்கிலும் உங்களுக்குக் கீழ்ப்படிவது நியாயமோ என்று நிதானித்துப் பாருங்கள் என்றார்கள் [அப். 4:18, 19]. கிறிஸ்தவர்கள் உலகத்திற்கு ஒளியும், பூமிக்கு சாரமுள்ள உப்புகளாயிருந்து தேவனின் வசனத்தை தங்கள் கைகளில் பிடித்திருக்கிறார்கள் [பிலி. 2:14] ஆகையால், அப். பவுல் தன்னை யாவருக்கும் கடனாளி என்று சொல்லி சுவிசேஷத்தை நான் பிரசங்கித்துவந்தும் மேன்மை பாராட்ட எனக்கு இடமில்லை, அது என் மேல் விழுந்த கடமையாயிருக்கிறது. சுவிசேஷத்தை நான் பிரசங்கியாதிருந்தால் எனக்கு ஐயோ என்று சொல்லுகிறார் (1 கொரி. 9:16).

மோரோசை சபியுங்கள் அதின் குடிகளை சபிக்கவே சபியுங்கள் என்று கர்த்தருடைய தூதனானவர் சொல்லுகிறார். அவர்கள் கர்த்தர் பட்சத்தில் துணை நிற்க வரவில்லையே பராக்கிரமசாலிகளுக்கு விரோதமாய் அவர்கள் கர்த்தர் பட்சத்தில் துணை நிற்கவரவில்லையே (நியா. 5:23).

ஒவ்வொரு கிறிஸ்தவனும் முந்தி கிறிஸ்துவின் ராஜ்யத்தைத் தேடி (மத். 6:33) கிறிஸ்துவின் ராஜ்யத்துக்கடுத்த வாக்குத்தத்தங்களை நம்பி, கர்த்தரை பிரஸ்தாபம் பண்ணுகிறதில் அமரிக்கையாயிராமல் இருதயத்தின் பரிபூரணத்திலிருந்து பேசி, உம்முடைய ராஜ்யம் வருவதாக என்றும் பூமியில் உம்முடைய வழியும், எல்லா ஜாதிகளுக்குள்ளும் உம்முடைய இரட்சணியமும் விளங்கும் படியாய் தேவரீர் எங்களுக்கு இரங்கி, எங்களை ஆசீர்வதித்து, உம்முடைய முகத்தை எங்கள் மேல் பிரகாசிக்கப்பண்ணும். தேவனே, ஜனங்கள் உம்மைத் துதிப்பார்களாக. சகல ஜனங்களும் உம்மை துதிப்பார்களாக என்றும் வேண்டிக் கொள்ள வேண்டியதே (சங். 67:1-3).

[தொடரும்.]

"அவர்கள் புறப்பட்டுப்போய், எங்கும் பிரசங்கம்பண்ணினார்கள். கர்த்தர் அவர்களுடனேகூடக் கிரியையை நடப்பித்து, அவர்களால் நடந்த அடையாளங்களினாலே வசனத்தை உறுதிப்படுத்தினார்" மாற். 16:20.

## சத்திய வேதம்

## சத்திய வேதம் அதிசய திவ்விய நூல்

[தொடர்ச்சி அடுத்தப் பக்கத்தில்]

## வேதாகமும அற்புதங்களும்

வேதாகமமே ஒரு அற்புத நூலாகும் அதினல். அற்புத தன்மையை குசுப்படுத்த வேண்டுமாயின் அதில் எழுதியுள்ள அற்புத கிரியைக் கவனித்தால் போதும். பழைய ஏற்பாட்டில் ஏறக்குறைய 50 அற்புதங்களைப் பற்றி படிக்கிறேம். சுவிசேஷ ஆகமங்களில், இயேசு கிறிஸ்து நாதர் ஆற்றிய 36 வல்ல செயல்கள் விசாரிக்கப்பட்டிருக்கின்றன. அப்போஸ்தல நடபடிகள் புஸ்தகத்தில் சில அற்புத கிரியைகளைக் குறித்து எழுதி யிருக்கிறது. இந்த அதிசய செயல்கள் விஷயமாய் மக்கள் மத்தியில் எழும்புகின்ற பல கேள்விகள் உண்டு. அவைகள் பெரும்பாலும் அற்புதம் என்றும் மதத்தைப் பற்றி தப்பறையான எண்ணங்களினல் உண்டாகின்றன.

### அற்புதம் என்ருல் என்ன?

Dr. ஜேம்ஸ் மர்க்கோஸ் என்னும் பெயருள்ள போதகர் கூறுவதாவது: மனுஷிக ஏதுக்களால் செய்யப்படாததும் தேவ வல்லமையால் தெய்விக நோக்கத்தோடு ஆற்றப்படும் செயலே அற்புதமாகும் என்பதே. இந்த வரையறையிலுள்ள வல்லமை, நோக்கம், ஏதுக்கள் என்கிற மூன்று முக்கிய பதங்கள் இதில் கையாளப்பட்டிருக்கின்றன.

1. அற்புதங்கள் தேவ வல்லமையால் சம்பவிக்கின்றன. மனிதரின் தந்திரத்தினலாவது, பிசாசின் சக்தியினலாவது உண்டாகிறது அற்புதமாகாது.

2. அற்புதங்கள் தெய்விக நோக்கமுடையவை: வேடிக்கைக்காவது, தேவனுடைய தன்மைக்கேற்காக வேறு நோக்கத்திற்காவது செய்யப்படுபவை அற்புதங்கள் ஆகாது.

3 அற்புதங்கள் மனிதரின் சக்திக்கும் முயற்சிக்கும் மிஞ்சின ஏதுக்களால் உண்டாகின்றன. அதாவது, மனிதர் ஆற்றக்கூடியது அற்புதமாகாது. அற்புத செயல்கள் இயற்கைப் பிரமாணங்களை மீறினவை எனச் சொல்லலாகாது. இருப்பினும் ஒருவன் ஏதோ ஒரு அற்புதம் சம்பவித்த வகை இன்னதென்று அறிந்தாலும் அச்செயல் அற்புதம் அல்லவென்று கூறலாகாது. அற்புதங்களில் இரு முக்கிய விசேஷங்கள் யாவை எனில் அவை தேவனது கிரியைகளாகவும்: மனிதன் கண்டுணரவும் வேண்டிய அடையாளங்களாகவும் இருக்கின்றன.

சத்திய வேதத்தின் மூலம் கடவுள் தம்மை மானிடரிடம் வெளிப்படுத்துவதோடு அவர்கள் விஷயமாய் உள்ள தம் சித்தம் இன்னதென அவர்களுக்குத் தெரிவித்தும் வருகிருர். இந்த திவ்விய நோக்கத்திற்கு அனுசரணையாக அவர் பல அற்புதங்களை நடப்பித்திருக்கிருர்.

எடுத்துக்காட்டாக, எகிப்து தேசத்தின் தெய்வங்கள் சக்தியற்ற விக்கிரகங்கள் என்றும், யேகோவா என்பவர் வல்ல கடவுள் என்றும் நிரூபித்துக் காட்டும் பொருட்டு அவர் அத்தேசத்தில் பல அற்புதங்களைச் செய்தார். நான் எகிப்து தேசத்தில் என் அடையாளங்களையும், அற்புதங்களையும் மிகுதியாய் நடப்பிப்பேன்; நானே கர்த்தர் என்று எகிப்தியர் அறிவார்கள் என்று கடவுள் உரைத்தார் (யாத். 7:3-5).

அவ்வாறே தேவன், இஸ்ரவேலரை வனந்திரத்தில் நடத்தின காலத்தில் விசுவாச மற்ற அவர்களுக்கு தம்முடைய வல்லமையை உணர்த்துமாறு மேக ஸ்தம்பம், மன்னு என்ற ஆகாரம், காடைகளின் மாம்சம் முதலியவற்றை அற்புதமாக அருளினர். இது விஷயமாய் கர்த்தராகிய நான் உங்கள் தேவன் என்றும் நீங்கள் அறிந்து கொள்ளும்படிக்கு நாற்பது வருஷம் உங்களை வனந்திரத்தில் நடத்தினேன் உங்கள் மேலிருந்த வஸ்திரம் பழையதாய்

போக வில்லை, உங்கள் கால்களிலிருந்த பாதரட்சை பழையதாய்ப் போகவுமில்லை என்று கடவுள் விளம்பினர் (உபா. 29:5). அது போலவே, பிலேயாமின் கழுதை பேசினதும், சூரியன் தரித்து நின்றதும், சுவரில் கையுறுப்பு காணப்பட்டு எழுதினதும் கோடரியானது தண்ணீரின் மேல் மிதந்ததும், ஒரு மச்சம் யோனாவை விழுங்கி உயிரோடு கக்கினதும் தேவ வல்லமையினாலும் திவ்விய நோக்கத்திற்கேற்றதாகவும், மனிதரால் இயலாததாகவும் இருக்கின்றன. மீண்டும் சில அற்புதங்கள் கடவுளை வெளிப்படுத்த மட்டுமல்ல, மக்கள் விஷயமாய் உள்ள அவரது திவ்விய நோக்கத்தை அவர்களுக்கு அறிவிக்கவும், நடத்தப்பட்டன. நேபுகாத்நேச்சார் அரசன் கண்ட சொப்பனத்தையும் அதின் அர்த்தத்தையும் தானியேல் தேவ வெளிபடுத்தலைக் கொண்டு கூறினது இவ்விஷயத்திற்கு, மிகவும் விசேஷித்த ஒரு உதாரணம். அக்கனவையும், அதின் உட்கருத்தையும் தானியேலுக்குத் தேவன் தெரிவித்தது தேவ செயலான அற்புதமே. அது மட்டுமல்லாமல் கடவுள் இவ்வுலகத்தின் வருங்கால சரித்திரத்தையும் வெளிப்படுத்தினர். அதற்கொப்பாக யோனா அனுபவித்த அற்புத உயிர் மீட்சியை நினிவே நகரத்தார் கேட்டு மனந்திரும்பும்படியான தூதாகவும் கிறிஸ்து நாதர் வந்த காலத்தில் ஜீவித்த யூதருக்கு எச்சரிப்பாகவும் இருந்ததோடு, கிறிஸ்துவின் மரணம், அடக்கம், உயிர்த்தெழுதல் ஆகிய இவைகளுக்கு முன்னடையாளமுமாய் இருந்தது மேலும் இயேசு கிறிஸ்து நாதர் அநேக அற்புதங்களை தேவ சித்தம் இன்தென்று அறிவிக்கும் பொருட்டு ஆற்றினர். சுவிசேஷ ஆகமங்களைக் கவனமாக ஆராய்ச்சி செய்வோமானால், கிறிஸ்துவின் அற்புதங்கள் அவரது வல்லமையையும், அதிகாரத்தையும் மட்டுமின்றி தேவன் இனிமேல் செய்யப் போகிறவைகளையும் போதிக்கக் கூடிய ஒப்பனைகள் என்றும் புலப்படும். வேதத்தில் கூறியுள்ள அற்புதங்களின் உண்மையை நீர் நம்ப ஐயப்பட்டால் சகல அற்புதங்களிலும் மகத்தானவைகளை கவனிப்பது நலம்.

திருஷ்டாந்தமாக, யூதஜனம் இந்நாள் மட்டும் காக்கப்பட்ட அற்புதம்; கிறிஸ்து நாதர் உயிர்த்தெழுந்த அற்புதம்; சத்திய வேத நூல் இத்தனை ஆயிரம் வருட காலம் நிலைத்திருக்கும் அற்புதம். இந்த மாபெரும் விஷயங்கள் மனிதரால் இயலாமல் தேவ செயலாகவே சம்பவித்தன என்றால் மற்ற சிறிய அற்புதங்களை நாம் நம்பாமல் எப்படி இருக்க முடியும்? அற்புதங்கள் இக்காலத்திலும் சம்பவிப்பதுண்டா? என்று ஒருவர் கேட்டால் ஆம். நடைபெற்று வருகிறது என்று வலியுறுத்திக் கூறலாம்.

என்னை விசுவாசிக்கிறவன் நான் செய்கிற கிரியைகளைத் தானும் செய்வான். இவைகளைப் பார்க்கிலும் பெரிய கிரியைகளை செய்வான் என்று இயேசு கிறிஸ்து நாதர் மொழிந்தார் (யோ. 14:12). இச்சொல் இக்காலத்திலும் நிறைவேறுகிறது. எப்படியெனில், அருள் நாதர் அக்காலத்தில் பாலஸ்தீன நாட்டில் மட்டும் கொஞ்சம் கொஞ்சமாக தமது திவ்விய இரட்சணிய செயலை நடப்பித்தார். இக்காலத்திலோ அவர் உலகமெங்கும் அவர் ஆவிக்குரிய வல்ல செயலை மிகுதியாக ஆற்றி வருகிறார். இதற்கு ஒரே உதாரணம் சொல்ல வேண்டுமென்றால் முடியாது. அநேக உதாரணம் சொல்ல வேண்டுமென்றால் எவ்வளவோ சொல்லலாம்.

கொரியா தேசத்தில் சத்திய வேத புஸ்தகங்களை விற்கும் ஒரு வியாபாரி, பிரதிகளை விற்கும் போது ஒரு நாள் சில மனிதர்கள் வந்து அவரது புத்தகங்களையெல்லாம் கிழித்து, யாலு என்னும் ஆற்றில் எறிந்து விட்டார்கள். அந்த கிறிஸ்தவ ஊழியன். இந்தப் புஸ்தகங்களின் பிரதி எங்கெங்கே போகின்றனவோ அங்கெல்லாம் கிறிஸ்தவ சபைகள் உண்டாகும் என்று தீர்க்கதரிசனமாய் சத்தமிட்டுக் கூறினர். கிழிக்கப்பட்ட பிரதிகளின் ஏடுகள் யாலு ஆற்றங்கரையில் பல இடங்களில் மிதந்து போய்ச் சேர்ந்தன. வட கொரியாவில் கிறிஸ்தவ சபைகள் முதன் முதலில் ஸ்தாபனமானது

அவ்விடங்களில் தான் இது சத்திய வேதத்தின் மூலம் உண்டான தற்கால அற்புதமல்லவா?

[தொடரும்.]

"என் வேதத்தின் மகத்துவங்களை அவர்களுக்கு எழுதிக் கொடுத்தேன்"
(ஓசி. 8:12.)

(தொடர்ச்சி)

# வேத பாடம்

### எண்ணாகமம்

மோசே சாதாரண ஒரு தீர்க்கதரிசி அல்ல, சாதாரண ஒரு மனிதனல்ல. மற்ற தீர்க்கததரிசிகள் போன்றவருமல்ல. அவர் தேவனுடைய மனிதன் தேவனுடைய சரீரத்தை (Spirit Body) அவர் கண்டிருக்கிறார். அவன் கர்த்தருடைய சாயலைக் காண்கிறான் என்று இறைவன் அவரைக் குறித்து சொல்லியிருக்கிறார். கர்த்தரைத் தரிசித்த கர்த்தரோடு நேரடி தொடர்புள்ள ஒரு தேவனுடைய மனிதன். அப்படியிருந்தும் தேவ பயமில்லாமல் அபிப்பிராயமும், குற்றமும் சொன்னதினிமித்தம் மிரியாமின் மேலும் ஆரோனின் மேலும் கர்த்தர் கோபங் கொண்டார். கர்த்தர் அவர்களை எச்சரித்து விட்டு போய் விட்டார் என்று இதன் மூலமாக அறிகிறோம்.

கடவுள் ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு தற்சுருபமாக செல்வதுண்டு என்று கண்டு கொள்கிறோம். ஆரோன் பார்க்கும்போது, மிரியாம் உறைந்த மழையின் பனிக்கட்டி போன்ற நிறமான குஷ்டரோகியாகி விட்டாள். ஆரோனின் மேல் கர்த்தருடைய அபிஷேக தைலம் இருந்ததினால் ஆரோனை அப்பொழுது கர்த்தர் கொல்லாமல் விட்டார். ஆனால் குற்றவாளிகள் மிரியாமும், ஆரோனும். இந்தக் கலகத்தில் மிரியாம் முன்னால் நின்று இந்தக் கலகத்தைச் செய்ததாகத் தெரிகிறது. ஏனென்றால் மிரியாமுடைய பெயர் முதலாவது வருகிறது (வச 1).

பரிசுத்தவான்களைப் பற்றித் தங்களுக்கு அடாத விஷயத்தில் தலையிட்டு தங்களுக்கு ஆக்கினையை வருவித்துக் கொள்கிறவர்கள் அநேகர் இருக்கிறார்கள். சிலர் யாரையும் கேள்விக் கேட்டு யாரையும் குறை சொல்லி தங்களை பெரிய ஆட்களாகக் காட்டிக் கொள்ள விருப்பம் இருக்கும். இது சாபத்துக்குரியதாகும். இவர்களைக் குறித்து அப். பேதுரு எழுதும் போது மகத்துவங்களை தூஷிக்க அஞ்சாத மிருகங்கள் என்று எழுதியிருக்கிறார். எனவே, நமக்குரிய காரியத்தை நாம் பார்ப்போமாக, பெரியவர்களுடைய காரியங்களை இறைவன் பார்த்துக் கொள்வார்.

மோசேயைக் குறித்து இறைவன் சொல்லும்போது உன்னைப் போன்ற ஒரு தீர்க்கதரிசியை நான் அவர்களுக்கு அவர்கள் சகோதரர் நடுவில் இருந்து எழும்பப் பண்ணுவேன் என்று சொன்னதாக நாம் பார்க்கிறோம் (உபா. 18:18). ஆனபடியால் மோசே தேவனுடைய மனிதன், தீர்க்கதரிசியைக் காட்டிலும் மிகவும் உயர்ந்தவராம். அப்பொழுது ஆரோன் மோசேயை நோக்கி ஆ! என் ஆண்டவனே! நாங்கள் புத்தி

யீனமாய்ச் செய்த இந்த பாவத்தை எங்கள் மீதுசுமத்தாதிரும் எங்களுக்கு மன்னியும் தன் தாயின் கர்ப்பத்தில் பாதி மாம்சம் அழுகி செத்து விழுந்த பிள்ளையைப் போல இவள் ஆகாதிருப்பாளாக என்றான் என்று எழுதப்பட்டிருக்கிறது. ஆரோன் மோசேயின் முன் பாவ அறிக்கை செய்தார். அநாவசியமான கலகம் உடனே தேவத் தண்டனையால் அடக்கப்பட்ட சம்பவத்தைப் பார்க்கிறோம் எண் 12:11,12.

மோசேயைக் குறித்து நாம் ஏற்கெனவே சாந்தகுணமுள்ள மனிதன் என்று பார்த்தோம் (வச 13). மோசே மிரியாமுக்காக ஜெபம் பண்ணுகிறார். நமக்கு விரோதமாக எழும்பிக் கலகம் செய்தவர்களாகிய அவர்கள் தண்டனையடையட்டும் என்று மோசே எண்ணாமல் அவளுக்காக இரங்கி ஜெபம் பண்ணுகிறார். மோசே அவர்களுடைய பாவத்தை மன்னித்து அவைகளை மறந்து விட்டு கடவுளிடத்தில் இரக்கத்திற்காக ஜெபம் பண்ணுகிறார். கர்த்தர் மோசேயினுடைய ஜெபத்தைக் கேட்டு அதற்கு மறு உத்தரவு கொடுத்து அவளை குணமாக்குவோம் என்று சொல்லுகிறார் (வச. 14,15).

தகப்பன் தன் மகளின் முகத்தில் காரி துப்பினால் ஏழு நாள் வெட்கப்பட வேண்டும். அவ்விதமாக ஏழுநாள் அவள் பாளயத்துக்குப் புறம்பே இருக்க வேண்டும் அவளை நான் சுகப்படுத்துவேன், அவளை பாளயத்திற்குள் சேர்த்துக் கொள்ளலாம் என்று கர்த்தர் தண்டனையைக் கட்டளையிட்டார். உலகத்தில் மிகவும் மோசமான வியாதி குஷ்டரோகமாகும். குஷ்டரோகத்தினுடைய பிரமாணங்கள் லேவி 13-ம் அதி. எழுதப்பட்டிருக்கிறது. வேதாகமத்தில் காணப்படுகிற முதலாவது குஷ்டரோகி மிரியாம் என்று தெரிகிறது. இது பாவத்திற்கு அடையாளமான காரியமாகும். மிரியாமினுடைய பாவத்தினிமித்தம் சாபம் உண்டாயிற்று. அதினிமித்தம் சபையினுடைய பிரயாணம் ஏழு நாள் தடைபட்டது. மிரியாமே கலகம் செய்யாதே.

இவ்விதமாக சிலருடைய பாவத்தினிமித்தம், சபையினுடைய வளர்ச்சி தடைப்பட்டு விடுவதுமுண்டு என்று நாம் அறிந்து கொள்கிறோம். மிரியாம் சேர்த்துக் கொள்ளப்பட்ட பின்பு அவர்கள் புறப்பட்டார்கள் (வச. 16). பின்பு ஜனங்கள் ஆஸ்ரோத்திலிருந்து புறப்பட்டு பாரான் வனாந்தரத்தில் பாளயமிறங்கினார்கள். ஏழு நாளில் கர்த்தர் குஷ்டரோகத்தை சுகமாக்கி, ஏழுநாள் கழித்து கர்த்தர் மிரியாமை சேர்த்துக் கொண்டார். தண்டித்து குணப்படுத்தினார். அதோடு கூட மோசேக்கு விரோதமாய் பொறாமைப்பட்டு கலகம் விளைவிக்கிற குணம் ஒழிந்தது.

(தொடரும்.)



"உன் ஜனத்தின் அதிபதியை தீது சொல்லாதே" யாத். 22:28.



# கடிந்து கொள்ளுங்கள், ஆனால் கடித்து பட்சிக்காதீர்கள்.

ஒரு போதகர் மிக மிக அன்புள்ளவர் என்று அவரைச் சேர்ந்த யாவரும் போற்றினார்கள். அப்படி அவர் என்ன தான் செய்கிறார் என்று கவனித்தால், அவர் ஒரு அருமையான உபதேசத்தைக் கைக் கொண்டதே அதன் காரணம். அது என்ன உபதேசமென்றால் "பரவாயில்லை" என்பதே. அது என்னய்யா பரவாயில்லை அதாவது நீ திருடுகிறாயா பரவாயில்லை, நீ வேசித்தனம் பண்ணுகிறாயா பரவாயில்லை, பீடி, சிகரெட் குடிக்கிறாயா பரவாயில்லை, சினிமாவுக்கு போகிறாயா பரவாயில்லை, என்ன செய்தாலும் பரவாயில்லை, நான் உனக்கு ஜெபம் பண்ணுவேன் என்பார். போதகருக்கும் ஐயோ, உபதேசத்தைக் கேட்கிறவர்களுக்கும் ஐயோ.

இன்னொரு போதகர் உண்டு, அவர் மிக மிக கண்டிப்பு, நின்றால் ஏன் நிற்கிறாய் என்பார் இருந்தால் உருப்படமாட்டாய் என்பார், நடந்தால் நடையைப் பார் என்பார், இப்படி எதற்கெடுத்தாலும் எரிந்து விழுவார். ஒரு சின்ன தவறு செய்தாலும் சரிதான், கடித்துப் பட்சிப்பார் கொஞ்ச நாளில் இவர் மட்டும் தான் சபையில் நிற்பார்.

ஒரு குருவானவர் அவர் மனைவி தவறு செய்த போது, கடிந்து கொண்டார். அதைப் பார்த்த ஒரு அம்மா, குருவானவர் இப்படி கடிந்து கொள்ளலாமா? என்று குற்றம் சாட்டுகிறாள். குருவானவர் சொன்னார் அன்பு செலுத்த வேண்டிய இடத்தில் அன்பு செலுத்த வேண்டும், அதிகாரம் செலுத்த வேண்டிய இடத்தில் அதிகாரம் செலுத்த வேண்டும். ஒரு சிறுவன் தீயில் கை வைக்கும் போது, கை வைக்காதே சுடும் என்று மெதுவாக சொல்வதில்லை, பட்டென்று கையை தள்ளி விடுவோம். அது தான் சரி.

ஆரோக்கிய உபதேசங்களை சபையாரிடம் பேசும் படி ஏற்படுத்தப்பட்ட தேவ ஊழியக்காரன், சபையார் உபதேசத்தை விட்டு மாறி நடக்கையில் அதிகாரத்தோடே கடிந்து கொள்ள வேண்டும், இல்லாவிட்டால் சபையார் ஊழியனை அசட்டை பண்ணுவார்கள் [தீத். 2:1,15]. புத்தியுள்ளவர்கள் சிலர் புத்தி கெட்ட காரியத்தைச் செய்கையில் வெடுக்கென்று கடிந்து கொண்டால், அவன் அறிவடைந்து தவறு செய்யமாட்டான் (நீதி 19:25).

ஒரு சகோதரன் ஒரு ஊழியரை சந்திக்க வந்தான். அவனோ முறைகேடான முறையில் ஒரு பெண்ணை நேசித்து வந்தான். ஆவியிலே எரிச்சல் அடைந்து அவனை மிக மிக மட்டரகமாக திட்டி, அதட்டி, மிரட்டி, கடிந்து கொண்டு, புத்தி சொல்லி, ஜெபித்து அனுப்பி வைத்தார். அந்நாள் முதல் அவனை பிடித்த அசுத்த ஆவி விலகி முறைகேடான உறவை துண்டித்து விட்டான். மிகவும் அவமானத்தோடே ஊழியரை விட்டுப் போனான்.

சில மாதங்களில் ஒரு நல்ல குடும்பப் பெண்ணை முறைப்படி திருமணம் செய்து, குடும்பமாய் சந்தோஷமாயிருக்கிறான். நீண்ட நாட்களுக்கு பின் ஊழியரை சந்தித்தபோது, இந்த ஆள் நம்மை அவமானப்படுத்தினாரே என்று பார்க்காமல், ஊழியரை கனப்படுத்துவான். முகஸ்துதி பேசுகிறவனைப் பார்க்கிலும் கடிந்து கொள்கிறவன் முடிவில் அங்கீகாரம் பெறுவான் (நீதி. 28:23) என்றபடியாயிற்று.

சிலர் ஆத்துமாக்களுடைய நிலையறியாது, தவறுகளை கண்டிக்கும்போது,

கடித்துப் பட்சித்து, அந்த ஆத்துமா சோர்ந்து பின் தங்கிப் போக செய்து விடுவர். ஆடுகளின் நிலமையை நன்றாய் அறிந்து (நீதி. 27:23) அதற்கேற்ப நடத்த வேண்டும் (ஏசா. 40:11) விசுவாசவளர்ச் சியில் குறைவுள்ளவர்களை சேர்த்துக் கொள்ள வேண்டும். அவர்களுடைய அறியாமைகள், குறைபாடுகளை குற்றமாய் நிர்ணயிக்கக்கூடாது (ரோ. 14:1).

சிலர் விதையைப் போட்டு விட்டு அடுத்த நாள் போய் பழத்தைத் தேடி இல்லாதிருப்பதைக் கண்டு, ஆத்திரம் அடைந்து, நிலத்தைக் கொத்தி விதையை சிதைத்துப் போடுவது போல இரண்டு பிரசங்கத்தைக் கேட்ட உடனே பெரிய விசுவாசியாகி, உடனே வசனத்தையெல்லாம் கைக்கொண்டு விடுவார்கள் என எதிர்பார்த்து, பேதைகளிடம் ஞானத்தைத் தேடி அவர்களுடைய பலவீனமான செய்கைகளை சகிக்க மாட்டாமல் கடிந்து, கடித்துப் பட்சித்து, பக்தி நெறி பக்கமே வராதபடி விரட்டி விடுவதுண்டு. இது தவறு.

கறவலாடுகளை மெதுவாக நடத்த வேண்டும். (ஏசா.40:11). கறவலாடுகளை ஒரு நாளாவது துரிதமாய் ஓட்டினால் மந்தையெல்லாம் மாண்டுபோம் (ஆதி. 33:13) சிலர் துரிதமாக ஆவிக்குரிய ஜீவியத்தில் முன்னேறுவர். சிலர் சத்தியத்தைக் கிரகித்து, அதைக் கைக்கொள்ள கொஞ்ச காலம் பிடிக்கும், அவர்களை துரிதப்படுத்தக் கூடாது. துரிதப்படுத்தினால் இடறிப் போவார்கள்.

ஒரு குடும்பத்தில் தகப்பனாரும், பிள்கள் இருவரும் மனந்திரும்பி ஞானஸ்நானம் பெற்றனர். மற்றவர்கள் இரட்சிக்கப்படவில்லை. அந்த வீட்டில் T V யில் சினிமா பாடல்கள் சில சமயம் ஓடும். இரட்சிக்கப்படாத பிள்ளைகள், அதைப் பார்த்து மகிழ்ந்தனர். விசுவாசத்தில் வளர விரும்புகிற அந்தக் குடும்பத் தலைவரிடம், உமக்கு அறிவிருக்கிறதா? T.V வைத்திருக்கக் கூடாது. என்பது சபையின் ஒழுங்கு, உமக்குத் தெரியாதா? உமக்கு ஞானஸ்நானம் கொடுத்ததே பாவம் என்று எடுத்த எடுப்பில் சொன்னால், அவர் திணறுவார், இரட்சிக்கப்படாத பிள்ளைகள் எதிர்ப்பார்கள், வீண் குழப்பம் உருவாகும்.

T.V யில் சினிமா பார்ப்பது தவறு இயேசு கிறிஸ்து அதில் பிரியப்படமாட்டார் ஜெபம் பண்ணுவோம், கர்த்தர் மாற்றுவார் என்று ஆலோசனை சொல்லப்பட்டது. சில நாட்களில் T.V ஆட்டம் குறைந்தது. அந்தக் குடும்பத்தில் பண நெருக்கடி உண்டானது. பெரியவர் ஜெபிக்கச் சொன்னார். பெரியவரிடம் T.V போன்ற தேவை இல்லாத பொருள் இருந்தால் விற்று கடனை கொடுக்கலாமே என்றதும், அவர் சிந்தித்து, T.V யை விற்று விட்டார். இவ்விதமாக அந்த வீட்டில் கேடு நீங்கிற்று. இப்படிப்பட்டவர்களை மெதுவாகத்தான் நடத்திச் செல்ல வேண்டும். இல்லையேல் ஒரே நாளில் மாண்டு போவார்கள்.

சிலர் மற்றவர்களுடைய குறைகளை சீர்ப்படுத்த வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் பேச ஆரம்பித்து, சாந்தத்தை இழந்து, சண்டை போட்டு சோதனைக்குள்ளாவதுண்டு. கர்த்தர் காண்பித்த வெளிப்பாடு! ஒரு பாத்திரத்தை சுத்தப்படுத்த ஊழியர் கையை வைத்துத் தேய்க்கிறார். பாத்திரத்தில் இருந்த பிசிறு கையை அறுத்து விட்டது. நாங்கள் சுத்தப்படுத்துகிறோம் என்று இரண்டு ஸ்திரீகள் கையை வேகமாய் வைத்து அழுத்தித் தேய்க்கவே பாத்திரத்தில் இருந்த பிசிறு ஆழமாக கையை வெட்டி பிளந்து விட்டது. இப்படிக்காண்பித்து கலா. 6:1 க்கு தேவன் விளக்கம் கொடுத்தார். சகோதரரே, ஒருவன் யாதொரு குற்றத்தில் அகப்பட்டால், ஆவிக்குரியவர்களாகிய நீங்கள் சாந்தமுள்ள ஆவியோடே அப்படிப் பட்டவனைச் சீர்பொருந்தப் பண்ணுங்கள். நீயும்

சோதிக்கப் படாதபடிக்கு உன்னைக் குறித்து எச்சரிக்கையாயிரு.

ஒருவனது குற்றத்தை எடுத்துச் சொல்ல, அவன் ஒரு பதில் வார்த்தை சொல்ல, அவன் இன்னும் நாலு வார்த்தைப் பேசி எரிச்சலைக் கிளப்ப, சோதனைக்குள்ளாகி சாந்தத்தை விட்டு நீ நாசமாய்ப் போ என்று சபித்து பாவம் செய்யாதபடி, பிசிறு உள்ள பாத்திரத்தை விளக்குகையில் கவனமாய் பொறுமையாய் விளக்கினால் சேதம் வராதது போல, சாந்தத்தை இழக்காமல், கடித்துப் பட்சியாமல் அன்பாய் கடிந்து, சகோதரனை சீர்படுத்துவது நல்லது.

கடிந்து கொள்ளலாம் கடித்துப்பட்சிக்கக் கூடாது.

---

சுதந்திரத்தை இறுமாப்பாய் ஆளுகிறவர்களாக அல்ல, மந்தைக்கு மாதிரிகளாகவும், கண்காணிப்பு செய்யுங்கள்" I பேதுரு 5:3.

---

# கர்த்தருடைய பட்சத்தில் இருக்கிறவர்கள் யார்?

ஒரு கால கட்டத்தில் அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் நடந்து கொண்டிருந்தது. அந்நாளில் ஆபிரகாம் லிங்கன் அமெரிக்க நாட்டின் ஜனாதிபதியாக இருந்து வந்தார். தேச பக்தியுள்ள மூதாட்டி ஒருத்தி தனது பிள்ளைகளுடன் அன்று ஜனாதிபதியை சந்திப்பதற்கு வந்திருந்தாள். அவள் ஆபிரகாம் லிங்கனை நோக்கி, "ஜனாதிபதி அவர்களே, இறைவன் நமது பக்கத்தில்(சார்பில்) இருப்பதால், நாம் இந்த போரில் வெற்றி பெற்றுவிடுவோம்," என்று கூறினாள் ஆபிரகாம் லிங்கன் அவளுக்கு மறுமொழியாக 'தாயே நீங்கள் சொல்லுகிறதுபோல இறைவன் நமது பக்கத்தில் இருக்கிறாரா என்று எனக்கு அவ்வளவாக தொரியாது; ஆனால் நாம் இறைவனுடைய பக்கத்தில் நின்று யுத்தம் செய்கிறபடியால் வெற்றி நம்முடையதே," என்று சொன்னார்.

இன்று நாம் சிந்திக்க வேண்டிய காரியம் இது தான். நம்முடைய வாழ்க்கையில் ஏற்படும் ஏற்றத் தாழ்வின்போது நாம் கர்த்தருடைய பட்சத்தில் இருக்கிறோமா, என்பதை ஆராய வேண்டும். யோகோவாகிய தேவன் தம்மை மோசேக்கு வெளிப்படுத்தினார். உடனே மோசே, தான் பார்வோனுடைய குமாரத்தியின் மகன் என்னப்படுவதை வெறுத்து, அநித்தியமான பாவ சந்தோஷங்களை அநுபவிப்பதை பார்க்கிலும், தேவனுடைய ஜனங்களோடே துன்பத்தை அநுபவிப்பதையே தெரிந்து கொண்டு, இனிவரும் பலன்மேல் நோக்கமாயிருந்து, எகிப்திலுள்ள பொக்கிஷங்களிலும் கிறிஸ்துவினிமித்தம் வரும் நிந்தையை அதிக பாக்கியமென்று எண்ணி, தேவனுடைய பட்சத்தில் நின்றான் என்று (எபி. 11 : 25, 26) வேதத்தில் காண்கிறோம்.

இன்னும் புதிய ஏற்பாட்டிலே ஆதி அப்போஸ்தலர்கள் காலத்தில் இருந்த சவுல் என்ற மனிதரைக் குறித்து வாசிக்கிறோம். அவர் எருசலேமிலிருந்த யூதர்களுடைய மூப்பர், வேதபாரகர் மற்றும் பிரதான ஆசாரியனிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு கிறிஸ்தவர்களை அழிக்கும்படியாக தமஸ்குவிற்குச் சென்று கொண்டிருந்தார். அப்பொழுது வழியில் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து அவருக்கு தரிசனமானார். உடனே அவர் மாம்சத்தோடும், இரத்தத்தோடும் (உறவினர்களோடு, மற்றவர்களோடு)

யோசனை பண்ணாமல், தேவனுக்கு கீழ்படிந்தார். மட்டுமல்ல, கிறிஸ்தவர்களோடு சேர்ந்து கொண்டு கிறிஸ்து, தேவனுடைய குமாரனென்று தாமதமின்றி ஆலயங்களிலே பிரசங்கித்தார். தான் பவுலாக ஆனவுடன், பிரதான ஆசாரியரையோ, வேத பாரகர்களையோ சார்ந்து கொள்ளாமல், தேவனுடைய பட்சத்தில்இருந்து. தேவஜனங்களைச் சார்ந்து கொண்டு தேவகாரியங்களை நடப்பித்தார் என்று நாம் அறிகிறோம்.

மாறாக மோவாபிய ராஜா பாலக் தனக்கு எதிராக பாளயமிறங்கியிருந்த இஸ்ரவேல் ஜனங்களை சபிக்க வேண்டும் என்று பிலேயம் என்ற தீர்க்கதரிசியை அழைக்க வந்தான். (எண் 22-ம் அதிகாரம்) பிலேயாம் என்பவன் தீர்க்கதரிசியாய் இருந்தும், தேவனுடைய சித்தத்தை அதாவது இஸ்ரவேலை ஆசிர்வதிப்பதே கர்த்தருக்கு பிரியம் என்று (எண் 24 : 1) அறிந்தும் அவன் கர்த்தருடைய பட்சத்தில் இருக்கவில்லை என்பதாக அவனைப் பற்றி வேதத்தின் மூலமாக அறிந்து கொள்கிறோம். அவனுடைய வழி கர்த்தருக்கு மாறுபாடாயிருந்ததினால், தேவனே அவனுக்கு எதிரியாகப் புறப்பட்டு வந்தார். (எண் 22 : 32). என்றாலும் பாலாக் ராஜா தனக்கு தரப்போகிற வெள்ளியையும், பொன்னையும் இன்னும் வெகுமதிகளையும், கனத்தையும் பெற்றுக் கொள்ளுவதிலே நோக்கமாயிருந்து, (பிலேயாம்) அவன் பொருளாசைக்கு இடம் கொடுத்தபடியால், தேவன் அவனுக்கு எதிராக உருவிய பட்டயத்தோடு நிற்பதையும் காணக்கூடாதபடிக்கு அவன் கண்கள் மறைக்கப்பட்டதையும், கழுதை பேசுகிறதே எவ்வாறு? என்று சிந்திப்பதற்கு முடியாதபடிக்கு அவனுடைய இருதயம் இருள் அடைந்து விட்டதையும் எண் : 22-ம் அதிகாரத்தில் வாசிக்கிறோம்.

அதுபோல கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் பன்னிரண்டு சீடர்களில் ஒருவனாக இருந்த யூதாஸ் காரியோத்தைப் பற்றி புதிய ஏற்பாட்டிலே காண்கிறோம். அவன் அழிந்து போகிற முப்பது வெள்ளிக் காசுக்காக ஆசைப்பட்டு தனது குருநாதரைக் காட்டிக் கொடுத்து, தேவ துரோகம் செய்தான். அவன் இயேசு நாதரோடு கூடவே இருந்தபோதும் உள்ளத்திலே முழுவதுமாக சாத்தானுக்கு இடம் கொடுத்தான். இவன் கர்த்தருடைய பட்சத்தில் இருக்கவில்லை.

ஆகவே தேவ ஜனங்களாகிய நாம் பொருளாசையாகிய விக்கிர ஆராதனையைக் குறித்து எச்சரிக்கையாக இருக்கவேண்டும். அதற்கு ஒருபோதும் இடங் கொடுக்கக் கூடாது. பின்னால் கூறப்பட்ட இரண்டு சம்பவங்களில் காணப்படுகிற இருவரும் (பிலேயாம், யூதாஸ்) தேவனுடை திட்டத்தை தெளிவாக அறிந்திருந்த போதிலும் அவர்கள் பொருளாசையில் விழுந்தபடியினால் கர்த்தருடைய பட்சத்தில் நிற்காமல், தங்களுடைய பதவிகளை, மேன்மைகளை இழந்து படுகுழியில் அழிந்து போனார்கள் என்று அறிகிறோம். "பொருளாசையானது, தன்னை உடையவர்களின் உயிரை வாங்கும்" என்று வேதம் எச்சரிக்கிறது.

அன்று இஸ்ரவேல் ஜனங்கள் பாவம் செய்து தேவனைக் கோபப்படுத்தியபோது மோசே என்னும் தேவனுடைய தாசன், கர்த்தருடைய பட்சத்தில் இருக்கிறவர்கள் யார்? அவர்கள் என்னிடத்தில் சேரக்கடவர்கள், என்று இஸ்ரவேல் ஜனங்களை அழைத்தார். (யாத். 32: 26,28) லேவியின் புத்திரர் மோசே சொன்னபடியே செய்து, தங்களை கர்த்தருக்கென்று பிரதிஷ்டை பண்ணினார்கள். அதுபோல, இன்று கெட்டுப்போய்க்கொண்டிருக்கிற (உலகத்திலிருந்து) கிறிஸ்தவ சமுதாயத்திலிருந்து தேவனுடைய மெய்யான திருச்சபை நம்மையும் அழைக்கிறது. நாம் கர்த்தருடைய பட்சத்தில் இருந்து, தேவனுக்கு நம்மை முழுவதுமாக ஒப்புக்கொடுத்து, தேவசித்தத்தை நிறைவேற்றுவோமாக!

ஊழியம் செய்கிறவன் ஊழியத்திலும்...தரித்திருக்கக்கடவன்.

சாட்சி·

# ஜீவ வழியைக் கண்டுகொண்டேன்

என் பெயர் ஆபிரகாம், மருத்துவராக சேலம் நகராட்சி சித்த மருத்துவ துறையில் பணி புரிந்து வருகிறேன்.

நான் ஓர் இந்து குடும்பத்தில் பிறந்தவன். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை அறியாதவன், என் வாழ்க்கையை பிதாவாகிய தேவனின் சித்தபடி வாழ தெரியாதவன் அந்த வாலிப நாட்களில்தான் உலக பிரகாரமான பொருளாசை, பண ஆசை, பெண்ணாசை உடையவனாய் குடித்தும், வெறித்தும் கெட்ட குமாரனைபோல் (லூக். 15,11,12) வாழ்ந்து, மதிமயங்கி மனைவி, மகனை பிரிந்து, தேவனுக்கும் மனிதர்க்கும் விரோதமான பாவம் செய்து, பண ஆசையை வேராக கொண்டு (1தீமோ. 6:10) விவாகரத்து செய்ய ஆயத்தமாகி, பித்தனை போல் மனம் கலங்கி இரவு நேரங்களில் தனியார் துறையிலும், பகலில் அரசாங்க துறையில் பணி புரிந்து உடலை வருத்தி மருத்துவ தொழிலை பிரதானமாக கொண்டு வாழ்வில் சமாதானம், சந்தோஷமின்றி என் வாழ்வில் உயர்வு இல்லையே பிறரை போன்று ஆடம்பர வாழ்வு வாழ முடியவில்லையே! இவ்வுலகில் ஜாதி, மத வேறுபாடு, உயர்வு, தாழ்வு, பட்டங்கள் பதவி பெற்றும் மனித சமுதாயத்தில் தகுதியற்ற நிலை, மாயமான அன்பு, ஆறுதல் அளிக்க, அரவணைக்க யாரும் இல்லா நிலையை எண்ணி நாள்தோறும் துக்கித்து, அழுது, புலம்பி பாவ ஜீவியத்திற்கு ஆளாகி இனி ஏன் உலகத்தில் வாழவேண்டும் என நிமிடத்திற்கு நிமிடம் சிந்தித்து மரணத்தை நெருங்கி கொண்டிருந்த நேரத்தில்:-

எனக்கு வயது 30 அன்றைய வரை கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஜீவனுள்ள தேவன் என்பதை அறியாத, உணராதபாவியாக வாழ்ந்த நாளில், பல்வேறு மதத்தின் தெய்வ நிலையினை ஆராய்ந்து "கிறிஸ்துவம்" தான் சிறந்தது என எண்ணி, "என் கால்கள் என்னை அறியாமல் தேவனாகிய கர்த்தருக்கு முன்பாக முழங்கால் மண்டியிட்டு கர்த்தரை தொழுது கொள்ள தொடங்கினேன். (ரோ: 14:11)

கர்த்தரை அறிந்தும் சத்தியத்தை அறியாமல், உணராது வாழ்ந்து கொண்டிருந்தேன், ஆனாலும் தேவனின் மேலுள்ள பற்றுதலினால் பசி, தாகம் நாளுக்கு நாள் அதிகரித்து சென்றன. தேவன் தாமே பாவியாகிய என் மீது வைத்துள்ள கிருபையினாலும், அளவற்ற இரக்கத்தின் நிமித்தமாக ஒவ்வொரு சபையாக அலைந்தும் நிம்மதி இல்லை.

ஓர் நாள் சேலத்திலுள்ள தனியார் மருத்துவமனையில் பணி புரிவதை விட்டுவிட வேண்டும் என்று முடிவு செய்து அங்கே சென்றபோது தேவனின் ஆதிகால அப்போஸ்தல ஊழியத்தின் அங்கமாகிய சேலம் புதிய எருசலேம் சபையின் போதகர் **PASTOR SAMUELRAJ** அவர்களை சந்திக்கவும், தேவனின் மெய் திருச்சபையை அறிந்து கொள்ளவும், தேவனாகிய கர்த்தர் கிருபை செய்தார். அதற்காக என் தேவனுக்கு நன்றி செலுத்துகிறேன். அந்நாட்கள் தொடங்கி தேவனாகிய கர்த்தர் இருளிலிருந்து என்னை. விடுதலையாக்கி ஒளியிலுள்ள பரிசுத்தவான்களுடைய சுதந்திரத்தில் பங்கடைய, தம் திருச்சபையின் மூலம் தகுதியுள்ளவன் ஆக்கினார். (கொ. 1:12).

நான் பரிசுத்தவான்களின் முன்னிலையில் முழங்கால் படியிட்டு பாவங்களை அறிக்கை செய்யவும், பின் மறைந்திருந்த பாவங்களை பரிசுத்தவான்களால் வெளிப்படுத்தப்பட்டு முற்றிலும் அறிக்கை செய்தேன். அதற்காக என் கர்த்தருக்கு நன்றி செலுத்துகிறேன். தேவனின் அளவற்ற இரக்கத்தையும், பாவ மன்னிப்பாகிய மீட்பை பெற்ற பின்புதான் தேவ ஆவியானவர் இறங்கி வல்லமையாய்

கிரியை செய்தார். அதற்காக என் தேவனுக்கு கோடி கோடி ஸ்தோத்திரம் செலுத்துகிறேன்.

2-1-91-ல் சேலத்தில் நடைபெற்ற ஞானஸ்நான கூட்டத்தில் ஞானஸ்நானம் பெற்று தேவ பிள்ளையாக மாற்றி என்னையும்,என் குடும்பத்தையும் திருச்சபையில் அங்கமாக இணைத்தார். இம்மாபெரும் கிருபைக்காக என் தேவனாகிய கர்தத‌ருக்கு ஸ்தோத்திரம் செலுத்துகிறேன்.

இவ்விதமாக இக் கடைசி நாட்களில் மெய்யான அவரது சரீர சபையை கண்டு கொள்ளவும், பாவமன்னிப்பாகிய மீட்பை பெறவும், ஆவிக்குரிய வாழ்வில் முன்னேறிச் செல்லவும், கர்த்தர் இந்த பாக்கியத்தை கொடுத்தமைக்கு நன்றி செலுத்தி என் சாட்சியை முடிக்கிறேன்.

கர்த்தருக்கு ஸ்தோத்திரம்!
கர்த்தருக்கு மகிமையுண்டாவதாக!

இவண்
கிறிஸ்துவுக்குள்
சகோ. ஆபிரகாம்
ஹவுஸிங் யூனிட் சேலம்- 8.

---

"அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை" அப். 4:12.

---

# ஊழியர்களாகும் அல்லது ஊழியர்களாக்கும் விதம்

இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் ஊழியம் என்ற பெயரில் அந்நாட்களிலும் நடந்தது. இந்த நாட்களிலும் நடக்கிறது. முன்பு நடந்ததே இப்பொழுதும் நடக்கும். கர்த்தரின் நாட்களில், ஒருவன் இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் பிசாசுகளை துரத்துகிற ஊழியம் செய்தான்.

அவனைக் குறித்து யோவான் அவரை நோக்கி போதகரே, நம்மைப் பின்பற்றாதவன் ஒருவன் உமது நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்துகிறதைக் கண்டோம், அவன் நம்மை பின்பற்றாதவனானதால் அவனைத் தடுத்தோம் என்றான். அதற்கு இயேசு: அவனைத் தடுக்க வேண்டாம். என் நாமத்தினாலே அற்புதஞ் செய்கிறவன் எளிதாய் என்னைக் குறித்து தீங்கு சொல்ல மாட்டான் நமக்கு விரோதமாயிராதவன் நமது பட்சத்திலிருக்கிறான் என்றார் (மாற்.9:38-40).

இவன் 12 அப்போஸ்தலர்கள் பிசாசுகளைத் துரத்த கட்டளைப் பெற்றது போலவோ, 70 சீஷர்கள் அதிகாரம் பெற்றது போலவோ அவன் பெறவில்லை. அவருடைய நாமத்திற்கு வல்லமை உண்டு இப்படியும் சிலர் ஊழியம் செய்கிறார்கள். பிற்காலத்தில் அவன் என்ன ஆனான் அவன் செய்த ஊழியம் என்ன ஆயிற்று என்று தெரியாது.

சிலர் எழும்பி இயேசுவின் நாமத்தில் தீர்க்கதரிசன ஊழியம் செய்யலாம் அதாவது வருகிற போகிறவர்களுக்கு குறி சொல்லிக் கொண்டிருக்கலாம். சிலர் எழும்பி அவர் நாமத்தில் பிசாசுகளை துரத்துகிற ஊழியம் செய்யலாம். சிலர் இயேசுவின் நாமத்தில் அற்புத அடையாளம் என்ற பெயரில் ஊழியங்கள் செய்து பலரை பிரமிக்க வைக்கலாம்

இவர்களுக்கு சத்தியத்தைப் பற்றி சத்தியத்திற்கு தூணும் ஆதாரமாக இருக்கிற சபையைப் பற்றி, பரிசுத்த வாழ்வைப் பற்றியோ கவலை கிடையாது. இவர்கள் இயேசுவின் நாமத்தில் ஊழியம் செய்வதாக சொல்கிறார்கள். ஆனால் இயேசுவுக்கு இவர்களை தெரியவே தெரியாது. அவரைப் பார்க்கவும் இல்லை, கட்டளை பெறவும் இல்லை. அந்நாட்களில் உங்

களை ஒருகாலும் அறியேன், அக்கிரமச் செய்கைக்காரரே என்னை விட்டு அகன்று போங்கள் என்று கர்த்தர் சொல்வார் (மத் 7:22,23).

சிலர் ஒரு ஊழியத்தைக் கண்டு பொறாமை கொண்டு அவருக்கு மட்டுந்தான் ஊழியம் செய்யத் தெரியுமா ? நானும் செய்வேன் என்று ஊழியம் செய்யப் புறப்படுகிறவர்கள் உண்டு (பிலி. 1:15).

சிலர் ஒரு நல்ல ஊழியம் நடக்கும் போது, விரோத மனப்பான்மை கொண்டு அதற்கு எதிரிடையாக பேசுவதையே பிரசங்கமாகக் கொண்டு ஊழியம் செய்கிவர்களும் உண்டு (பிலி. 1:16)

சிலர் இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் பிழைப்பைத் தேடி, ஊழியத்தில் இறங்கி பொருள் சம்பாதிக்க ஊழியம் செய்வார்கள். அவர்கள் தேவன் வழியில், பூமிக்குரிய காரியங்களையே பேசுவார்கள் சிந்திப்பார்கள் (பிலி. 3:18,19; 1 யோ. 4:5).

இப்படி பற்பல ஊழியங்களைச் செய்கிறவர்களுண்டு, தங்களையே ஊழியர்களாக்கிக் கொண்டவர்களுமுண்டு, அல்லது மனிதர்களால் ஊழியக்காரர்களாக்கப் பட்டவர்களுமுண்டு. இப்படிப்பட்ட ஊழியங்கள் நிலைநிற்பதில்லை. காலா காலங்களில் தோன்றி மறைந்து விடும். தேவ ஊழியர்கள் எப்படி எழும்பினார்கள், ஊழியர்கள் எப்படி ஏற்படுத்தப்படுகிறார்கள் என்று கருத்தாய் ஆராய்ந்து அந்த மாதிரியைப் பின் பற்றுவது நமக்கு ஏற்றது

உயிர்த்தெழுந்த கர்த்தர் முதலாவது கேபாவுக்குத் தரிசனமானார் (1கொரி. 15:5) என் ஆடுகளை மேய்ப்பாயாக, என் ஆட்டுக் குட்டிகளை மேய்ப்பாயாக (யோ. 21:15-17) என்று கட்டளை கொடுத்தார். ஆனபடியால்தான் விருத்தசேதனம் உள்ளவர்களுக்கு அப்போஸ்தலனயிருக்கும் படி பேதுருவை கர்த்தர் பலப்படுத்தி விருத்தசேதனம் உள்ளவர்களுக்கு சுவிசேஷத்தை பிரசங்கிக்கும் ஊழியத்தை பேதுருவுக்கு கர்த்தர் கையளித்தார். (கலா 2:7,8) என்று அப். பவுல் குறிப்பிடுகிறார். இயேசுவானவர் உயிர்த்தெழுந்த பின்னர் தாம் தெரிந்து கொண்ட அப்போஸ்தலருக்குக் கட்டளையிட்டார்.

நாற்பது நாளளவும் அவ்வப்போது தரிசனமாகி தேவனுடைய ராஜ்யத்திற்குரியவைகளை அவர்களுடனே பேசினர் (அப். 1.1-3). பின்னர் பவுலுக்கு தரிசனமானர் (1: கொரி 15:8). புற ஜாதியாருக்கு அப்போஸ்தலனக இருக்கும்படி அவரை பலப்படுத்தினர். விருத்தசேதனம் இல்லாதவர்களுக்கு பிரசங்கிக்கும் ஊழியத்தை கையளித்தார் (கலா 2.7-8). இயேசுவிடம் நேரடியாக ஊழியத்தையும் உபதேசத்தையும் பெற்றார் (1:3,4). உபதேசத்தில் ஏற்பட்ட சந்தேகங்களுக்கு கர்த்தர் விளக்கம் கொடுத்தார் (1 கொரி 11:23).

அவர் ஊழியத்தைப் பெற்று பரிசுத்த ஆவியால் அனுப்பப்பட்டு பர்னபாவுடன் சேர்ந்து ஊழியத்தில் இறங்கினர். யோவான் என்ற மாற்கு அவர்களுக்கு உதவிக்காரனயிருந்தார். (அப் 13:4,5) லிஸ்திரா தேசம் வந்தார்கள். அங்கே சகோதரராலே நற்சாட்சி பெற்ற சீஷன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் தீமோத்தேயு (அப் 16:1-2).

பவுல், தீமோத்தேயுவை ஊழியத்தில் சேர்த்துக் கொண்டார். பவுலுடன் உடன் ஊழியராக ஏற்படுத்தப்பட்டதாகத் தெரிகிறது (ரோம 16:21). பின்னர் மிகவும் முக்கிய பொறுப்புள்ள ஊழியராக உயர்த்தப்பட்டதாகத் தெரிகிறது (2 கொரி 1:19, பிலி 2:19,20). தீத்து (2 கொரி 7:15), சில்வான் (2 கொரி 1:19) போன்றவர்கள் பொறுப்புள்ள பதவிகளிலிருந்து ஊழியம் செய்தார்கள் என்று அறியலாம்.

சரி, ஊழியர்கள் எப்படி ஏற்பட வேண்டும், ஏற்படுத்தப்பட வேண்டும்? முதலாவது கர்த்தர் அப்போஸ்தலனை எழுப்ப வேண்

டும். அவர் சபைக்கு ஊழியராக்கபபட வேண்டும் (கொலோ 1:26). இரட்சிக்கப்படு கிறவர்களைக் கர்த்தர் சபையிலே அப்போஸ் தலரோடே கூட்டிச் சேர்க்கிறார் அப். 2:47, 1 யோவா 1:3).

இவர்களிலிருந்து உதவிக்காரர்கள் [Deacons] ஏற்படுத்தப்படவேண்டும். அவர்களுக்கு வேண்டிய தகுதிகள்.

a இரு நாக்கு உள்ளவர்களாக இருக்கக் கூடாது.

b மதுபானப் பிரியராக இருக்கக்கூடாது.

c இழிவான ஆதாயத்தை இச்சிக்கிறவர் களாக இருக்கக் கூடாது.

d நல்லொழுக்க முடையவர்களாக இருக்க வேண்டும்.

e விசுவாசத்தின் இரகசியத்தை சுத்த மனசாட்சியில் காத்துக் கொள்ளக் கூடியவர்களாக இருக்க வேண்டும்.

f ஒன்றிற்கு மேற்பட்ட மனைவிகள் இருக்கக் கூடாது.

g பிள்ளைகளையும், குடும்பத்தையும் நன் ருய் நடத்துகிறவர்களுமாக இருக்க வேண்டும்.

இப்படிப்பட்ட தகுதி உடையவர்கள் முதலாவது உதவிக்காரர்களாக ஏற்படுத் தபபட்டு ஊழியம் ஒப்புக் கொடுக்கப்படா மல், அவர்களுடைய நடபடிகள் சோதிக் கப்பட வேண்டும். [They are under probation] அவர்களிலே குற்றம் இல்லை எனக் கண்டால் உதவிக்காரருடைய ஊழி யத்தைச் செய்யலாம் [1 தீமோ 3:10].

First they must be proved, then let them use the office of a deacon being found blameless. [1 Tim 3:10].

அந்தபடியே [Likewise] கண்காணி கள் [Over seers] அல்லது மூப்பர்கள் கண காணிபபு ஊழியத்தை (Office of the Bishop) செய்கிறவர்கள் மூப்பர்கள் [Elders] என்று அழைக்கப்படுகிருர்கள் [1 தீமோ 3:1,2, தீத்து 1:5,7].

இந்த பிஷப்கள் அல்லது மேய்ப்பர்கள் அதாவது சபையை அந்தந்த இடங்களில் விசாரிக்கிறவர்களுக்கு [மேய்க்கிறவர்கள்] இருக்க வேண்டிய தகுதிகள்: [1 தீமோ. அதி. 3: தீத். 1:5-9, 1 பேது 5:1-4].

1. குற்றம் சாட்டப்படாதவனாக இருக்க வேண்டும். [Blameless]
2. ஒனறுக்கு மேற்பட்ட மனைவி இல்லா திருக்க வேண்டும். [Husband of one Wife)
3. ஜாக்கிரதை உடையவனாயிருக்க வேண்டும். [Vigilant]
4. தெளிந்த புத்திவேண்டும். [Sober]
5. யோக்கியதை வேண்டும். [Good behaviour]
6. அந்நியரை உபசரிக்கும் சுபாவம் வேண்டும்.
7. போதக சமர்த்தனாயிருக்க வேண்டும்: [Apt to teach]
8. மதுபானப் பிரியனாயிருக்கக் கூடாது.
9. உடன் ஊழியர்களை அடிக்கிற சுபா வம் கூடாது.
10. இழிவான ஆதாயத்தை இச்சிக்கும் சுபாவம் கூடாது.
11. பொறுமை வேண்டும். [Patience]
12. சண்டை பண்ணும் குணம் கூடாது. [Not a brawler]
13. பண ஆசை இருக்கக் கூடாது: [Not Covetous]
14. சொந்தக் குடும்பத்தை விசாரிக்கும் திறமை வேண்டும்.
15. பிள்ளைகளை ஒழுக்க சீலர்களாய் வளர்க்கத் தெரிய வேண்டும்.

16 தேர்ச்சி அடைந்தவனாக இருக்க வேண்டும் [Not a novice] [நூதன சீஷன் அதாவது [Still learning]

17 புறம்பானவர்களால் நற்சாட்சி பெற்றிருக்க வேண்டும்.

18. தன் இஷ்டப்படி செய்யாதவனாய் மேலதிகாரிகளின் உத்தரவு படி காரியத்தை செய்யத்தக்க கவனம் வேண்டும்.

19. முற்கோபியாக இருக்கக் கூடாது.

20. நல்லோர் மேல் பிரியமுள்ளவனாக இருக்க வேண்டும்.

21 நீதிமானாக இருக்க வேண்டும்.

22. பரிசுத்தவானாக இருக்க வேண்டும்.

23 இச்சையடக்கமுள்ளவனாக இருக்க வேண்டும்

24 ஆரோக்கியமான உபதேசத்தால் புத்தி சொல்ல வல்லமை பெற்றிருக்க வேண்டும்.

25 எதிர்ப்பேசுகிறவர்களை கண்டனம் பண்ண திறமை வேண்டும்.

26 போதிக்கப்பட்ட வசனத்தை நன்றாய் பற்றியிருக்க வேண்டும்

27. மந்தைக்கு மாதிரிகளாக இருக்க வேண்டும்.

சபையிலுள்ளவர்களில் இப்படித் தகுதியுடையவர்கள் உண்டானால் அவர்களை ஏற்படுத்தலாம் அவர்கள் மூப்பர்கள் என்றோ [Elders] அல்லது பிஷப் [Bishop] என்றோ, மேய்ப்பன் [Pastor], போதகன் [Teecher] என்றோ அழைக்கப்படலாம் [1 தீமோ 3:1,2, தீத்து 1:5-9; 1 பேது 5:1-4, எபே 4:13, அப் 20: 17,28]

இவர்கள் தேவனால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலனால் அல்லது அவரால்ஏற்படுத்தப்பட்ட உடன் ஊழியரால் ஏற்படுத்தப் பட வேண்டும் (தீத்1:5).

I left you in Crete that you should ordain elders in every city as I had appointed you (Titus 1:5).

ஓட்டுப் போட்டு ஏற்படுத்தப்படத்தக்கவர்களல்ல மேய்ப்பர்கள் [Bishops] தகுதி உடையவர்களா என்று பார்த்து பரிசுத்தஆவியின் உத்தரவுப்படி ஏற்படுத்தப்பட வேண்டும். அனபடியால்தான் அப்போஸ்தலனாகிய பவுல் சபையின் மூப்பர்களைக் கூட்டி(அப் 20:17), சபையை''மேய்ப்பதற்கு பரிசுத்த ஆவி உங்களை கண்காணிகளாக வைத்திருக்கிறார்'' என்று சொல்கிறார் (அப் 20:28).

இந்தப் பிரகாரம்தான் ஊழியர்கள் ஊழியத்திற்கு நியமனம் செய்யப்பட வேண்டும். இதுவே வேதம் காண்பிக்கிற மாதிரி. மற்றபடி யெல்லாம் தப்பான மாதிரி பெண்களை மூப்பத்தியாகவோ, மேய்ப்பத்தியாகவோ, அத்தியட்சியாகவோ ஏற்படுத்துகிறவர்கள் வேதத்தை தள்ளிப் போட்டவர்களேயொழிய வேறல்ல 1 தீமோ. 3:11-ல் சொல்லப்பட்ட ஸ்திரீகள் ஊழியர்களுடைய மனைவிகளாகும்.

### ஆங்கிலத்தில் வாசிக்கவும்

Even so must their wives be grave, not slanderers, sober faithful in all things 1 Tim. 3:11. கன்னியாஸ்திரீகளை வைப்பதற்கோ எந்த ஆதாரமும் கிடையாது. அது தவறு. இப்படிச் செய்கிறவர்கள் எல்லோரும் வீழ்ச்சியடைவார்கள் சாக்கு போக்கைத் தேடாதே சத்தியத்தைப்பார். ஒரு ஊழியக்காரனுக்கு இரண்டு ஸ்திரீகளை வைப்பதோ அல்லது ஸ்திரீகளை கூட்டிக் கொண்டு ஊழியம் என்று அலைவதோ வேத உபதேசமல்ல மனைவியோடு சேர்ந்து ஊழியம் செய்யலாம் 1 கொரி9:5.

# சிந்தித்துப் பார் செய்ய வேண்டியது இன்னதென்று அறிந்து சீக்கிரமாய் செய்:

ஒரு நாள் இரவு தூக்கம் என் கண்களுக்கு தூரமாயிருந்தது. சிந்தைகள் சிரசுக்கு மேல் சிலம்பாட்டம் பண்ணிக் கொண்டிருந்தன. அப்பொழுது ஒரு காட்சி என் கண் முன் தோன்றினது எனக்கு ஏறக்குறைய 20 வயது இருக்கும் காலத்தில் கண்ட பொங்கல் திருவிழா விளையாட்டு போட்டி என கண் முன் காணப்பட்டுக் கொண்டிருந்தது.

அதில் சிலம்பாட்டம், கோலாட்டம், கத்தியாட்டம் கண்ட காட்சிகள் என் கண் முன் தோன்றிக் கொண்டிருந்தன. வேடிக்கை பார்க்கிற ஜனக்கூட்டம் சூழ்ந்து நிற்க, வேடிக்கை காட்டுகிறவர்கள் நடுவிலிருக்க, மற்றொருவர் எல்லார் நடுவிலும் தலை நிமிர்ந்த வண்ணமாய் அமர்ந்து உட்கார்ந்து இருக்கிறார். அவர் தலை மேல் ஒரு முழு தேங்காய் கீழே விழாத வண்ணம் வைக்கப்பட்டிருக்கிறது. தேங்காய் கீழே விழாத படி தலை அசையாமல் வேடிக்கை பார்க்கிற ஜனங்கள் நடுவில் ஊமை போல வாயை மூடி அமர்ந்திருக்கிறார்

சில நிமிஷத்தில் மற்றொருவர் தன் வலது கையில் ஒரு தடித்த உருண்டை தடியை பிடித்து காலாட்டம், கோலாட்டம் ஆடிக்கொண்டு வருகிறார். ஆடிக் கொண்டு வந்து அமர்ந்திருக்கிறவரை இரண்டு சுற்று சுற்றி எதிரில் வந்து ஒரு விநாடி நின்று தொட்டும் தொடாததும் பட்டும் படாததுமாய் தலை மேலிருக்கும் அந்த தேங்காயை தன் கையிலிருக்கும் தடியால் அடித்து உடைத்தார். தேங்காய் இரண்டாய் பிளந்து சிதறுண்டது தேங்காய்க்குள் இருந்த தண்ணீர் அமர்ந்திருந்தவர் தலையை நனைத்தது

அதே போல் இன்னொரு காட்சி. இப்பொழுது வெள்ளரிக்காய் தலையின் மேல் வைக்கபபட்ட காட்சி மற்றொருவர் கூர்மையான வாள் கையில் பிடித்துக் கொண்டு கத்தியாட்டம் ஆடிக் கொண்டு வருகிறார். அதே போல காலாட்டம் ஆடிக் கொண்டு வந்து அமர்ந்திருக்கிறவர் மண்டையில் கத்தி படாமல் வெள்ளரிக்காயை இரண்டு துண்டாக வெட்டி விட்டு ஆடிக்கொண்டு திரும்பி விடுகிறார்

இப்படியாக காட்சிகளை பார்த்துக் கொண்டிருக்கையில் மகா முனிவர்கள், ரிஷிகள் நெற்றியில் வெள்ளை பட்டையும், குங்கும பொட்டும் வைத்துக் கொண்டு தவம் புரிய அமர்திருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருடைய தலைக்கு பினபாகத்தில் ஒவ்வொரு சர்ப்பமானது படம் விரித்து நிற்கிற காட்சி.

இப்படிப்பட்ட காட்சிகளின் விவரம் என்ன? சற்று சிந்தித்துப் பார்ப்போம்.

கஷ்ட தவம் புரிந்து பக்தியின் மூலம் முக்தியடையலாம் என்றெண்ணி முனிவராய் போனாலும், ரிஷிகளாயிருந்து கைலாசம் போகலாம் என்றிருந்தாலும், சன்மார்க்கராயிருந்தாலும், துன்மார்க்கராயிருந்தாலும், மேன் மக்களாயிருந்தாலும், கீழ் மக்களாயிருந்தாலும், ஐசுவரியவானாயிருந்தாலும், தரித்திரராயிருந்தாலும் கல்வி மான்களாயிருத்தாலும், பேதைகளாயிருந்தாலும், ஆணாயிருந்தாலும், பெண்ணாயிருந்தாலும் யாராயிருந்தாலும் என்ன ?

தெலுங்கில் ஒரு பழமொழியுண்டு:-
சேசின பாப்பம் கோகலோ பொட்டு கொனி காசிக்கி போந்தே கருமம் தீருனா ?

இதன் விளக்கம்- செயத பாவத்தையும் கருமத்தையும் மடியில் கட்டிக் கொண்டு காசிக்கு போனால் கருமம் அக்ரமம் தீருமா ?

தமிழில் ஒருவர் பாடிய பாடல் ஞாபகம் கம் வருகிறது. அல்லல் போம் வல்வினை போம் அன்னை வயிற்றில் பிறந்த தொல்லை போம் போகா துயரம் போம் எப்படிப்போம் ?

மனுக்குலத்தில் எல்லார் தலை மேலும் பாவம் என்கிற சர்ப்பம் படம் எடுத்து விஷம் என்னும் ரூபத்தை காட்டிக் கொண்டு நிற்கிறது.

தேங்காய் என்கிற இருதயக் கடினம் வெள்ளரிக்காய் போன்ற மாம்ச இச்சை தலை மேலிருக்கிறது.

அனேகர் சொல்லிக் கொள்கிறார்கள், எத்தனையோ சபைகளும் எழும்பிற்று, சபைகளை எழுப்பினவர்களும் இல்லை, சபைகளும் பாழாய் போய்விட்டது. இந்த 20-ம் நூற்றாண்டில் ஒரு புதிய சபை எழும்பியிருக்கிறது 'புதிய எருசலேம் சபையாம்' ஓ!! எத்தனை நாளைக்கு பார்ப்போம் என்கிறார்கள்.

கராத்தே படிக்க வேண்டுமாம். கண்டிப்பாக தேகாப்பியாசம் செய்ய வேண்டுமாம் ஆவிக்குரியவர்களுக்கு இது தேவையா ? தேவனுடைய சபைக்கு இது முக்கியமா ? என்று தவறான பிரச்னைகளை எழுப்புகிறார்கள்.

ஆம் இதை வாசிக்கும் அருமை சகோதரனே, சகோதரியே மனதை குழப்பிக் கொள்ளாதே சற்று சிந்துததுப் பார்.

(தொடரும்)

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   29 [வெள்ளி] அக்டோபர் 1993
   29 [திங்கள்] நவம்பர் 1993
   29 புதன் டிசம்பர் 1993
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 114 - NOV. '93



"புதிய [illegible] சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்று-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும் இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

நாவும் நெருப்புத் தான். அது அநீதி நிறைந்த உலகம் அது ஆயுள் சக்கரத்தை கொளுத்தி போடுகிறதாயுமிருக்கிறது. ஆயுளை நித்தியமாய் நிலைக் கச் செய்வதுமாயிருக்கிறது. இருதயத்தின் நிறைவினால் வாய் பேசும். இருத யமோ திருக்குள்ளதும், மகா கேடுள்ளதுமாயிருக்கிறது அதை அறியத்தக்கவன் யார்? மனிதனுடைய இருதயத்தில் மறைந்திருக்கிற தீமைகளை இறைவன் ஒருவரே சரியாய் அறிவார். அநேகருடைய இருதயம் பிரேதக் குழியைப் போலிருக்கிறது. இவ்விதமான மனிதன் இரட்சிக்கப்படவில்லை. திருக்குள்ள இருதயத்தை இறைவனிடம் ஒப்படைத்து விட்டு சுத்த இருதயத்தை என்னில் சிருஷ்டியும் என்று ஜெபம் செய்ய வேண்டும். அறிக்கை செய்து, அறிக்கை செய்து சுத்திகரிக்க வேண்டும். அப்பொழுது தான் தேவன் சுத்த இருதயத் தைத் தருவார். சுத்த இருதயம், உற்சாகமான ஆவி, நல் விருப்பங்கள், நற்சிந்தனைகள், நற்கிரியைகள், நல்லவைகளைப் பேசும் ஆவி தேவனிடத்தில் இருந்தே வருகிறது. மனிதன் வேஷமாகவே திரிகிறான். தேவ பக்தியின் வேஷத்தை தரித்து அதின் பலனை மறுதலிக்கிறவர்கள் இக்காலத்திலே கிறிஸ்த வர்கள் என்கிற போர்வைக்குள்ளாய் மறைந்திருக்கிறார்கள். தேவனுடைய ஜனங்களே, இவ்விதமான விஷமுள்ளவர்களை விட்டு விலகுங்கள். அப்படிப் பட்டவர்களை விட்டு விலகு என்று அப்போஸ்தலன் சொன்னார். எங்கே பரி சுத்தமுள்ளதோ, அங்கே வல்லமையுண்டு. எங்கே வல்லமையுண்டோ, அங்கே பிசாசின் கிரியைகள் அழிக்கப்படும். பரிசுத்தத்தை நாடு அல்லவென்றால் உன் இருதயம் முள்ளையும், குறுக்கையும் முளைப்பிக்கக் கூடியதாயிருக்கும். முடிவோ பரிதாபமாக முடியும். ஆனபடியால் ஜீவ வசனத்தைப் பிடித்துக் கொண்டு சுடர்களைப் போல பிரகாசிக்கிற தேவனுடைய பிள்ளைகள் பொல்லாத மாய் மாலக்காரர்களை விட்டு விலக வேண்டியதும், கள்ளத் தீர்க்கதரிசிகளை விட்டு விலக வேண்டியதும் மிக அவசியம். இவர்கள் நயவசனமான தங்கள் நாவு களால் முழுக் குடும்பத்தையும் கவிழ்த்துப் போடுகிறார்கள். ஆனபடியால் தேவ ஜனங்கள் தங்கள் இருதயத்தை பாதுகாத்து, தேவனிடம் ஒப்படைத்து, நன்மையைத் தேடுங்கள். மெய்வழியை உங்களுக்குப் போதிப்போம்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

கிறிஸ்தவ மார்க்கம் தெய்விக மார்க்கமாகையால் அது உலகமெங்கும் வேகமாய் பரவிவருகிறது. இந்நாட்களில் அதிகமாக உலகத்திலே வியாபித்து ஆட்கொண்டு வருகிறது. மற்ற மதங்களெல்லாம் மனிதனுடைய முயற்சியினாலும், பயிற்சியினாலும், அரசாங்க அலுவலகத்தினாலும் வளருகின்றது. இதுவோ தெய்வீகக் கிருபையினால் இறைவன் செயலாற்றுகிற மார்க்கமாயிருக்கிறது. கிறிஸ்தவமார்க்கத்தை வெறுக்கிறவர்களுடைய இருதயங்களிலும் இறைவன் பிரவேசித்து அவர்களை தன்னுடைய பக்தர்களாக மாற்றுகிறார்.

கிறிஸ்தவத்தினுடைய மேன்மை பெரிதாயிருக்கிறது. கிறிஸ்தவத்தின் மூலமாக மனுமக்கள் நாகரீகமடைந்து நற்கிரியைகளினால் நிறைந்து ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டி, உதவி செய்து அநேக நற்காரியங்களைச் செய்து வருகிறார்கள். மற்ற மதங்களெல்லாம் தத்துவங்களையும் பலவிதமான தந்திர மந்திரங்களையும் போதிக்கும் பொழுது கிறிஸ்தவமோ தத்துவங்களைச் சார்ந்தது அல்ல கிறிஸ்துவைச் சார்ந்து கிறிஸ்துவோடுகூட இறைவனோடு கூட மனிதன் ஐக்கியமாயிருக்கிறதற்கான வழியை போதிக்கிறது.

தேவனுக்கும் மனிதனுக்கும் நடுவில் பாவம் மனிதனை தேவனை விட்டு பிரிக்கிறது. மனிதன் நடுக்கடலில் புயலில் சிக்கிக் கொண்ட படகிலிருபவனைப் போலிருக்கிறான திக்குத் தெரியாமல், திசை தெரியாமல் அவன் சுழன்றுக் கொண்டிருக்கிறான். கிறிஸ்தவமோ மனிதனை தேவனிடத்தில் சேரும் வழியைக் காண்பிக்கிறது. முதலாவது பாவத்தை அகற்றுகிறது அதன் மூலமாக மனிதனுக்கும் தேவனுக்கும் தொடர்பு உண்டாகிறது.

மனிதன் தேவனோடு கூட ஐக்கியப்பட வழிதிறக்கப்படுகிறது. மற்ற எல்லா உயர்வுகளும் அதைத் தொடர்ந்தே மனிதனுக்குக் கிட்டுகின்றது. முடிவில் அவன் நித்திய பதவியை இறைவனோடு கூட வகிக்கும் முக்தியை அடைகிறான். அதற்கு முன் அனுபவமாக இங்கேயே அவனுக்கு மெய்சமாதானமும், சந்தோசமும், தேவனோடு ஐக்கியமும், பிறமனிதர்களோடு நியாயமான ஐக்கியமும் அவனுக்கு கிட்டுகிறது. அவனுடைய வாழ்க்கையிலே அமைதி உண்டாகிறது.

கிறிஸ்தவ மதம் என்று சொல்லப்படுகிறது வெறும் தத்துவமல்ல, அது இறைவனோடு கூட எல்லா தரத்திலுமுள்ள, எல்லா நிலைகளிலுமுள்ள, எல்லா ஸ்திதியிலுள்ள மனிதர்களுக்கும் தேவனைக் கண்டு கொள்ளும்படி உள்ள இலேசான வழியாக, விசுவாச மார்க்கமாக அது இருக்கிறது. மற்ற மார்க்கங்களெல்லாம் கிரியா மார்க்கமாக இருக்கிறது. இதுவோ விசுவாசமார்க்கமாகக் காணப்படுகிறது கிறிஸ்தவத்தினுடைய மேன்மை வருங்காலங்களில் மிகவும் அதிகமாகத் தோன்றும். இப்பொழுது இருக்கிறதைவிட மிகவும் அதிகமாக மக்கள் கிறிஸ்துவைத் தேடும் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது.

கிறிஸ்தவத்தில் காணப்படுகிற பிரதான உபதேசங்களை காண்போமாக:-

**FAITH TEST:** 1. கிறிஸ்து நாதரின் புண்ணிய பலன்களை பெற்றுக் கொள்ளுகிற வகை விசுவாசம் என்னப்படும். திருஷ்டாந்தரமாக கிறிஸ்தவத்தில்; "தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை அடையும் படி அவரைத் தந்தருளி இவ்வளவாய் தேவன் உலகத்தில் அன்பு கூர்ந்தார்"

என்றும், "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் எவனோ அவன் இரட்சிக்கப்படுவான். விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான்" என்றும் இயேசுவானவர் சொன்னார் யோ. 3:16; மாற். 16:16.

சிறைச்சாலைக்காரன் பவுலை நோக்கி இரட்சிக்கப்படுவதற்கு நான் என்ன செய்ய வேண்டுமென்று கேட்டபோது, அப்.பவுல் சொன்னது "கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்" என்றார் அப். 16:30,31. குமாரனிடத்தில் விசுவாசமுள்ளவனாயிருக்கிறவன் நித்திய ஜீவனை உடையவனாயிருக்கிறான். குமாரனை விசுவாசியாதவனோ ஜீவனைக் காண்பதில்லை என்றும் அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாக தீர்க்கப்படான் என்றும் யோவான் எழுதினார்.

வேதம் முழுவதிலேயும் நம்மை இரட்சிக்கும் பிரதானமான கருவி விசுவாசம் என்று சொல்லப்பட்டுள்ளது—ஏசா. 28:16, 41:22; யோ. 6:40.

2. விசுவாசமானது இத்தனை பெரிய கிரியையானபடியினாலே அதின் தன்மையை நன்றாய் அறிய வேண்டும் விசுவாசம் என்பதற்கு அன்புள்ள நம்பிக்கை என்றும், ஏற்றுக் கொள்ளுதல் என்றும், அங்கீகரித்தல் என்றும் அர்த்தமாகும் ஆதலால் அது கிறிஸ்து தேவன் உண்டென்று மாத்திரம் நம்புகிறதல்ல. நம்புகிறதாவதென்றால் அந்த நம்பிக்கை பிசாசுகளுக்கும் உண்டே யாக். 2:19.

அற்புதங்களைச் செய்வதற்கேதுவான நம்பிக்கையாய் இருக்குமென்றால் அது கெட்டுப்போன யூதாஸ் காரியோத் முதலானவர்களுக்கும் உண்டாயிருந்ததே மத். 7:22. கிறிஸ்துவினுடைய சரித்திரம் மெய்யென்றுமாத்திரம் நம்புகிறதாயிருக்கிறதென்றால் அது துன்மார்க்கத்தில் நடக்கிற அநேகருக்குமுண்டே, கிறிஸ்து மார்க்கத்தின் நடபடிகளில் ஞானஸ்நானம் முதலான சடங்குகளைப் பெற்று இரட்சிக்கப்படலாமென்று எண்ணுகிறதாயிருந்தால் அது பாவத்தை விட்டு ஓயாத அநேக பெயர் கிறிஸ்தவர்களுக்குமுண்டே.

கிறிஸ்தவ மார்க்கத்தையும், மற்ற மார்க்கத்தையும் ஒத்துப்பார்த்து எல்லாவற்றிலும் கிறிஸ்தவ மார்க்கம் நல்லதும் பயனுள்ளதும் என்று மாத்திரம் எண்ணுகிறதாயிருந்தால் அது உலக நடக்கையைப் பற்றிக் கொள்ளுகிற அநேக பேருக்கும் இவ்விதமான எண்ணம் உண்டே. கிறிஸ்தவமார்க்கத்தில் நடந்தால் சந்தோஷமாயிருக்கலாம், மோட்சத்தை அடையலாம் என்று மாத்திரம் எண்ணுகிறதாயிருந்தால் அது கெட்ட இச்சைகளின்படி நடக்கிற அநேகருக்குமுண்டே.

இரக்கத்தை பெறும்படிக்கு தர்மங்களைச் செய்து அவைகளை கிறிஸ்து பூரணப்படுத்தி இரட்சிப்பார் என்று எண்ணுவாரென்றால் அது அவருடைய புண்ணிய பலன்கள் போதாதென்று எண்ணுவதாயிருக்குமே நடக்கையினால் காட்ட வேண்டியதில்லை. உள்ளத்தில் மாத்திரம் பற்றிக் கொள்ளுகிற நம்பிக்கையாய் மாத்திரம் இருக்குமென்றால் அது பிறருக்கு அஞ்சி உலக வழக்கத்தின்படி நடக்கிற அநேகருக்கும் உண்டே.

கர்த்தாவே! கர்த்தாவே!! இயேசுவே! இயேசுவே!! என்று கூப்பிடுகிறதாயிருக்குமென்றால் அது குடிகாரனுக்கும் உலகத்தினுடைய புகழ்ச்சியை விரும்புகிறவனுக்கும் உண்டே. இவ்வகை நம்பிக்கை மனிதனை இரட்சிக்கமாட்டாது.

மெய்யான விசுவாசமானது தன் துர் எண்ணத்தையும் கெட்ட நடக்கைகளையும் வெறுத்து தேவனுடைய கிருபையை முற்றிலுமாய் விரும்பி அதை பெறுகிற

தாகு தன்னிடத்தில் வகையொன்றையும் காணாமல் அதை இயேசுவினிடத்தில் கண்டு அவருக்குள் ஐக்கியமாகி பரிசுத்த மனத்தோடு அவரைப் பின்பற்ற விரும்பி இருதயத்தில் உண்டாகிற பக்தியினாலே கிருபையடைந்த பாவி கிறிஸ்துவின் மரணம் முதலான புண்ணிய பலன்கள் எல்லாவற்றையும் தன் வசமாக்கிக் கொண்டு பாவமன்னிப்பையும், பரிசுத்தத்தையும், ஜீவனையும் அடையும்படி தன்னுடைய நீதியை எவ்வளவேனும் நம்பாமல் தேவனுடைய கைமாறு இல்லாத கிருபையினால் உண்டாயிருக்கிற கிறிஸ்துவை மாத்திரம் முற்றிலுமாய் நம்பி அவரை தரித்துக் கொண்டு, அவருக்காக விடவேண்டிய யாவற்றையும் விட்டு அவரோடு ஐக்கியமாய் பிழைத்து தன்னை அவருக்கு ஒப்புக்கொடுத்து பரிசுத்தத்தில் அவருக்கு பின் சென்று பாவத்தையும், உலகத்தையும், பிசாசையும் ஜெயித்து தேவ அன்பினாலேயே நற்கிரியைகளை செய்து வருகிறான்.

திருஷ்டாந்தரமாக பவுல் அப்போஸ்தலன் மோசேயின் பிரமாணத்தைக்கைக் கொள்ளுவதில் மிகவும் உண்மையுள்ளவராயும், அதிலே எல்லாரிலேயும் அதிக நன்னடத்தையுள்ளவராயும், கனம் பொருந்தினவராயிருந்தும், கிறிஸ்துவை அறிந்த பின்பு சொன்னதென்னவென்றால் "எனக்கு லாபமாயிருந்தவைகளெவைகளோ அவைகளை கிறிஸ்துவுக்காக நஷ்டமென்று எண்ணினேன். அதுமாத்திரமல்ல என் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்ணிக் கொண்டிருக்கிறேன். நான் கிறிஸ்துவை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்கும், நியாயப் பிரமாணத்தில் வருகிற நீதியை உடையவனாயிராமல் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினால் வருகிறதும், விசுவாசம் மூலமாய் தேவனால் உண்டாயிருக்கிறதுமான நீதியை உடையவனாயிருந்து கிறிஸ்துவுக்குள் இருக்கிறவனென்று காணப்படும்படிக்கு எல்லாவற்றையும் குப்பையாக எண்ணுகிறேன் என்றார் (பிலி. 3:7,9,11).

கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையில் அறையப்பட்டேன்; ஆயினும் பிழைத்திருக்கிறேன்; இனி நானல்ல கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்; நான் இப்பொழுது மாம்சத்தில் பிழைத்திருப்பதோ என்னில் அன்பு கூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்த தேவனுடைய குமாரனைப் பற்றும் விசுவாசத்தினாலே பிழைத்திருக்கிறேன் என்றும், அன்பினால் கிரியை செய்கிற விசுவாசமே உதவும் என்றும் கலா. 2:20; 5:6. சொல்லியிருக்கிறார். "நம்முடைய விசுவாசமே உலகத்தை ஜெயிக்கிற ஜெயம்" என்று யோவான் சொல்லியிருக்கிறார் 1 யோ.5:4. ஆதலால் தன்னையும் தேவனையும், கிறிஸ்துவையும் அறிகிற அறிவும், தன் கெட்ட நிலமையை உணர்கிற உணர்வும் அதற்காக மனஸ்தாபப்படுகிற துக்கமும், தேவ கிருபையை விரும்புகிற விருப்பமும், சிலுவையிலறையப்பட்ட கிறிஸ்துவின் நிமித்தம் அதைக் கேட்கிற விண்ணப்பமும், கிறிஸ்துவைப்பற்றி அவருக்காக துன்பத்தை சகித்து, மரணபரியந்தம் அவரிடத்தில் நிலைநிற்கிற தைரியமும் இந்த விசுவாசத்தில் அடங்கியிருக்கிறது.

மேலும் பாவமன்னிப்பும் நீதிமான் என்று எண்ணப்படுதலும் தேவபுத்திர சுவிகாரமும், பரிசுத்தமாகுதலும், நித்திய ஜீவனுமாகிய இரட்சிப்பும் இந்த விசுவாசத்திற்கு பலனாகக் கிடைக்கிறது.

(தொடரும்.)



அபிரகாம் கர்த்தரை விசுவாசித்தான், அதை அவர் அவனுக்கு நீதியாக எண்ணினார் ஆதி. 15:6.



# சத்திய வேதம் [தொடர்ச்சி]

## எதிர்காலத்தை குறித்து சத்திய வேதம் கூறுவது என்ன?

மனிதர் மரித்தபின் அவர்களுக்கு என்ன சம்பவிக்கிறது? இப்பூமியிலுள்ள மனுஷ ஜாதிக்கு வருங்காலத்தில் என்ன கதி உண்டாகும்? தற்கால நாகரீகம் எதிர்காலத்தில் என்னமாய் முடியும்? இந்த யுகத்தின் முடிவு எப்போது, எப்படி நடக்கும்? இப்படிப்பட்ட கேள்விகள் மனிதர் மனதில் எழும்பிக்கொண்டே வருகின்றன. அதுவுமின்றி விசுவாசிகள் எதிர்காலத்தைப் பற்றி வேறு பலக் கேள்விகளைக் கேட்கின்றனர். அவைகளிலும் சில கீழ்க்காணுமாறு:-

இரட்சிப்படைந்திருக்கும் தமது திருச்சபையாருக்கு கடவுள் எந்தெந்த நன்மைகளை அருளச்சித்தமாயிருக்கிறார்? தாம் விசேஷித்த வண்ணம் தெரிந்தெடுத்த யூத ஜாதியை தேவன் வருங்காலத்தில திரும்பவும் ஆசீர்வதிப்பாரா? சாத்தான் என்னும் பெயருள்ள பிசாசை கடவுள் எப்போதாவது இவ்வுலகத்தினின்று அகற்றி விடுவாரா? கிறிஸ்து நாதர் உலகத்திற்கு எப்பொழுது திரும்ப வருவார்? அவரின் ராஜ்யம் எவ்வகையாக ஸ்தாபனமாகும்? என்கிற வினாக்களே.

வருங்காலங்களைக் குறித்து சத்திய வேதம் போதிப்பதை அவனவன் படித்தறியத் தக்கதாக நாம் இவ்வத்தியாயத்தில் உதவி புரிய விரும்புகிறோம்.

தீர்க்கதரிசனம் என்கிற பதத்தின் அர்த்தம் என்ன? ஒன்று சம்பவிக்கும் முன்னரே அதன் உண்மையான சரித்திரம் எழுதப்பட்டால் அதுவே தீர்க்கதரிசனமாகும். சத்திய வேதத்தில் மூவகை தீர்க்கதரிசனங்கள் காணப்படுகின்றன: அவையாவன:-

1. இதற்கு முன்னமே முற்றுமாய் நிறைவேறின தீர்க்கதரிசனங்கள்.

2. சில விதத்தில் நிறைவேறியும் வேறு சில விதத்தில் நிறைவேறாமலும் இருக்கிற தீர்க்கதரிசனங்கள்.

3. இன்னும் நிறைவேறாமலே இருக்கும் தீர்க்கதரிசனங்கள்.

முதலாவது குறிப்பிட்டவைகளை நாம் நன்கு கவனிப்போமானால் அது மற்றவர்கள் அறிந்துகொள்வதற்கு மிகவும் உதவியாக இருக்கும். எடுத்துக்காட்டாக கிறிஸ்து நாதரைப் பற்றிய தீர்க்கதரிசன மொழிகளை எடுத்துக் கொள்ளலாம். முதலாவது கிறிஸ்துவின் பிறப்பு, திருத்தொண்டு, மரணம் முதலியவற்றை முன்னறிவித்த பழைய ஏற்பாட்டு வாக்கியங்களைத் தேடிக் கண்டுபிடித்து, நன்றாய் கவனிக்கும்போது அதற்கடுத்தபடியாக இயேசு நாதர் திரு அவதாரியாக வந்த காலத்தில் அந்த பழைய ஏற்பாட்டு வசனம் நிறைவேறினதை தெளிவு பெறக் காட்டும் புதிய ஏற்பாட்டு வாக்கியங்களைத் தேடிக் கண்டு கொள்ள முடிகிறது.

கிறிஸ்து நாதருடைய பிறப்பு. அவர் எங்கே பிறப்பார். அவர் எவ்விதமாய் ஜீவிப்பார், எவ்விதமாய் பாடுபடுவார், எவ்விதமாய் தன்னை மனு மக்களுக்காக பலியாக ஒப்புவிப்பார். அப்படி அவர் தன்னை பலியாக ஒப்புக்கொடுக்கும்போது அவருக்கு நிகழும் சம்பவங்கள் என்ன என்பதே கடந்த காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிபோல், இயேசுவானவர் இந்த உலகத்தில் அவதாரியாய் வந்து நிகழ்த்துவதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னதாகவே எழுதப்பட்டுள்ளது. அவ்விதமான பழைய ஏற்பாட்டிலுள்ள வேத வாக்கியங்களை நாம் காணும் பொழுது

எழுத்தின் பிரகாரம் அவைகள் கிறிஸ்துவின் ஜீவியத்தில் நடந்தது. நாம் ஆச்சரியப்படத்தக்கதாக இருக்கிறது.

மேற்படி ஆராயும் பொழுது தானியேல், வெளிப்படுத்தின விசேஷம், சங்கீதம், ஏசாயாவின் புஸ்தகம், இயேசு கிறிஸ்துவின் போதனை, புதிய ஏற்பாட்டின் நிருபங்கள் ஆகியவைகளில் அடங்கியுள்ள தீர்க்கதரிசனங்களை ஆராய்ச்சி செய்யலாம். இவ்வாறு தீர்க்கதரிசன பாகங்களை பார்ப்போம்.

தீர்க்கதரிசனங்கள் நேரிடையாக கூறப்படாமல், முன்னடையாளங்கள், உவமானங்கள், சொப்பனங்கள், தரிசனங்கள் ஆகியவைகளினால் வெளிப்பட்டன என்கிற விஷயத்தை ஞாபகம் பண்ணிக் கொள்வது அவசியம்.

நிறைவேற வேண்டியவை என்றே கவனிக்கத்தக்கது. பின்னும் நிறைவேற வேண்டிய தீர்க்கதரிசனம் பெரும்பாலும் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகைக்கு சம்பந்தமானவை. இத்தகைய தீர்க்கதரிசன பாகங்களை ஆராய்ச்சி செய்யும் பொழுது பல மகிமையான சம்பவங்களைப்பற்றிய வசனங்களைக் காணமுடியும். இத்திவ்விய மொழிகள் எந்தக்காலத்தில் நிறைவேறும் என்பது கருகலான விஷயமே.

சில சீஷர்கள் இயேசுவிடம் இவைகள் எப்பொழுது சம்பவிக்கும், உம்முடைய வருகைக்கும் உலகத்தின் முடிவுக்கும் அடையாளம் என்ன என்று வினவின சமயத்தில், அந்த நாளையும் நாழிகைகளையும் என் பிதா ஒருவர் தவிர மற்றொருவனும் அறியான் என பதிலுரைத்தார் (மத். 24:3 36). பின்னொரு நாள் அவர் பிதாவானவர் தம்முடைய ஆதீனத்தில் வைத்திருக்கிற காலங்களையும், வேளைகளையும் அறிகிறது உங்களுக்கு அடுத்ததல்ல என்று போதித்தார் அப். 1:7.

இருப்பினும் அவர் தன்னுடைய இரண்டாம் வருகைக்குறிய அடையாளங்களை வெளிப்படுத்தினார். அந்த அடையாளங்கள் சம்பந்தமான சம்பவங்கள் ஒன்றின் பின் ஒன்றாக உலகத்தில் சம்பவித்துக் கொண்டு வருகிறதையும் நாம் இப்பொழுது பார்க்கிறோம். நாம் கர்த்தரின் வருகை சமீபித்திருக்கிறது என்று நம்பி எதிர்பார்க்க போதுமான அத்தாட்சி இருக்கிறது. அது நிற்க, கிறிஸ்து நாதர் திரும்பவும் இவ்வுலகத்தில் வருவார் என்ற நம்பிக்கைக்கு ஆதாரமாக

1. அவரைப் பற்றி இன்னும் நிறைவேறாத பழைய ஏற்பாட்டு தீர்க்கதரிசன மொழிகள் இருக்கின்றன. அவைகள் திரும்ப அவர் வரும்போது நிறைவேறும், நிறைவேற வேண்டும்.

2. அவரும், அவரது சீஷர்களும் அவர் திரும்பவும் வருவதாக திட்டமாகப் போதித்தார்கள்.

3. சீர்குலைந்த உலகை சீர்படுத்த கிறிஸ்துவின் வருகையினாலேயன்றி வேறொன்றிலும் முடியாது என்கிற உறுதியான எண்ணம் அநேக நூற்றாண்டுகளாக கிறிஸ்தவர்களை ஆட்கொண்டுள்ளது. கிறிஸ்துவின் வருகையும அவருடைய ராஜ்யமுமே உலகில் உண்மையான வாழ்க்கையை உண்டாக்கக்கூடும் என்பது திண்ணம்.

இயேசு நாதர் மேலும் வெகு சீக்கிரம் வருவார் என்ற நம்பிக்கைக்கு ஆதாரமாக சில:-

1. பல ராஜ்யங்களின் நிலமை இவ்விதமாக இருக்கும் (லூக். 21:25-28).

2. உலகத்தாருடைய ஜீவியத்தின் நிலமை இவ்விதமாய் இருக்கும் (2 தீமோ. 3:1-5).

இதன் தொடர்ச்சி 11 - ம் பக்கம்

# சிந்தித்துப் பார் செய்ய வேண்டியது இன்னதென்று அறிந்து சீக்கிரமாய் செய்:

*(தொடர்ச்சி)*

சங்கீதக்காரனாகிய தாவீது சங்கீதம் 144:1ல் என் கைகளைப் போருக்கும் என் விரல்களை யுத்தத்திற்கும் படிப்பிக்கிற என் கன்மலையாகிய கர்த்தருக்கு ஸ்தோத்திரம் என்கிறார். தேகாப்பியாசம் செய்வது பாவமா? பாவம் செய்வதே பாவம்! அப்பியாசத்தினால் சரீரமும் மனமும் திடப்படும். எபேசியர் 6:12ல் ஏனெனில் மாம்சத்தோடும் இரத்தத்தோடுமல்ல. துரைத்தனங்களோடும், அதிகாரங்களோடும். இப்பிரபஞ்சத்தின் அந்தகார லோகாதிபதிகளோடும், வான மண்டலங்களிலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகளோடும் நமக்கு போராட்டம் உண்டு.

மனுக்குலத்தின் தலைக்கு மேல் பின்புறத்திலிருக்கும் பாவம் என்னும் சர்ப்பத்தை கொல்ல, தேங்காயை போன்ற எல்லா மனிதருக்குள்ளிருக்கும் இருதயக் கடினம் என்னும் தேங்காயை உடைக்க, வெள்ளரிக்காய் போன்று எல்லா மனித இருதயத்துக்குள்ளிருக்கும் மாம்ச இச்சையை வெட்டி சிதறடிக்க போர் வீரர்களும், யுத்த வீரர்களும் தேவை. கத்தியாட்டம் தெரியாவிட்டால் முனிவர், ரிஷிகள் போன்று இருக்கும் துர் உபதேச தலைகள் மேலிருக்கும் சர்ப்பம் கொல்லப்படாது.

மனுக்குலத்திலிருக்கும் மாம்ச இச்சை வெட்டப்படாது கோலாட்டம் தெரியாவிட்டால் மனுஷர் தலைக்கு மேலிருக்கும் இருதயக் கடினம் உடைக்கப்பட முடியாது. அதற்கும் பயிற்சி தேவை. வேத வசன பயிற்சி தேவை. 2 நாளாகமம்:- 34-ம் அதிகாரம் வசனம் 5ல் பூஜாசாரியின் எலும்புகளை சுட்டெரித்து எருசலேமை சுத்திகரிக்க முனிவர் ரிஷிகள் (பூஜாசாரிகளின்) எலும்புகளை போன்று துர் உபதேச எலும்புகள் தேசமெங்கும் சிதறி தேசம் துர் நாற்றம் எடுத்து, பரிசுத்தம் என்னும் வெண்ணுடை தரித்திருக்கும் பரிசுத்தவான்களின் வஸ்திரத்தின் நற்கந்தத்தை கெடுக்கும் துர்நாற்றமாகிய பிசாசுகளின் துர் உபதேசம் தேசமெங்கும் பூஜாசாரிகளின் எலும்புகளை போல் காணப்படுகிறது. அதை சுட்டெரிக்க பயிற்சி பெற்ற யோசியா இராஜாக்கள் போன்றவர்கள் தேவை. இதை சிந்தித்து பார் சகோதரனே, சகோதரியே.

இந்தக் கடைசிக் காலத்தில் 25 ஆண்டுகளாய் தேவன் கட்டி எழுப்பி வருகிற புதிய எருசலேம் சபைக்கும், சத்தியத்துக்கும் உன்னை ஒப்புக்கொடு. புதிய உபதேசம் கேட்க, புதியக் காரியங்களைகாண, புதிய சிருஷ்டியாய் புதிய ஜீவனுடைய புது எண்ணெயால் அபிஷேகம் பண்ணப்பட மனந்திரும்பி பாவ அறிக்கையினால் பாவ மன்னிப்படைய,

எழுந்திருங்கள். சீயோனில் வாசமாயிருக்கிற தேவனிடத்திற்கு போவோம் வாருங்கள் என்று ஜாமக்காரர் கூறும் காலம் வரும் என்று சொன்னபடி (எரேமியா: 31: 6, 3:17).

சீயோனின் உச்சியிலே (புதிய எருசலேமில்) கெம்பீரித்து கர்த்தர் அருளும் கோதுமை, திராட்சைரசம், எண்ணெய், ஆட்டுக்குட்டிகள், கன்றுக்குட்டிகள் போன்ற ஆசிர்வாதங்களுக்காக நன்மைகளுக்காக ஓடி வாருங்கள். எரே. 31:12.

கர்த்தர் உங்களை ஆசிர்வதிப்பாராக

---

கர்த்தர் எருசலேமைக் கட்டுகிறார். சங்147:2.

---

சிறுவர் பகுதி

# சாமுவேலே! நீ எங்கே இருக்கிறாய்?

ஞானமுத்து தம்பதிகள் தங்களுடைய அருமையான குமாரன் சாமுவேலுடன் பெத்தானியா என்னும் சிற்றூரிலே வசித்து வந்தார்கள். எட்டாம் வகுப்பு படிக்கும் சாமுவேலுக்கு ஞாயிறு பள்ளி வகுப்பில் கலந்துகொள்வதற்கு ஒரேதயக்கமும், வெட்கமுமாக இருந்து வந்தது. ஏனென்றால் அவனது பெற்றோர்கள் சில மாதங்களுக்கு முன்புதான் இரட்சிக்கப்பட்டிருந்தார்கள். ஆதலால் சாமுவேலுக்கும் வேதவாசிப்பு, ஜெபம் பண்ணுதல் ஆகியவற்றில் போதுமான பயிற்சியோ, பழக்கமோ கிடையாது. ஞாயிறு பள்ளியில் படிக்கும் மற்ற மாணவர்கள் ஆசிரியர் கேட்கும் கேள்விகளுக்கு உடனுக்குடன் பதில் சொல்வார்கள், சாமுவேலுக்கோ என்றால் தன்னிடம் ஆசிரியர் ஏதேனும் கேள்விகள் கேட்டுவிட்டால் என்ன செய்வது, எப்படி பதில் சொல்லுவது என்று அச்சமாக இருக்கும். இதிலிருந்து தப்பித்துக் கொள்ள என்ன வழி என்று சாமுவேல் யோசித்தான். உடனே அவனது உள்ளத்தில் ஓர் எண்ணம் உதயமாயிற்று. ஞாயிறு பள்ளிக்கு வந்தால்தானே இவ்வளவு தொல்லைகளும்; ஸ்கூல் பாடங்கள் அதிகம் படிக்க வேண்டியதிருப்பதால், நண்பன் ராஜாவின் வீட்டிற்குச் சென்று, அவனோடு டியூசன் படிக்கப் போகிறேன் என்று சொல்லி ஞாயிறு பள்ளிக்கு முழுக்கு போட்டுவிடுவதென்று தீர்மானித்துக் கொண்டான்.

அடுத்த வாரம் அவனது பெற்றோர்கள் ஞாயிறு ஆராதனைக்கு செல்வதற்கு ஆயத்தமாகிக்கொண்டிருந்தார்கள். சாமுவேல் தனது திட்டத்தின்படி நடந்துகொண்டான். நண்பன் ராஜா அவ்வளவு நல்ல பையன் இல்லை. ராஜா சாமுவேலுக்கு பிரியமாக பேசி, தின் பண்டங்களையும் வாங்கிக் கொடுத்து, அவனைத் தன்னுடைய வழிக்குத் திருப்பினான். பக்கத்து வீட்டில் டியூசன் படிக்கிறோம் என்று சொல்லிவிட்டு இருவரும் அங்கே டி.வி. பார்த்துக் கொண்டு பொழுதைப் போக்கி வந்தார்கள். கொஞ்ச நாட்கள் கழித்து திடீரென்று சாமுவேலுக்கு கடுமையான காய்ச்சல் வந்து படுக்கையில் படுத்து விட்டான். சாமுவேலுடைய பெற்றோர்கள் அவனது உடல் நலத்திற்காகவும், இறைபக்திக்காகவும் இடைவிடாமல் ஜெபித்து வந்தார்கள். தேவனாகிய கர்த்தர் அவர்களது ஜெபத்தைக் கேட்டருளினார்.

ஒரு நாள் இரவு சாமுவேல் தூங்கிக் கொண்டிருக்கும் போது கனவில் காட்சியொன்று காண்பிக்கப்பட்டது. அதிலே அவன் டி.வி. பார்த்துக் கொண்டிருக்கிறான். அப்பொழுது வெண்வஸ்திரம் தரித்த ஒரு முதியவர் வெளியிலிருந்து அவனை நோக்கி சாமுவேலே! சாமுவேலே! என்று கூப்பிட்டார். அதற்கு அவன் என்ன ஐயா? என்று கேட்டான். மீண்டும் அவர் அவனைப் பார்த்து: இன்று ஞாயிற்றுக்கிழமையல்லவா! ஞாயிறு பள்ளிக்குச் செல்லாமல் நீ எங்கே இருக்கிறாய்? என்று கேட்டார். அதற்கு என்ன பதில் சொல்லுவதென்றே தெரியாமல் சாமுவேல் திருதிருவென்று விழித்தான். பின்னர் தனது நிலைமையை அம்முதியவரிடம் நாதழுக்க எடுத்துக் கூறினான். அவர் அவனை அன்புடன் நோக்கி, சாமுவேலே நீ பயப்படாதே! ஞாயிறு பள்ளிக்கு நீ போ! அங்கே உனக்கு வேண்டியது கொடுக்கப்படும் என்றார். இன்னும் சாமுவேல், தன்னோடு பேசிக்கொண்டிருப்பது இறைவன் என்று உணராமல் காணப்பட்டான். என்றாலும் அம்முதியவரின் வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து சரி ஐயா! உங்களது வார்த்தையின்படியே செய்கிறேன் என்று பதிலளித்தான்.

காலையில் படுக்கையை விட்டு எழுந்த சாமுவேலுக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. காய்ச்சலும் பூரணமாக நீங்கிவிட்டது; காட்சியும் நினைவுக்கு வந்தது. தன்

பெற்றோர்களுடன் பரிசுத்த ஆராதனைக்குச் சென்றான். அதோடு ஞாயிறு பள்ளிக்கும் சென்றான். அன்றைய தினம் ஞாயிறு பள்ளியில் சாமுவேல் தீர்க்கதரிசியின் இளமைப் பருவத்தில் கர்த்தர் எவ்வாறு தன்னை தீர்க்கதரிசிக்கு வெளிப்படுத்தினார் என்று போதிக்கப்பட்டது. ஞாயிறு பள்ளி ஆசிரியர் பிள்ளைகளிடம் அருமையான குழந்தைகளே! கர்த்தர் உங்களை கூப்பிடும்போது நீங்களும் கர்த்தாவே! சொல்லும் அடியேன் கேட்கிறேன் என்று சொல்லுங்கள் என்றார். உங்களது தேவைகளை தேவனிடம் சொல்லும் முன்பு அவர் உங்களிடம் சொல்லுகிற வார்த்தைகளுக்குக் கீழ்ப்படிந்து செவிகொடுங்கள். அப்பொழுது, தேவன் உங்களையும் சாமுவேல் தீர்க்கதரிசியைப் போல, ஒரு வல்லமையுள்ள கருவியாக எடுத்து உபயோகிப்பார், கர்த்தருடைய வார்த்தையும் உங்களுக்குக் கொடுக்கப்படும்.

ஞாயிறு பள்ளிக்கு வந்திருந்த சாமுவேலுக்கு, நேற்று கனவில் தன்னோடு பேசினவர் இறைவன் இயேசு நாதர்தான் என்று அப்பொழுது விளங்கியது. ஞாயிறு பள்ளி ஆசிரியர் சொன்ன ஆலோசனையின் படி செய்து சாமுவேல் ஜெபித்து வந்தான். கர்த்தரின் வார்த்தை அவனுக்குக் கொடுக்கப்பட்டது. தேவன் தினமும் அவனோடு பேசி வந்தார். விரைவிலே மற்ற மாணவர்களைப் பார்க்கிலும் தேவ கிருபையிலும், ஞானத்திலும், மனிதர் தயவிலும் அதிகமதிகமாய் பெருகி வளர்ந்து வந்தான். அந்த ஆண்டிற்கான "ஞாயிறு பள்ளியின் மிகச் சிறந்த மாணவன்" என்ற விருதும் அவனுக்கு வழங்கப்பட்டது.

அருமையான பிள்ளைகளே! இன்று நம்முடைய நிலைமை என்ன ? நாம் எப்படி இருக்கிறோம் ? எங்கே செல்கிறோம் ? ஞாயிற்றுக்கிழமைகளில் ஒழுங்காக தேவ ஆலயம் போகின்றோமா ? அல்லது டி.வி. பார்க்கிறோமா ? ஞாயிறு பள்ளிக்குச் செல்லுகின்றோமா? அல்லது நாடகம் போடுகிறோமா? ஞாயிற்றுக்கிழமைகளில் ஞாயிறு பள்ளியை விட்டு நீ எங்கே இருக்கிறாய் ? என்று தேவன் நம்மைப் பார்த்து கேட்காதபடிக்கு, ஞாயிறு பள்ளிக்கு ஒழுங்காக சென்று, அங்கே தேவன் நமக்குக் கொடுக்கும் ஞான ஆலோசனைகளுக்குச் செவிகொடுத்து, கீழ்ப்படிந்து நடப்போமாக. அப்பொழுது, தேவன் நம்மையும் ஆசிர்வதிப்பார்.

அன்பான கிறிஸ்தவ பெற்றோர்களே! நீங்களும், உங்களது பிள்ளைகளை ஞாயிறு பள்ளிக்கு அழைத்து வருவதில் கண்ணும் கருத்துமாக இருங்கள், இன்றே அவர்களுக்கு தேவனைப் பற்றி தெளிவாக எடுத்துச் சொல்லுங்கள்; தேவனண்டை நடத்துங்கள். இல்லாது போனால் சாத்தான் தன்னைப் பற்றி அவர்களுக்குப் போதித்து அவர்களை வஞ்சித்துப் போடுவான். உங்களது பிள்ளைகள் தினமும் தேவனின் சத்தத்தை கேட்டுப் பழகும் படியாக அவர்களுக்கு அறிவூட்டுங்கள். அப்பொழுது எதிர்காலத்தில் அவர்கள் உங்களுக்கும், தேவனுக்கும் உகந்த சாட்சியாக நிலை நிற்பார்கள். தேவன் அதற்கான பலனை உங்களுக்கும் தந்து, உங்களையும் ஆசிர்வதிப்பார்.

"பலியைப் பார்க்கிலும் கீழ்ப்படிதலும், . செவிகொடுத்தலும் உத்தமம்"

1 சாமு. 15:22.



சாட்சி

# நான் இரட்சிக்கப்பட்டேன்.

கர்த்தருக்கு ஸ்தோத்திரம். அடியேனுடைய சொந்த ஊர் இராமநாதபுரத்தில் இருக்கும் கமுதி என்பதாகும். அடியேன் ஒரு இந்து மார்க்கத்தை சேர்ந்தவனாக இருந்தேன் அடியேனுடைய கல்லூரி படிப்புக்காக அருப்புக்கோட்டை என்ற ஊருக்கு வீட்டை மாற்றிக் கொண்டு வர நேர்ந்தது. இவ்வாறு நான் அங்கு படித்துக் கொண்டிருக்கும் போது அடியேனுடைய சகோதரி மூலம் முத்துச் சாமிபுரம் ஊழியர் ஐயா அவர்கள் எங்கள் வீட்டுக்கு வந்து சத்திய மார்க்கமான கிறிஸ்தவத்தின் மேன்மையை வேதாகமத்தின் மூலமாக கூறுவார்கள் அடியேனும் ஒரு சில முறை முத்துசாமிபுரம் சபைக்கு சென்றேன். கல்லூரிப் படிபபு முடிந்து விட்டதால் அடியேன வேலை விஷயமாக சென்னைக்கு வர நேர்ந்தது.

சென்னையில் அடியேன் உலகப் பிரகாரமான காரியங்களிலும், சந்தோஷங்களிலும் தான் ஈடுபட்டேன். இருந்தபோதிலும்எனக்குள்ளாக ஒரு கேள்விக்குறி எழுந்து கொண்டே இருந்தது. நாம் இந்த உலகத்தில் எதற்காக வாழ்கிறோம் ? வாழ்ந்து என்ன செய்யப்போகிறோம் ? என்னதான் பிரயோஜனம் ? என்று வாழ்க்கையில் நம்பிக்கை இல்லாதவனாக காணப்பட்டேன். அடியேனுடைய சகோதரன் "புதிய எருசலேம் சபை"யில் இரட்சிக்கப்பட்டவராதலால் அவரும் சென்னைக்கு வரும் போதெல்லாம் என்னை சென்னை திருச்சபைக்கு அழைத்துச் செல்வார். அடிக்கடி சபைக்கு வர வர எனக்கும் கிறிஸ்துவைப் பறறி அறிகிற வாஞ்சை அதிகமாய் ஏற்பட்டது ஞானஸ்நானம் பரிசுத்த ஆவி என்றால் என்ன என்றே தெரியாத நான் ஞானஸ்நானம் எடுதது அபிஷேகிக்கப்பட்டேன். அதற்காய் நான என் தெய்வத்திற்கு நன்றி செலுத்துகிறேன். இதற்கு பிறகு தான் உலகப் பிரகாரமான காரியங்களில் கிடைக்கும் சந்தோஷம் ஒன்றுமில்லை என்பதை உணர்ந்து கொண்டேன்

இவ்விதமாக ஒரு மரக்கட்டையைப் போல இருந்த என்னை தேவன் ஆவிக்குரிய சபையாகிய "புதிய எருசலேம் சபை"யில் கூட்டிச் சேர்த்து அக்கினி ஜுவாலையாக என்னை மாற்றி இருக்கிறார்.

ஒரு முறை வேலைக்கு சென்று உடல் நிலை சரியில்லாமல் இருந்ததால் வீட்டுக்கு பஸ்ஸில் திரும்பி வந்து கொண்டிருந்தேன். பஸ்ஸில் வந்து கொண்டிருக்கும் போதே மயக்கம் ஏற்பட்டது. அப்படியே கொஞ்சம் கொஞ்சமாக மயங்கி முற்றிலும் உணர்வற்றவனாகிவிட்டேன். திடீரென்று நான் உற்சாகம் அடைந்து உணர்வடைந்ததும் மயக்க நிலையிலிருந்து விடுதலை பெற்றேன். நான் உணர்வடைந்ததும், இறங்க வேண்டிய இடமும் சரியாக இருந்தது. இவ்விதமாக கர்த்தர் என்னை அந்த இடத்தில் ஒரு ஜீவனுள்ள சாட்சியாக நிற்க கிருபை செய்தார்.

இன்னும் கர்த்தர் எனக்கு ஏராளமான காரியங்களில் ஆலோசனை கொடுத்திருக்கிறார். ஒரு முறை நான் தவறு செய்து விட்டு மன துக்கத்துடனே வேலைக்கு சென்று கொண்டிருந்தபோது எனக்கு கர்த்தர் ஒரு காட்சியை காண்பித்தார். அந்தக் காட்சியிலே ஒரு ஆறு வயது குழந்தை தன் தாயுடன் ஏதோ ஒரு படத்தை பார்த்துக் கொண்டே நடந்து செல்கிறது. அப்போது அது தடுக்கி விழுகிறது. அது இரண்டு, மூன்று முறை தடுக்கி விழுந்த போதிலும் அதனுடைய பார்வை மட்டும் அந்தக் காட்சியையே பார்க்கிறது. அதனுடைய தாய் அதின் முழங்காலை தடவிக் கொடுக்கிறார். உடனே கர்த்தர் எனக்கு உணர்த்துவித்து, நீயும் ஆவிக்குரிய ஜீவியத்தில் குழந்தை போன்றும், தவறு செய்யும் போது (தடுக்கி விழுதல்) அந்த தவறை அறிக்கை செய்து

3. கிறிஸ்தவ சபையின் நிலைமை இவ்விதமாய் இருக்கும் (வெளி. 3:14-22)

4. யூதரின் அரசியல் புத்துயிர் அடையும் (மத். 24:32-33)

5. உலகெங்கும் உண்டாகும் பயங்கர சம்பவங்கள் (லூக். 21:9-11).

எந்தக் கிறிஸ்தவனும் இவ்விஷயங்களைச் சிந்தித்து சடுதியாய்த் தோன்றப் போகிற அருள் நாதரை சந்திக்க தன்னைத் தயாரித்துக் கொள்கிறான். அவர் மின்னலைப் போன்று திடீரென்று வெளிப்படும் நாளிலும், நாழிகையிலும் அவன் உத்தம ஜீவியம் செய்கிறவனாய் தன் ஆண்டவனுக்கென சாட்சி பகருகிறவனாக காணப்பட வேண்டுமென்று சத்திய வேதம் சொல்லுகிறது.

சத்திய வேதம் வருங்காலத்தைப் பற்றி வரும் உலகத்தைப் பற்றிய விபரங்களை அறிவிக்கிறது. எனவே, இது தெய்வீக புஸ்தகம் எனத் திடமாக அறிகிறோம்.

(தொடரும்)

"தீர்க்கதரிசனமானது ஒரு காலத்திலும் மனுஷருடைய சித்தத்தினாலே உண்டாகவில்லை, தேவனுடைய பரிசுத்த மனுஷர்கள் பரிசுத்த ஆவியினாலே ஏவப்பட்டுப் பேசினார்கள்" 2 பேது. 1:21.

## வேத பாடம் (தொடர்ச்சி)

### எண்ணாகமம்

### எண். 13:1-3 கர்த்தர் மோசேயை நடத்தியது

இஸ்ரவேலர்கள் பாரான் வனாந்தரத்தில் இருக்கிற காதேஸுக்கு வந்து சேர்ந்தார்கள். முதலாவது அவர்கள் காதேஸுக்கு வந்து சேர்ந்தார்கள். மோசே கர்த்தருடைய கட்டளையின்படி போய் உடனே கானானை சுதந்தரித்துக் கொள்ளும்படியாக இஸ்ரவேலர்களுக்கு கட்டளையிட்டார். ஆனால் ஜனங்கள் தேசத்தைப் போய் வேவு பார்த்து வரவும் எந்த வழியாய்ப் போய் எப்படி நாம் கானானியர்களை விரட்டலாம் என்றும் நமக்கு மறு செய்தி கொண்டு வர மனிதரை அனுப்ப வேண்டும் என்று இஸ்ரவேலர்கள் கேட்டுக் கொண்டார்கள் (உபா. 1:19-22). இந்த காரியத்தை மோசே கர்த்தரிடத்தில் தெரிவித்தார். கர்த்தர் அவர்கள் விருப்பப்படியே சுற்றிப் பார்க்க மனிதரை அனுப்பு என்று கட்டளையிட்டார்.

### எண். 13:4-25

கோத்திரத்துக்கு ஒரு தலைவனாக பன்னிரண்டு தலைவர்கள் அனுப்பப்பட்டார்கள். அவர்களுடைய பெயர்கள் இந்தப் பாகத்திலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. எண். 1:5 முதல் இஸ்ரவேல் புத்திரர்களை எண்ணுகிறதற்காக குறிக்கப்பட்ட கோத்திர தலைவர்கள் அல்ல இவர்கள். இவர்கள் வேறொரு பிரிவு ஆகும். எண். 1:5 முதல் இவ

ரவேல் புத்திரர்களை எண்ணுகிறதற்கு குறிக்கப்பட்ட தலைவர்களானவர்கள் சபையை நடத்திச் செல்லும்படியாக அந்தந்த கோத்திரத்துக்கு தலைவராக இருந்தார்கள் எண். 10:14-28. இங்கே வேவுகாரர்களாக அனுப்பப்படுகிறவர்கள் வேறொரு பிரிவு தலைவர்களாகும். (மேலும் 70 தலைவர்களும் மூப்பர்களுமானவர்கள் இஸ்ரவேலர்களுக்குள்ளே இருந்தார்கள். இவர்கள் மூலமாக சபையானது நடத்தப்பட்டதென்றும், இவர்களெல்லாருக்கும் மேலாக மோசே இருந்தாரென்றும் நாம் அறிந்து கொள்ளுகிறோம். அவர்கள் தேசத்தை சுற்றி பார்க்க போகும் போது அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட கட்டளை என்னவென்றால்:

1. தேசம் எப்படிப்பட்டது? அதிலே குடியிருக்கிற ஜனங்கள் பலவீனர்களா, பலவான்களா? கொஞ்சம் பேரா, அநேகம் பேரா?

2. தேசம் எப்படிப்பட்டது? நல்லதா, கெட்டதா? அங்கே நிலம் எப்படிப்பட்டது? இளப்பமானதா, நல்ல நிலமா? அங்கே கனிதரும் வி ரு ட் ச ங் க ள் உண்டா?

3. அவர்கள் கூடாரங்களில் குடியிருக்கிறார்களா, கோட்டையில் குடியிருக்கிறார்களா? பட்டணங்கள் எப்படி அமைக்கப்பட்டிருக்கிறது? என்று சுற்றிப் பார்த்து வரும்படியாக அனுப்பட்டார்கள் எண். 13:17-20.

சுற்றிப்பார்க்கப் போனவர்கள் 12 பேர். அவர்கள் திரும்பி வந்து செய்திகளைச் சொன்னார்கள் வசனம் 25,26.

## எண். 13:27-29

சுற்றிபபார்க்க போய்விட்டு வந்தவர்கள் 40 நாட்கள் சுற்றிப் பார்த்து விட்டு வந்து அவர்கள் சொன்ன செய்தி: நீர் எங்களை அனுப்பின தேசத்திற்கு நாங்கள் போயிருந்தோம். அது பாலும் தேனும் ஓடுகிற தேசம் தான். இது அதனுடைய கனி என்று ஒரு திராட்சை குலையை எஸ்கோல் பள்ளத்தாக்கிலே அவர்கள் வெட்டி இருவர் அதை ஒரு தடியிலே மாட்டித் தூக்கிக் கொண்டு வந்திருந்தார்கள் வச. 33 இன்னும் மாதுளம் பழங்களும், அத்திப் பழங்களும் அந்த தேசத்தின் உச்சிதமான சில பொருள்களும் கொண்டு வந்திருந்தார்கள். தேசம் நல்ல தேசம்தான், ஆனால் அந்த தேசத்தின் ஜனங்களெல்லாரும் பலவான்கள். பட்டணங்கள் அரணிப்பானவைகளும், மிகவும் பெரியவைகளுமாயிருக்கிறது அங்கே ஏனாக்கின் குமாரராகிய ராட்சத்தர்களைக் கண்டோம் அமலேக்கியரும் அங்கே குடியிருக்கிறார்கள் என்றார்கள்.

## எண். 13:30

அப்பொழுது காலேப் மோசேக்கு முன்பாக ஜனங்களை அமர்த்தி, நாம் உடனே போய் அதை சுதந்தரித்துக் கொள்ளலாம் அதை எளிதாய் ஜெயித்துக் கொள்ளலாம் என்றார்

## எண் 13:31-33.

ஆனால் காலேப் யோசுவாவோடு கூட சென்றிருந்த மீதியான 10 பேர்களும் நாம் அந்த ஜனத்தோடு எதிர்த்து நிற்கக்கூடாது. அவர்கள் நம்மை பார்க்கிலும்

பலவான்கள். நாங்கள் தேசத்தை சுற்றிப் பார்த்தோம், அது தன் குடிகளைப் பட்சிக்கிற தேசம். நாங்கள் அதிலே கண்ட ஜனங்களெல்லாரும் மிகவும் பெரிய ஆட்கள். அங்கே ராட்சதப் பிறவியான ஏனாக்கின் குமாரராகிய ராட்சதரைக் கண்டோம். நாங்கள் எங்கள் பார்வைக்கு வெட்டுக் கிளிகளைப் போல் இருந்தோம். அவர்கள் பார்வைக்கும் அப்படியே இருந்தோம். ஆனபடியால் நாம் போய் அதை சுதந்தரித்து கொள்ள முடியாது அங்கே போனால் நாம் அழிந்தே போவோம் என்று துர்ச்செய்தி பரப்பினார்கள்.

இந்நாட்களிலேயும் கிறிஸ்தவ வாழ்க்கையை குறித்து அநேகர் இவ்விதமாக துர்ச்செய்தி பரப்புகிறார்கள். கிறிஸ்து மூலமாக நமக்கு இரட்சிப்பும், தேவ சமாதானமும் சந்தோஷமும், பரிசுத்தமும், தெய்வீக ஐக்கியமும், நித்திய நன்மைகளும், முக்தியும் கிடைக்கும். ஆனால் நாம் அதை சுதந்தரித்துக் கொள்ள முடியாது. அநேக பெரியவர்கள், நல்லவர்கள் இந்த ஆவிக்குரிய ஜீவியத்திலே ஓடி அவர்கள் விழுந்து போனார்கள். அது நம்மால் ஆகிற காரியமல்ல. நம்மால் அதை சுதந்தரித்துக் கொள்ள முடியாது. அது ஒரு சில விசேஷித்த மனிதர்கள் அப். பவுலைப் போன்றவர்களே அதை சுதந்தரித்துக் கொள்ள முடியும். பரிசுத்த வாழ்க்கையில் நிலைநிற்கிறது. பூரணமடைகிறது கஷ்டம் என்று துர்ச்செய்தி பரப்புகின்றார்கள். இவர்களும் தங்களுடைய வாழ்க்கையிலே பெலன் இல்லாதவர்களாக இருக்கிறபடியால் மற்றவர்களையும் பெலவீனப்படுத்திக் கொள்கிறார்கள்.

தேசம் நல்ல தேசம் தான் பாலும் தேனும் ஓடுகிறது. அங்கே உள்ள பட்டணங்களெல்லாம் அரணிப்பானவைகளும், பெரியவைகளுமாயிருக்கிறது. அங்கே உள்ள கனிவர்க்கங்கள் இதோ. ஆனால் அங்கே இராட்சதர்கள் இருக்கிறார்கள் என்று துர்செய்தி பரப்பினார்கள். தங்களோடு கூட தேவன் இருக்கிறதையும், தேவன் வாக்குத்தத்தம் செய்திருக்கிறதையும், தேவன் கட்டளையிட்டிருக்கிறார் அவைபடியினால் அதை சுதந்தரித்துக் கொள்ளலாம் என்ற விசுவாசமும், நம்பிக்கையும் இல்லாது விழுந்து போன கோழைகளின் துர்ச்செய்தி கிறிஸ்தவ வாழ்க்கையை குதிரைக் கொம்பு போல ஆக்கிவிட்டது.

கிறிஸ்தவ வாழ்க்கை மிகவும் இலகுவான வாழ்க்கை அது கிறிஸ்துவினால் நமக்கு அருளப்படுகிற பரிசாக இருக்கிறது. நாம் செய்ய வேண்டியது கிறிஸ்துவாகிய செடியோடு கூட ஒட்டிக் கொண்டிருக்க வேண்டியதே. வேறே நாம் அதிகமாய் செய்கிறதற்கு ஒன்றுமில்லை. கனிதோன்றும், பலன் கிடைக்கும் வெற்றி அடைவோம். கனி செடியில் அல்ல கொடியிலே உண்டாகும். கொடியோ

## பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro சகேயு | Sis. எஸ்தர் மேரி | கோவில்பட்டி | 27-10-93 |
| Bro. சேகர் | Sis எல்வி | துரைசாமியாபுரம் | 3-11-93 |

வேறொன்றும் செய்ய வில்லை. அது செடியோடு கூட ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும் அவ்வளவுதான். கனி இயற்கையாகத் தோன்றி மிளிரும் இதுவே கிறிஸ்தவ வாழ்க்கை கிறிஸ்துவோடு கூட ஐக்கியமாயிருக்கிறதில் கிறிஸ்தவ வாழ்க்கை அடங்கியிருக்கிறது. அவன் ஜெயமடைவான். இதற்கு இடையூறு உண்டாகின்ற கீழ்ப்படியாமை, பாவம், அவிசுவாசங்களை உடனே அறிக்கை செய்து மன்னிப்பைப் பெற்று ஐக்கியத்தைக் காத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது கிறிஸ்தவ வாழ்க்கையில் ஜெயமடைகிறதும், கனி கொடுப்பதும், பூரணமடைவதும் இலகுவானது என்பதைக் கண்டு கொள்ளலாம். காரியம் இப்படியிருக்கிறதினால் சாத்தான் அவனுடைய பலத்தை, கிறிஸ்தவ வாழ்க்கையிலிருக்கிற கடினமானவற்றையே காணச் செய்கிறான். தேவனையோ, தெய்வீக வார்த்தையையோ காணாதபடி அநேகருடைய கண்களை குருடாக்கிப் போடுகிறான். இந்த பத்து பேரும் இப்படியே துர்செய்தி பரப்பினார்கள்

## எண். *14:1-4.*

இஸ்ரவேலர்கள் மத்தியிலே பத்து வேவுகார தலைவர்கள் வந்து துர்செய்தி பரப்பினார்கள் (13:33). பலவீனமான வார்த்தைகள், தோல்வியான வார்த்தைகள், பயமுறுத்தும் வார்த்தைகள், இளக்கரித்துப் போகக் கூடிய வார்த்தைகள், வீழ்ச்சிக்குரிய வார்த்தைகளைப் பேசினார்கள். இஸ்ரவேலர்கள் பலத்த சத்தமிட்டு இராமுழுவதும் அழுது கொண்டிருந்தார்கள். இந்த வார்த்தைகளினால் அவர்களுக்குள் அவிசுவாசமும், கீழ்ப்படியாமையும், கலகம் செய்யக் கூடிய குணமும் உண்டாயிற்று. வெளிப்படையாகக் கலகம் செய்ய ஆயத்தமானார்கள். நாங்கள் எகிப்திலே செத்துப்போனால் நலமாயிருக்கும் அல்லது இந்த வனாந்தரத்தில் செத்தாலும் நல்லதே. நாங்கள் இராட்சத்தரால், பட்டயத்தால் மடியும்படிக்கும், எங்கள் பெண்சாதி பிள்ளைகளெல்லாம் கொள்ளையாகும்படிக்கும் கர்த்தர் இந்த தேசத்திற்கு எங்களைக் கொண்டு வந்தது என்ன? ஆனபடியால், திரும்பி மறுபடியும் எகிப்துக்குப் போவதே உத்தமம். எனவே, இஸ்ரவேலர்களே, நமக்கு ஒரு தலைவனை ஏற்படுத்திக்கொண்டு நாம் திரும்பிப்போகலாம் என்று சொல்லிக் கொண்டார்கள். மகா பயங்கரமான விளைவுகள். துர்செய்திக்கு வல்லமையுண்டு. நற்செய்தி மகிழ்ச்சியையும், வெற்றியையும், தைரியத்தையும் கொடுப்பது போல, துர்செய்தி, தோல்வி மனப்பான்மையையும், பயத்தையும், கலக்கத்தையும், அவிசுவாசத்தையும் கொடுப்பது நிச்சயம்.

கிறிஸ்தவ வாழ்க்கையில் இவ்விதமான தோல்வி மனப்பான்மை உடைய தவறான போதகர்கள், ஆலோசகர்கள், தலைவர்களினாலே மக்கள் மறுபடியும் திரும்பிப பார்க்கிறார்கள். பிரயாணத்தைத் தொடர்ந்து செய்யவோ தேவன் வாக்குத்தத்தம் செய்த தேசத்தை சுதந்தரித்துக் கொள்ளவோ முடியாது ஆனபடியால், திரும்பிப் போவோம் என்றே அவர்கள் உள்ளத்தில் எகிப்துக்கு திரும்புகிறார்கள். இது மிக சாபகரமான ஒரு நிலையாகும். திருக்குறளிலே ஒரு குறள் உண்டு.

எண்ணித்துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்காம்.

தனக்கு, தன் மனசாட்சியின் படியும், உண்மையின்படியும் சரி என்று தெரிகிற சத்தியத்தை கடைபிடிக்க ஆரம்பிக்கிறவன் உலகமே அதற்கு எதிர்த்து வந்தாலும்

முன் வைத்த காலை வைக்கவோ, திரும்பிப் பார்க்கவோ மாட்டான். அப்படியே சரியாகத் தீர்மானித்து முடிவு செய்து கிறிஸ்தவ வாழ்க்கை ஆரம்பித்தவன், திரும்பி அதைப்பற்றி சிந்திக்க, கலங்க, வேறு எண்ணங்களுக்கு இடங்கொடுக்கமாட்டான். அப்படிச் செய்வதினால் முன்னிலமையிலும் பின்னிலமை கேடுள்ளதாக மாறுமே யொழிய எந்தப்பிரயோஜனமும் கிடையாது. கிணற்றைத்தாண்ட ஆரம்பித்தால் முக்காலே முண்டாணி வீசம் தாண்டினாலும் கிணற்றுக்குள்ளே தான் விழுவான். ஒரே யடியாகத் தாண்டிவிட வேண்டியது தான். இங்கே இஸ்ரவேலர்கள் நாங்கள் வனாந்தரத்தில் செத்தாலும் தாவிலை என்று சொன்னார்கள். முன்னேற மறுத்தார்கள்.

[தொடரும்].



"சிலர் விசுவாசியாமற் போனாலுமென்ன ? அவர்களுடைய அவிசுவாசம் தேவனுடைய உண்மையை அவமாக்குமோ ? " ரோ. 3:3.



# நல்ல நாவு

தேவன் உண்டாகக்கடவது என்று சொன்னதினால் வெளிச்சம் உண்டானது, ஆகாய விரிவு உண்டானது, சமுத்திரமும், வெட்டாந்தரையும் புல் பூண்டுகள், கனி விருட்சங்களும் உண்டானது, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் உண்டானது, நீர் வாழ் ஜந்துக்களும், பறவைகளும் உண்டானது. நாட்டு மிருகங்களும், ஊரும் பிராணிகளும் காட்டு மிருகங்களும் உண்டானது. தேவனுடைய வார்த்தையால் சகலமும் சிருஷ்டிக்கப்பட்டது.

லாசருவே வெளியே வா என்று இயேசு சொன்னார், 4 நாட்களுக்கு முன் மரித்து அடக்கம் பண்ணப்பட்ட லாசரு உயிரடைந்து கல்லறையை விட்டு வெளியே வந்தார். இறைவனுடைய வார்த்தைக்கு அவ்வளவு வல்லமை உண்டு. ஜனத்தின் அதிபதி ஒரு வார்த்தை சொன்னால், முழு ஜனத்தின் நிலையையும் மாற்றும். சமாதான காலத்தில் சேனாதிபதி சொல்கிற வார்த்தையால் எண்ணிறந்தோர் சாக நேரிடும். யுத்த காலத்தில் அவர் சொல்கிற வார்த்தையால் எண்ணிறந்தோர் உயிர் தப்ப முடியும்.

ஒரு மனிதனிடமிருந்து புறப்படுகிற வார்த்தைகள் அவனை உயர்ந்தவனாக்கவும் முடியும், இழிநிலை அடையச் செய்யவும் கூடும். நம்முடைய நாவைக் குறித்து நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நமது நாவிலிருந்து சரியான சொற்கள் மாத்திரம் புறப்பட்டால், நாம் பூரணமான ஜனம் (Perfect people) என்றழைக்கப்படுவோம். நமது வாயிலிருந்து தவறான சொற்கள் பிறக்குமானால் அவைகள் நம்முடைய அபூரணத்தன்மையை (Imperfectness) வெளிப்படுத்தும் (யாக். 3:3). நமது பூரண நிலையை (Perfect State) கெடுத்து போடக் கூடிய சில வித வார்த்தைகளை கவனித்து நாவைக் காக்க கவனம் செலுத்துவோமாக:

**கோள் சொல்லுதல்: (Tale bearing)**

Tale bearer is the one who

tells the matter with a bad motive.

கோள் சொல்லுதல் என்றால் ஒரு காரியத்தை மற்றவர்களிடம தவறான நோக்கத்தோடு சொல்லுதலாகும். ஒரு காரியத்தை மற்றவர்களிடம் நல்நோக்கத்தோடு சொல்வது கோள் எனப் படமாட்டாது. சொல்லுதலின் நோக்கமே முக்கியம்.

கொரிந்து சபையிலே சிலர் நான் பவுலைச் சேர்ந்தவன், நான் அப்பொல்லோவைச் சேர்ந்தவன் நான் கேபாவைச் சேர்ந்தவன் என்று சொல்லிக் கொண்டு பிரிந்த நிலையில் இருந்ததை குலோவேயாளின் வீட்டார் கண்டு அதை அப்போஸ்தலனாகிய பவுலுக்கு சொன்னார்கள் (1 கொரி. 1:11,10,12). அதைக்கேட்ட பவுல் சபையாரை சீர்திருத்தம் செய்ய கிரியை செய்தார். குலோவேயாள் வீட்டார் கோள் சொல்ல வில்லை. உண்மை நிலையை சொன்னார்கள்

நோவா திராட்சரசம் குடித்து வெறி கொண்டு தன் கூடாரத்தில் வஸ்திரம் விலகி படுத்திருந்ததைக் கண்ட காம் தகப்பனின் நிர்வாணத்தை மறைத்திருக்கலாம். மாறாக அதைப் போய் தகப்பனுக்கு அவமானம் வரும்படி தன் சகோதரர்களிடம் சொன்னான். இது கோள். இப்படி காம் கோள் சொன்னதினால் அவனது சந்ததிக்கு சாபம் உண்டாயிற்று. மகன் காமை சபிக்க வில்லை. ஆனால் காமின் சந்ததியை சபித்தார். அவர் சபித்த விதம் கானான் (S/o காம்) சபிக்கப்பட்டவன். தன் சகோதரரிடத்தில் அடிமைகளுக்கு அடிமையாயிருப்பான். கானான் சேமுக்கு அடிமையாக இருப்பான். யாபேத்தை தேவன் விருத்தியாகுவார், கானான் அவனுக்கு அடிமையாக இருப்பான் (ஆதி. 9:21-27) நோவா சபித்த விதத்தைப் பார்த்தால் அவருக்கு கோபமும் கசப்பும் உண்டாயிற்று என்று அறிந்து கொள்ளலாம். கோள் சொல்வதால் சந்ததி மேல் சாபம் வரும் ஆகையால் ஜனங்களுக்குள்ளே அங்குமிங்கும் கோள் சொல்லித் திரியாயாக (லேவி. 19:16).

கோள்காரன் ஒரு இடத்தில் கேட்டதை, கண்டதை வந்து சம்பந்தபட்டவர்களிடம் கெட்ட நோக்கத்தோடே சொல்கிறன் (நீதி. 17:9). கோள்காரனுடைய வாயிலிருந்து வெளிவரும் வார்த்தைகள் காயங்களுக்கு சமானம், கேட்கும் போது விளையாட்டு போல் தான் இருக்கும், ஆனால் அது உள்ளத்தின் ஆழத்திற்குள் சென்று தைக்கும்.

[The words of a tale bearer are as wounds and they go down into the inner most part of the belly -prov. 18:18].

ஆகவே கோள்காரனுடைய வார்த்தைகள் பிராண சிநேகிதரரையும் பிரித்து விடும் (நீதி. 16:28). சண்டைகளை உண்டு பண்ணும் (நீதி. 26:20).

தேவனுடைய பிள்ளைகள் கோள்காரனுடைய வார்த்தைகளுக்கு செவிகொடுக்கக் கூடாது. நல்ல மனிதன் கேட்டது கெட்ட காரியமானால் அதை மூடிப் போடுவான் கோள்காரன் காரியத்தைக் கெடுத்து போடுவான். உன் அயலான் பேரில் உனக்கு குறைபாடு இருந்தால், அதைக் குறித்து நேரடியாக அவனிடம் பேசு, சண்டை போடு, மற்றவனிடம் இரகசியத்தை வெளிப்படுத்தாதே. வெளிப்படுத்தினால் அவன் போய் கோள் மூட்டுவான், உனக்கு அவமானம் வரும் (நீதி. 25:9,10).

கோள் சொல்லாதே!

கோள்காரனுக்கு செவி கொடுக்காதே!

கோள்காரனிடம் இரகசியத்தை வெளியிடாதே!!

புறங்கூறுதல்: (Backbite)

To speak maliciously about a person (not present), the term implies that the statements are false and harmful to the person s character, hence slander.

புறங்கூறல் என்றால் ஒருவர் இல்லாத சமயம் அவரைப்பற்றி பொய்யான செய்தியைச் சொல்லி அவருடைய நல்ல பெயரை கெடுத்துப் போடுதலாகும். ஆகையால் அவதூறு பண்ணுதல் என்று அர்த்தம்.

பரிசேயர், சதுசேயர் என்பவர்களின் புளித்த மாவுக்கு எச்சரிக்கையாக இருங்

கள் (மத். 16:11) என்று சொன்னது புறங் கூறலாகாது. உதாரணமாக ஒரு வாலி பப் பெண், வழியிலே ஒரு துஷ்டனிடம் தொடர்பு வைத்திருப்பது தெரிய வந்தால், அதை அவள் கெட்டுப் போகாதிருக்க அவள் தகப்பன் தாயிடம் சொன்னால் அது புறங்கூறல் (அல்லது அவதூறு) அல்ல.

ஒரு பக்தியும் அடக்கமுள்ள பெண் ணைப்பற்றி அவள் கள்ளகாதல் பண்ணுகி ருள் என்று ஒரு பொய் செய்தியை பரப்பி விட்டால் அது புறங்கூறலாகும். இப்படி செய்வது மகா பெரிய பாவம். ஒரு கன் னிகையை, பெண் கேட்டு ஒரு மணவா ளன் வந்திருக்கையில், அவளைப் பற்றி தப்பான செய்தியை அவன் காதில் ஊத, இந்த பெண் வேண்டாமென்று சென்று விட, கன்னிகை அவமானம் தாங்காமல், தூக்கில் தொங்க, இரத்தப்பழி புறங்கூறி னவன் மேல் சுமரும். புறங்கூறுகிறவன் மரணத்திற்கு பாத்திரவானாக இருக்கிருன் (ரோ. 1:30). அவதூறு பண்ணுகிறவர் கள் திருந்தா விடில் கர்த்தர் பிறிப்போடு வார் (சங். 50:20-22). பிறனை இரகசிய மாய் அவதூறு பண்ணுகிறவனை கர்த்தர் சங்காரம் பண்ணுவார் (சங்.101:5). புறங் கூறுகிறவன் மதிகேடன் (நீதி. 10:10). தேவ ஜனமே புறங்கூறலை ஒழித்து விடுங் கள் (1 பேது. 2:2).

புறங்கூறாதே!

அவதூறு பண்ணாதே!

அயலான் மேல் சொல்லப்படும் நிந் தையான பேச்சை எடுக்காதே!

(தொடரும்.)

"தீய நோக்கம் பாவமாம்" நீதி. 24:9.

10-ம் பக்க சாட்சியின் தொடர்ச்சி.

(தடவிக் கொடுத்தல்) விட்டு விடவேண்டு மென்றும், நமது பார்வை எப்போதும் தேவனை தியானித்துக் கொண்டு மேலான காரியங்களையே நாட வேண்டும் என்றும் எனக்கு போதித்தார்.

இவ்விதமாக கர்த்தர் என்னுடைய காரி யங்களில் தலையிட்டு எப்போதும் சரி செய் கிறுர் அதற்காக என் தெய்வத்திற்கு நான் நன்றி செலுத்திக் கொள்கிறேன். சபையின் ஐக்கியம், தேவனேடு ஐக்கியம், தேவனேடு ஐக்கியமாயிருக்கும் வழியை புதிய எருச லேம் சபை தெளிவாகப் போதிக்கிறது நீங்களும் புதிய எருசலேம் சபையில் வந்து சேருங்கள் இந்த உன்னத அநுபவத்தை அடைவீர்கள்.

சித்தார்த்தன்
MADRAS.

"இரட்சிக்கப் படுகிறவர்களை கர்த்தர் அநுதினமும் சபையிலே சேர்த்துக் கொண்டு வந்தார் அப். 2:47.

"தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

# கானான் பாஷை. ஏசா. 19:18.

"அக்காலத்திலே எகிப்து தேசத்திலிருக்கும் ஐந்து பட்டணங்கள் கானான் பாஷையைப் பேசி சேனைகளின் கர்த்தரை முன்னிட்டு ஆணையிடும்" (ஏசா. 19:18).

பாஷை (Language) மனதில் தோன்றுவதை ஒலிவடிவினாலும், வரிவடிவினாலும் வெளிப்படுத்துகிறதே பாஷை எனப்படும். தேவன் மனிதனை மனம், புத்தி, சித்தம் அகங்காரத்தோடே உண்டாக்கினதுமன்றி, ஆதாம் மற்ற மிருக ஜீவன்களுக்கும் பேரிட்டுத் தேவனிடத்தில் பேசினதால் அவனைத் தேவன் பேசுகிறதற்குரிய வரத்துடனேயும் பிறப்பித்தாரென்று தோன்றுகிறது. ஜலப்பிரளயத்துக்கு முன் ஒரே பாஷை இருந்தது. இந்த பூர்வபாஷை எதுவென்று நமக்குத் தெரியாது. பாபேல் கோபுரம் கட்டப்படும் போது பாஷை தாறுமாறாகி பலபாஷைகளாகப் பிரிந்து போயிற்று (ஆதி. 11:1,7) பூமியில் ஏறக்குறைய 2000 பாஷைகள் உண்டாயிருக்கிறதாம். ஆனாலும் 860 பாஷைகள் மாத்திரம் தற்காலத்தில் பிரசித்தமாயிருக்கின்றன. அவைகளில் ஐரோப்பா கண்டத்தில் ஏறக்குறைய 52, ஆசியாவில் 153, ஆப்பிரிக்காவில் 115, அமெரிக்காவில் 509 ஆஸ்திரேலியாவில் சில பாஷைகளுமுண்டாம்.

கானான் பாஷை என்பது சத்திய வேதாகமம் (The Bible) ஆகும் (ஏசா. 19:18) சுத்தமான பாஷை என்றால் கடவுளுக்கு ஆராதனை செய்வதாகும். காண் செப். 3:9

# புதிய எருசலேம் செய்தி

**PUDHIYA YERUSALEM CHEIDHI**

எக்காளசத்தம் *115* - DEC. '93





"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்"

- மாற்கு 13 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

### பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

### இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

இறைவனாகிய இயேசு கிறிஸ்து பிறந்து 1993 ஆண்டுகளாகியும் கிறிஸ்துவை விசுவாசிக்கும் அநேகர் பாவத்திலும், மாய்மாலத்திலும், பாரம்பரியமாகிய அடிமைத்தனத்திலுமிருந்து விடுதலை பெறாமல் வேஷதாரிகளாயிருப்பது வருத்தமான காரியமே. இந்திய கிறிஸ்தவர்களில் பெரும்பாலானோர் உண்மையற்றவர்களாயிருக்கின்றார்கள். தங்கள் சகோதரர் இரட்சிக்கப்பட வேண்டும், அவனும் பரிசுத்தமடைய வேண்டுமென்று அவர்கள் உண்மையாய் எண்ணவில்லை. அப்படி எண்ணியிருந்தால் இன்று அநேக தேவ பக்தர்கள் தோன்றி இருந்திருப்பார்கள். நான் என் சகோதரனுக்கு காவலாளியோ என்று கேள்வி கேட்ட காயீனைப் போல இந்திய கிறிஸ்தவர்கள் சிலர் இருக்கிறார்கள் (ஆதி. 4:9). உண்மையான மதத்துக்கும், மாம்சீகமான மதத்திற்கும் அங்கேயே போராட்டம் துவங்கியது. ஆபேலுடைய பலி மெய் மார்க்கத்துக்கு உதாரணமாயிருக்கிறது. அது இறைவனால் அங்கீகரிக்கப்பட்டதினால் காயீன் பொறாமை கொண்டு தன் சகோதரனைக் கொன்று போடத் திட்டமிட்டான். மெய் மதத்தை அழித்து விடத் தீர்மானித்தான். அந்தப் போராட்டம் இந்த நாட்களில் உச்சக் கட்டத்தில் காணப்படுகிறது. தாங்கள் கூறுவது சத்தியம் என்று சாதிக்க முடியாதபடியினால் துன்மார்க்கர்கள் சத்தியத்தை அழித்துவிட, சமயம் கிடைத்தால் அடித்து விட, கொன்றுபோட பேயால் தூண்டப்பட்டுத் துடிக்கிறார்கள். இது கள்ள மார்க்கத்துக்கு அடையாளமாகும். முடிந்தால் அரசாங்க சட்டத்தை இயற்றி தடை செய்து விட முயற்சிக்கிறார்கள். இவைகளினாலே மெய்மார்க்கத்தை அடக்கிவிட முடியாது. அநேக ராஜ்யங்களும், ராஜாக்களும், அதிகாரிகளும் எழும்பி சத்திய வேதத்துக்கு, சத்திய மார்க்கத்துக்கு விரோதமாய் கிரியை செய்த போதிலும் அதை அழிக்க முடியாமற் போயிற்று. இனிமேலும் அழிக்க ஒருவராலும் கூடாது. இயேசு கிறிஸ்துவின் மார்க்கம் தெய்வீக மார்க்கமாகும். தேவன் இப்பூவுலகில் வந்து மனுமக்கள் பரலோகம் போகத்திறந்த வழியாகும். அது வரவரப் பிரகாசிக்கும். அநேகர் வெற்றியடைந்து இருக்கின்றனர், வெற்றியடைந்து கொண்டுமிருக்கின்ற பரிசுத்த வழியாகும் கிறிஸ்தவம். இது விசுவாச மார்க்கம், கிரியா மார்க்கமல்ல. இயேசு கிறிஸ்துவை விசுவாசியுங்கள். கிறிஸ்துவின் பிறப்பின் பண்டிகை உங்களுடைய உள்ளத்திலேயும் கிறிஸ்து பிறக்க இடங் கொடுங்கள். உங்களுக்கும் சந்தோஷமுண்டாகும்.

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

கிறிஸ்துமஸ் செய்தி

# அரசன் ஆண்டியானான் ஆண்டிகளை அரசர்களாக்க.

"அவர் ஐசுவரியமுள்ளவராயிருந்தும் நீங்கள் அவருடைய தரித்திரத்தினாலே ஐசுவரியமுள்ளவர்களாகும்படி உங்கள் நிமித்தம் தரித்திரரானாரே" 2 கொரி. 8:9.

இங்கிலாந்து தேசத்து அரசி ஒருநாள் ஒரு இடத்திற்கு தனியே போய் விட்டு நகரத்தின் தெரு வழியாய் நடந்து வந்து கொண்டிருந்தார்கள். போகிறவர்களும் வருகிறவர்களும் அநேகராயிருந்தார்கள். மழையும் பெய்து கொண்டிருந்தது. உதவி ஆட்களும் இல்லை, குடையும் இல்லை, யாரும் உதவி செய்யவோ கவனிக்கவோ இல்லை.

ஒரு ஏழை விதவை அம்மா அவர்கள் அரசி மழையில் நனைந்து கொண்டு செல்வதைக் கண்டு அவர்களை வருந்தி தன் வீட்டுக்கு அழைத்து ஈரம் போகத் துவட்டி உடை மாற்ற ஒரு பழைய சேலை கொடுத்து, சூடான பானமும் குடிக்கக் கொடுத்து, பழைய குடை ஒன்றையும் அவருக்குக் கொடுத்து உதவி செய்து வழியனுப்பி வைத்தார்கள். தான் இவ்விதமாக உதவி செய்தது தேசத்தின் அரசி என்று அந்த மூதாட்டிக்குத் தெரியாது.

சில நாட்கள் கழித்து, அரண்மனையிலிருந்து பாட்டியம்மாவுக்கு அழைப்பு வந்தது. காவலர்களும் அதிகாரிகளும் வந்து அந்தப் பாட்டியை இரதத்தில் ஏற்றி அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர். அங்கே அரண்மனை சென்றதும், ராணி ஓடோடி வந்து அந்தப் பாட்டியை வரவேற்று அழைத்துச் சென்று ஓர் ஆசனத்தில் அமரச் செய்தார்கள்.

அப்பொழுது தான் பாட்டி கவனித்தார். தான் அன்று உதவி செய்தது இந்த அம்மாவே என்று அவருக்கு மிகவும் அதிர்ச்சியாகப் போய் விட்டது. ராணி அந்த பாட்டியைப் பார்த்து கீழ்க் காணுமாறு கூறினார்கள்: "அன்று நீங்கள் மழைக்கு பாதுகாப்பு அளித்து குடை தந்து உதவியமைக்கு மிகுந்த நன்றி; நீங்கள் எனக்குத் தந்த குடைக்கு பதில் குடை தருகிறேன் என்று ஒரு தங்கக் குடையையும், இன்னும் பல சன்மானங்களையும் அந்தப் பாட்டிக்கு அளித்து அவருடைய வாழ்க்கைக்கு வேண்டிய சகல வசதிகளையும் செய்து அவர்களைக் கனம் பண்ணினார்கள்.

அப்படிப் போல, ஏழைகளான நம்மை தேவர்களாக்கும்படி, ஐசுவரியவான்களாக்கும்படி சர்வலோக சிருஷ்டிக் கர்த்தாவாகிய எல்லா சம்பூரணத்தையும் உடையவராகிய தேவன் நமது நிமித்தம் ஏழை மனிதனானார். அவருடைய புறப்படுதல் பூர்வ காலத்தினுடையது என்றும், இறைவன் இப்படி மனிதனாய் பெத்லகேமில் பிறப்பார் என்றும் மீகா தீர்க்கதரிசி பல நூற்றாண்டுகளுக்கு முன்னமே அவரைக் குறித்து முன்னறிவித்தார் (மீகா. 5:2).

இறைவன் இந்த உலகத்திற்கு மனிதனாக வந்தார். ஒரு ஏழையாகப் பிறந்தார். ஏழையாகவே ஜீவித்தார். ஒரு ஏழையாகவே மரித்தார். ஆனால், அவர் அடக்கம் பண்ணப் பட்டபோது, ஐசுவரியவானுடைய கல்லறையில் அடக்கம் பண்ணப்பட்டார். ஆர்ப்பாட்டமில்லாமல், ஒரு சத்திரத்தின் பின்புறம் மாட்டுத் தொழுவத்தில் புல்லணையில் பிறந்தார். ஏழை மனித ஜாதியான நமக்காக அவர் பிறந்தார்.

அவருடைய பிறப்பினால் அவரை விசுவாசித்த என்னிறந்தோர்

ஐசுவரியமுள்ளவர்களாய் பாவத்திலிருந்து விடுவிக்கப்பட்டு விசுவாசத்தில் ஐசுவரியமுள்ளவர்களாய் மாறியுள்ளனர், மாறுகின்றனர். வறுமை நீங்கி உயர்வான வாழ்வை அடைந்துள்ளனர்.

படிப்பின்மையும் அறிவீனமும் நீங்கி கல்விமான்களாகியுள்ளனர். கீழ் நிலையிலிருந்து மேல் நிலைக்குள்ளாகியுள்ளனர். அடிமைத்தனத்திலிருந்து விடுதலையாகி சுயாதீனமுள்ளவர்களாகியிருக்கின்றனர். புழுதியிலிருந்தவர்கள் பிரபுக்களோடு உட்காருகிறார்கள். பலவிதமான அடிமைத்தனத்திலும், நெருக்கடியிலும் இருந்த மக்கள் உயர்த்தப்பட்டு தெய்வீகநிலையடைந்து உலகில் தலை சிறந்த நற்காரியங்களை நிகழ்த்தியுள்ளனர். பாரம்பரியத்திலும் அறிவீனத்திலும் கட்டுண்டிருந்த மக்கள் விடுதலையாகி, ஞானிகளாக மாறியுள்ளனர். பரமபிதாவின் பிள்ளைகளாகியுள்ளனர். என்னே! இயேசுவின் மகிமை!

இயேசு இப்பூலோகத்தில் வந்திராவிட்டால் காட்டு மிராண்டிகள் காட்டு மிராண்டிகளாகவே இருந்திருப்பார்கள். ஆடையில்லாதவர்கள் அரை நிர்வாணமாய் வாழ்ந்து கொண்டிருப்பார்கள். ஜாதிக்கொடுமையால் மனிதர்கள் மிருகங்களைப்போலவே வாழ்ந்திருப்பார்கள். அறிவிலிகளாக, குருடர்களாக, செவிடர்களாக, பொக்கை வாயினராக அநாகரிகமுள்ளவர்களாக, பாபிஸ்டிகளாகவே இருந்திருப்பார்கள். கோவணம் கட்டிக் கொண்டு மாட்டு வண்டியில் பிரயாணம் செய்து கொண்டு இந்தியாவிலுள்ள 56 குட்டி தேசங்களே உலகமென்று எண்ணி அறிவுப் பஞ்சத்தையும், உலகத் தொடர்பின்றி கற்றுக் குட்டிகளாய் கதைத்துத் திரிந்து இருப்பார்கள்.

இயேசு கிறிஸ்து பரலோகத்திலிருந்து நமக்காக வந்தபடியினால்தான் நாமும் இந்த உலகத்தில் உய்வெய்தியுள்ளோம். உலகத்தில் தோன்றிய எந்த நல்முயற்சிகளுக்கும் ஆரம்பம் கிறிஸ்தவமே. அச்சுக்கலையாயிருக்கட்டும், கல்வியாயிருக்கட்டும், ஞான ஐசுவரியமாகயிருக்கட்டும், பரிசுத்தமாயிருக்கட்டும், இரட்சிப்பாயிருக்கட்டும் அவரை விசுவாசிக்கிறதினால் மனுமக்கள் உலகப் பிரகாரமாகவும், சரீரப் பிரகாரமாகவும் ஆவிக்குரிய பிரகாரமாகமாகவும், தேவ பெலனும், தேவ ஞானமும் உடையவர்களாய் மாறுகின்றனர்.

உங்களுக்காக கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் பிறந்துள்ளார். அவர் ராஜா. அவரைத் தொழுது கொள்ளுங்கள். உங்கள் தரித்திரம் போகும், சாபம் போகும் பாவம் போகும் வியாதி போகும், அறிவீனம் போகும், அகம்பாவம் போகும். இருள் நீங்கி அருள் பொழியும். உங்கள் நிமித்தம் இயேசு பெத்லெகேமில் பிறந்துள்ளார்.

ஆம் தம்மைப்போல் உங்களையும் என்னையும் மாற்றும்படி நம்மைப் போல் அவர் இந்த உலகத்தில் ஏழை மனிதனாய்ப் பிறந்தார். அவர் ஐசுவரியமுள்ளவராயிருந்தும் நமது நிமித்தம் தரித்திரராய் இந்த உலகத்தில் தோன்றினது அவருடைய சுத்த கிருபையே.

உலகமெங்குமுள்ள தரித்திரராகிய மனிதர் அவரை விசுவாசித்து ஆவிக்குரியப் பிரகாரமாகவும், சரீரப் பிரகாரமாகவும் ஐசுவரியவான்களாய் மாறிக் கொண்டிருக்கின்றனர்.

இதோ இயேசு கிறிஸ்து பிறந்து விட்டார். நீயும் விசுவாசி நீயும் தெய்வ நிலையடையலாம்.

அவள் ஒரு குமாரனைப் பெறுவாள், அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக; ஏனெனில் அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார் என்றான். மத். 1:21.

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

### எண். 14 5.

மோசேயும் ஆரோனும் ஜனங்களுக்கு முன்பாக முகங்குப்புற விழுந்தார்கள்
என்று வாசிக்கிறோம். ஆம். நெருக்கடியான நிலையில் மோசேயும்
ஆரோனும் காணப்படுகிறார்கள். அவர்களுக்கு வருத்தம் உண்டாயிற்று (6–9).
இந்த சமயத்தில் யோசுவாவும் காலேபும் மிகவும் தைரியமாய் விசுவாசத்துக்குரிய
வார்த்தைகளைப் பேசி ஜனங்களை திடப்படுத்துகிறார்கள். நாங்கள் போய் சுற்றிப்
பார்த்து விட்டு வந்த தேசம் நல்ல தேசம்தான். கர்த்தர் நம்மேல் பிரியமாயிருக்கிறார்.
அது பாலும் தேனும் ஓடும் தேசம். கர்த்தர் சொன்ன வார்த்தையின் பிரகாரம் அது
நல்ல தேசம். கர்த்தருக்கு விரோதமாய்க் கலகம் பண்ணினார்கள். நீங்கள் அவர்க
ளுக்குப் பயப்பட வேண்டாம். அந்த ஆட்களைப் பற்றியோ, யுத்தத்தைப் பற்றியோ
தோல்வியைப் பற்றியோ பயப்பட வேண்டாம். கர்த்தர் நம்மோடிருக்கிறார். உங்
களால் சுதந்தரித்துக் கொள்ள முடியும் புறப்படுவோம் யுத்தத்திற்கு என்றார்கள்
(எண். 13:30).

உண்மையுள்ள தலைவர்கள், விசுவாசிகள், தைரியமானவர்கள் இப்படிப் பட்ட
வர்களே இறைவனுக்குத் தேவை.

### எண். 14:10

ஆனால் இஸ்ரவேலர்கள் யோசுவா காலேப் சொன்ன வார்த்தைகளை விசுவா
சிக்கவில்லை. அதோடுகூட அவர்களைக் கல்லெறிய வேண்டுமென்று சொல்லிக்
கொண்டார்கள். உண்மையான ஊழியக்காரர்கள் சில வேளைகளில் அவமானப்
படுத்தப் படுகிறதுண்டு. கடவுளுடைய வார்த்தையை விசுவாசிக்கவில்லை, உண்மை
யான ஊழியர்களுடைய வார்த்தையையும் விசுவாசிக்கவில்லை. தங்களுடைய உண்
மையான தலைவர்களையும் கொல்லும்படியாக அவர்கள் எண்ண ஆரம்பித்தார்கள்.
இருதயத்திலே அவர்கள் பின்மாறினார்கள் என்று அறிந்து கொள்கிறோம். உடனே
கர்த்தருடைய மகிமை ஆசரிப்பு கூடாரத்தில் இறங்கிற்று. இஸ்ரவேலர்கள் எல்
லாருக்கு முன்பாக அது காணப்பட்டது. கர்த்தர் மோசேயோடு கூடப் பேசினார்
(10,12). இரண்டாம் முறை இஸ்ரவேலர்களை அழித்துப் போட மோசேயிடம் இவ்
விதமாய்ச் சொன்னார்: இந்த ஜனங்களிடத்தில் எவ்வளவு காலம் பொறுமையாயி
ருப்பேன். இவர்களை அழித்துப் போட்டு உன்னை பெரிய ஜாதியாக்குவேன். அவர்
களைப் பார்க்கிலும் பெரிதும் பலத்ததுமான ஜாதியாக மாற்றுவேன் என்றார்.

### எண். 14:13-20.

மோசே மறுபடியும் தேவனுடைய கோபத்தை மாற்றுகிறார். இது இரண்டா
வது சம்பவம். மோசே கர்த்தருடைய மகிமையைச் சொல்லி, கர்த்தர் அவர்களை
அழித்துப் போட்டால் இஸ்ரவேல் ஜனங்களை கானான் கொண்டு போய்ச் சேர்க்க கர்த்
தருக்கு வல்லமை இல்லாதபடியால் வழியிலே அவர்களை அழித்துப் போட்டார் என்று

உம்முடைய நாமத்தைக் குறை சொல்வார்கள். நீர் இந்த ஜனங்களுக்கு மன்னித்து வந்தபடியே இப்பவும் அவர்களுக்கு மன்னிக்க வேண்டும். ஆனபடியினால், தேவரீர் இந்த ஜனங்களுக்குக் கிருபை செய்து உமது மகத்துவத்தின் படியே மன்னித்தருளும் என்று விண்ணப்பம் பண்ணினார். அப்பொழுது கர்த்தர் உன் வார்த்தையின் படியே மன்னித்தேன் என்றார் (வச. 20).

கடவுள், தம்மால் அபிஷேகிக்கப்பட்டு நியமிக்கப்பட்ட தலைவர்களுடைய ஜெபத்தைக் கேட்டு மக்களுடைய பாவத்தை மன்னிக்கிறார். மக்கள் மெய்யாய் மனந்திரும்பி, கிறிஸ்துவை விசுவாசித்து பாவ அறிக்கை செய்தால் மன்னிப்பை பெற்றுக் கொள்ளலாம். மன்னிப்புண்டாக பாவத்தை அறிக்கை செய்ய வேண்டும் (1 யோ. 1:9; நீதி. 28:13; அப். 19:18). ஒரு மனிதனுடைய சொல்லைக் கேட்டு கர்த்தர் மக்களின் பாவத்தை மன்னிக்கிற சம்பவங்களை வேதாகமத்தில் பல இடங்களில் காண்கிறோம். சிலர் பாவங்களை மன்னிக்க மனிதனுக்கு அதிகாரமில்லை என்று சொல்லித் திரிகிறார்கள். பாவங்களை மன்னிக்கிறதல்ல, பாவ மன்னிப்பை வாங்கி அருளுகிறதே ஊழியனுடைய கடமை. கர்த்தர் ஊழியர்கள் மூலமாய் தம்முடைய மன்னிப்பை அருளுகிறார்.

### எண். 14:21.

பூமியெங்கும் கர்த்தருடைய மகிமையினால் நிறைந்திருக்கும் என்று என்னுடைய ஜீவனைக் கொண்டு சொல்கிறேன். ஆயிர வருஷ அரசாட்சியில் பூமி எல்லாம் கர்த்தருடைய மகிமையினால் நிறைந்திருக்கும்.

### எண். 14:22-25.

இஸ்ரவேலர்கள் தேவனுக்கு விரோதமாய் முறுமுறுத்தபடியினால் தேவன் அவர்கள் மேல் தம்முடைய ஆக்கினையைக் கூறுகிறார்: இதோடு பத்து தடவை பரீட்சை பார்த்தார்கள் என்று கர்த்தர் சொல்கிறார். ஆனாலும் மேலும் இப்பொழுது இவர்கள் நாங்கள் வனாந்தரத்தில் செத்தால் தாவிலை என்று சொன்னார்கள். அவர்கள் வார்த்தையின்படி ஆகக்கடவது (எண். 14:28).

எனக்கு கோபமுண்டாக்கின ஒருவரும் நான் அவர்கள் பிதாக்களுக்கு வாக்களுளின தேசத்தைக் காண்பதில்லை. அவர்கள் வனாந்தரத்தில் சாவார்கள். அவர்களுடைய சவங்கள் இந்த வனாந்தரத்திலே விழும். நான் ஆணையிட்ட தேசத்தில் பிரவேசிப்பதில்லை (29,30). எங்களுடைய மனைவி பிள்ளைகளை கொள்ளையாக்கும்படி கொண்டு வந்தார்கள் என்று அவர்கள் சொன்னார்கள். ஆனபடியினால் அவர்கள் மனைவிகளும், பிள்ளைகளும் நான் வாக்களுளின தேசத்தில் போய்ச் சேர்வார்கள். இவர்களோ அத்தேசத்தை காண்பதில்லை என்று கர்த்தர் சொல்லி திரும்பிக் கொண்டு வனாந்திர மார்க்கமாய் நடங்கள் என்று சொல்லி அவர்களைத் திருப்பி சிவந்த சமுத்திரத்தின் வழியாய் நடக்கக் கட்டளையிட்டார்.

### எண். 14:26-35: ஜனங்கள் மத்தியில் துர்ச்செய்தி சொன்ன, அதைக் கேட்டவர்களின் முடிவு:

மேலும் அவர்கள் நாற்பது நாட்கள் தேசத்தைச் சுற்றிப் பார்த்தார்கள். ஆனபடியினால், நாற்பது வருஷம் அவர்களுடைய பாவத்தைச் சுமந்து வனாந்தரத்தில்

அலையப்பண்ணுவேன் என்று கர்த்தர் சொன்னார். என் தாசனாகிய காலேபும், யோசுவாவும் அதற்குள் பிரவேசிப்பார்கள் (வச. 30). மற்றவர்கள் தங்கள் பாவத்தைச் சுமந்து தீர்வார்கள். இந்த வனாந்தரத்தில் அவர்கள் சவங்கள் விழும் என்றார்.

எண். 14:36-37.

தேசத்தைச் சுற்றிப் பார்த்து வந்து துர்ச்செய்தி பரப்பின அந்த பத்து பேரும் அங்கே கர்த்தருடைய சந்நிதானத்தில் வாதையினால் செத்தார்கள். அவர்கள் விழுந்து செத்துப் போனார்கள்.

எண். 14:38.

யோசுவாவும், காலேபும் மட்டும் உயிரோடிருந்தார்கள். நற்செய்தி சொன்ன, நல்ல வார்த்தை சொன்ன, விசுவாசமான வார்த்தை சொன்ன, கர்த்தருக்காக தைரியமாக நின்ற அவர்களுக்கு அவர்கள் ஜீவன் வெகுமதியாக அருளப்பட்டது.

எண். 14:39-40: இஸ்ரவேலர்களின் மாயமான மனந்திரும்புதல்.

நாங்கள் கர்த்தருக்கு விரோதமாய் பாவம் செய்தோம் என்று சொல்லி அதிகாலமே எழுந்து வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட தேசத்துக்கு நாங்கள் போவோம் என்று மலையிலே ஏறத்துணிந்தார்கள். தாங்கள் பாவத்தை விட்டு மனந்திரும்புவதாக நடித்தார்கள். மோசே எச்சரித்தார். நீங்கள் கர்த்தருடைய கட்டளையை மீறுகிறதென்ன அது உங்களுக்கு வாய்க்காது. கர்த்தர் உங்கள் மத்தியில் இல்லை ஆனபடியினாலே, திரும்பி நடவுங்கள், நீங்கள் யுத்தத்துக்குப் போனால் பட்டயத்தினால் விழுவீர்கள். கர்த்தர் உங்களோடே இருக்க மாட்டார். மோசேயும் கூடச் செல்லவில்லை. கர்த்தருடைய பெட்டியும் செல்லவில்லை. ஆனால் இஸ்ரவேலர்கள் கர்த்தர் வாக்குத்தத்தம் பண்ணின தேசத்தை நாங்கள் சுதந்தரிக்கப் போகிறோம் என்று மலையின் மேல் ஏறினார்கள். அங்கே மலையிலிருந்த அமலேக்கியரும், கானானியரும் இவர்களை எதிர்த்து வந்து முறியடித்து ஓர்மா மட்டும் துரத்தினார்கள் (வசனம் 45).

கடவுளுடைய ஆலோசனையை மீறி, அவருடைய ஆதரவின்றி அவருடைய துணையின்றி, அவருடைய பரிசுத்த தலைவர்களுடைய துணையின்றி வெற்றியடைய முடியாதென்று இந்த வேத பாகம் நமக்குக் காண்பிக்கின்றது. குதிரை யுத்த நாளுக்காக ஆயத்தம் பண்ணப்படும், ஜெயமோ கர்த்தரால் வரும். நாம் விசுவாசித்தால், எல்லாவற்றிலும் ஜெயமடைவோம். நாம் கர்த்தரையும் அவருடைய வார்த்தையையும் விசுவாசிக்க வேண்டும்.

[தொடரும்].



"நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறது போல நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாயிருங்கள்" 1 கொரி. 11:1.



# கழுதை கெட்டால் கட்ட மண்ணிலே

மார்த்தாண்டத்தில் பிரமாதமாக பாடல் களோடு நடந்த கன்வென்ஷனில் மலை யான பிரசங்கியாரைக் கொண்டு வந்து மழைமாரி வசைமாரி பொழிந்தனர் IPC காரர்கள். மார்த்தாண்டம் IPC காரர்க ளுக்கு புதிய எருசலேம் சபையாரைப் பற்றி என்ன தெரிந்ததோ தெரியவில்லை புதிய எருசலேம் சபைக்காரர்கள் வந்தி ருக்கிறார்கள் என்று தெரிந்ததும் புழுதி வாறி இறைத்தார்கள்.

பாவ அறிக்கை மனிதனிடம் செய்யக் கூடாது. அதாவது செய்கிற பாவங்களை செய்து கொண்டு கடவுளிடம் சொல்லிக் கொண்டே இருந்தால் போதும். யாரா வது மனிதனிடம் பாவ அறிக்கை செய் ததாக ஆதாரம் காட்ட முடியுமா? பாவ அறிக்கை உபதேசம் பிழையான உப தேசம், புதிய எருசலேம் பூமியில் கிடை யாது; அப்படியே வேதத்தில் இல்லை; பாவ அறிக்கை உபதேசமும் வேதத்தில் இல்லை. யாராவது இதற்கு மறுப்பு தெரி வித்தால் நாங்கள் சரியாய் அதற்கு பதில் சொல்லத் தயார். அல்லது சரி செய்து கொள்கிறோம் என்று கன்வென்ஷனில் முழங்கித் தீர்த்தார்.

அவர் மேடையை விட்டு இறங்கின உடனே புதிய எருசலேம் சபை விசுவாசி சுதாகர், பிரசங்கியாரை சந்தித்து நீங்கள் கூறிய உபதேசம் தவறு. உங்களுக்கு வேதம் விளங்கவில்லை, நான் கேட்கிற கேள்விகளுக்கு பதில் கொடுங்கள் எனக் கேட்க, போதகர்களுக்கு தர்ம சங்கட மாகி விட்டது. கூடி நின்ற ஜனங்களும் அது சரிதான். சத்தியத்தை அறிய வேண் டியது அவசியம் என்று சொல்ல ஆரம் பித்தனர்.

கடைசியில் கன்வென்ஷன் பிரசங்கி யார் சரி பிரதர். நீங்கள் சின்ன பையன் உங்கள் போதகர்களைக் கூட்டி வாருங் கள்; ஒருநாள் சத்தியத்தைக் குறித்துப் பேசி உங்கள் சத்தியம் தவறு என்று நிரூபிக்கிறோம் என்று சொல்ல, அது நல் லது தான், நீங்கள் கூறியதின்படி நாங்கள் கூறுவது சத்தியம் என்றால் நீங்கள் ஏற் றுக் கொள்வீர்களா என்று புதிய எரு சலேம் சபை விசுவாசி சொல்ல, சரி பிரதர் என்று அவர்கள் கூறி ஒருநாள் கூடும்படியாக, ஊழியர்களைக் கூட்டி வரும்படியாகச் சொல்லி ஒருவாறாகக் கடந்து சென்றனர்.

IPC காரர்களோடு சேர்ந்த ஞான சேகர் என்று சொல்லப்படுகிற யேகோவா சாட்சிக்காரர் (Jehovah witness) இன்னும் குடியையும், விபசாரத்தையும் விட்டபா டில்லை. இவர் ஒரு பச்சை மாமிசம், இன்னும் இரட்சிக்கப்படவில்லை. சுத்த சுவிசேஷத்தோடு நாங்கள் திரிகிறோம் என்று சொல்லிக் கொண்டிருக்கிற IPC காரர்களுக்கு போதகர் இப்பொழுது அவர் தான். IPC காரர்களுக்கு ஞான சேகர் கிடைத்ததும் குஷி ஏற்பட்டு அவரைத் தூண்டிவிட, ஞான சேகர், என்ன உங் கள் பாஸ்டர்களை இப்போ வரச்சொல் பார்க்கலாம்; உண்மையான சபை என் றால், சத்தியம் என்றால் இப்பொழுது வர வேண்டியது தானே உங்கள் பாஸ்டர்கள் என்று அவர் வானத்துக்கும், பூமிக்கும் குதிக்க ஆக மொத்தத்தில் சலசலப்புக்கு அஞ்சாத புதிய எருசலேம் சபையினர் மார்த்தாண்டம் IPC காரர்களுக்கு செய்தி அனுப்பி பாஸ்டர் S. சுந்தர்ராஜ் தலைமை யில் மார்த்தாண்டத்தில் ஒரு நாள் கூடி னார்கள். புதிய எருசலேம் சபை ஊழியர் களும், மார்த்தாண்டம் IPC காரர்களும், அவர்களுக்குத் தெரிந்தவர்களும் சேர்ந்து சத்தியத்தைக் குறித்து பேச அமர்ந்தனர்.

இரட்சிப்பைப் பற்றியும் சத்தியத்தைப் பற்றியும் புதிய எருசலேம் சபையார் கேள்வி கேட்க ஒரு மனிதன் இரட்சிக்கபபடுவது எப்பொழுது? இரட்சிப்பு என்றால் என்ன என்று கேட்க IPC காரர்கள் ஒருவர் ஒரு விதமாயும் இன்னொருவர் இன்னொரு விதமாயும் இப்படியும், அப்படியும் சொல்ல, கடைசியில் IPC காரர்கள் பாவ மன்னிப்பின் உபதேசத்துக்கு வர பாவ மன்னிப்பின் உபதேசம், பாவ அறிக்கை எங்கே எப்படி செய்ய வேண்டும் என்பதை புதிய எருசலேம் சபைக்காரர்கள் விளக்க, ஆக மொத்தத்தில் IPC காரரில் ஒருவர் அந்தக் காலத்தில் இருந்த அப்போஸ்தலனுக்கு பாவ மன்னிப்பின் அதிகாரம் உண்டு, உங்கள் தலைமை என்ன அப்போஸ்தலனா என்று கேட்க, ஆமாம், என்று இவர்கள் சொல்லி, ஆவியில் நிரம்பி அதிகாரத்தைக் காண்பிக்க, ஆக பேச்சில் தோல்வியடைந்த IPC காரர்கள் ஒவ்வொருவராக அங்கிருந்து எழுந்து சொல்லாமல் வெளியேறித் தோற்று ஓடிப் போய் விட்டனர்.

கடைசியில் அவர்கள் அவமானமடைந்தபடியினாலே இந்த ஞான சேகரிடம் ஒரு பெரிய அசுத்த ஆவி இருக்கிறது. நம்மெல்லாரையும் புதிய எருசலேம் சபையாரிடம் இழுத்துக் கொண்டு போய் அவமானப் படுத்திவிட்டது சே: சே! வயதானவர்கள், பெரிய பெரிய வேத பண்டிதர்கள் இருக்கிறார்களே அழைத்து வராமல் போனேமே என்று அங்கலாய்த்துக் கொண்டார்களாம்.

இப்படியிருக்க, பிள்ளையார் குளத்தில் உள்ள IPC கிழட்டு ஊழியர் ஒருவர் மார்த்தாண்டத்துக்கு வர, அட! புதிய எருசலேமா! புதிய எருசலேம் Chief Pastor ஐத் தெரியாதா? அவர் இன்ன ஜாதி. ஊர் சாத்தான் குளம் பக்கம் புதிய எருசலேமில் உள்ளவர்கள் எல்லாம் யார் யார் என்று தெரியாதா? நாம் நாடார் ஜாதி. இது தான் சுத்த சுவிசேஷம் என்று ஜாதிப் பேயால் வாதிக்கபபட்டு உள்ள IPC காரர்களுக்கு ரொம்ப குஷியாய்ப் போய் விட்டதாம்.

நாயிலேயும் ஜாதியுண்டு. பேயிலேயும் ஜாதியுண்டு. சத்தியத்தைப் பேசி, சத்தியத்தில் நடக்க முடியாத இந்த ஜாதிப் பேய் பிடித்தவர்கள் கடைசியில் கட்ட மண்ணிலே போய் தான் நின்றார்கள். பிசாசின் மகனே! நீதிக்கெல்லாம் பகைஞனே, தேவனுடைய மார்க்கத்தைப் புரட்டுவதில் ஓயமாட்டாயோ? கழுதை கெட்டால் கட்ட மண்ணிலே போய் நிற்கும் என்று சொன்னது சரியாய்ப் போய் விட்டதே.

புதிய எருசலேமியராகிய நாங்கள் பரம பிதாவின் பிள்ளைகள். மேடையிட்டுப் பேசுவோமா? நீங்கள் ஆயத்தமா? சவால் விட்டு கூப்பிட்டு சத்தியத்தைக் கண்டு கொண்டும், சத்தியத்தை ஏற்றுக் கொள்ள மனதில்லாமல் பதஷ்டமாய் வந்து தோல்வியடைந்து ஓடிப் போனது மாத்திரமல்ல, பிதற்றித் திரிகிறீர்களா? மேடையிட்டுப் பேசுவோமா? நீங்கள் முந்திப் பேசுங்கள் நாங்கள் பிந்திப் பேசுகிறோம் சவாலை ஏற்றுக்கொள்ள யாராவது தயாரா? தலைமை சபைக்கு எழுதவும். மேடை அமைத்து விட்டு நீங்கள் எங்களை அழையுங்கள். அல்லது நாங்கள் உங்களை அழைக்கிறோம்.

ஏற்கெனவே ஒரு கழுதை புதிய எருசலேம் சபையின் ஊழியர்களை மஞ்சவிளையில் மேடையில் தூஷணமாய்ப் பேசி ஊழியர்களை ஜாதிப் பெயர் சொல்லி திட்டினதினிமித்தம் மேடையில் தானே சிட்சிக்கப்பட்டு taxi யில் போடப்பட்டு கொண்டு வந்து டோனவூரிலே மல்லாக்கப்படுத்து பின்பக்கமெல்லாம் அழுகி, குப்புறப்படுத்து முன்பக்கமெல்லாம் அழுகி, ஒரு சாய்ந்து படுத்து இருபக்கமும் அழுகி துர்நாற்றமடைந்து இரத்த பேதியினாலே ஒன்றரை மாதம் சிட்சையில் கிடந்து

அழுகி செத்துப் போய்விட்டது. அது தனக்குரிய இடத்துக்குப் போயிருக்கும். இன்னும் சிலர் சத்தியத்துக்கு எதிர்த்து நின்று புதிய எருசலேம் சபையை தூஷித்ததினிமித்தம் தங்களுடைய ஊழியத்தையும், சிலர் உயிரையும், சிலர் தங்களுடைய சபையையும் இழந்து போனார்கள். இதை மக்கள் அறிய வேண்டும்.

நீ ஏன் சாக வேண்டும்? நீ மனந்திரும்பி மெய்க் கிறிஸ்தவனாக மாறு. மக்களை வஞ்சிக்காதே. புல்லுருவிகளைப் போல கிறிஸ்தவ மதத்தில் ஒட்டிக் கொண்டு, அதன் சாரத்தையும் நன்மையையும் உறிந்து கொண்டு, மரத்தைக் கெடுக்கிற புல்லுருவியாயிராதே. மெய்க் கிறிஸ்தவனாகு. கழுதை கெட்டால் கட்ட மண்ணிலே, அதாவது கழுதை கெட்டுப் போய் விட்டால், கழுதையைத் தேடினால் அது எங்கேயாவது இடிந்த விட்டு கட்ட மண்ணிலே போய்ப் படுத்திருக்கும். அங்கே போய் கண்டு பிடிக்க வேண்டும். இந்தக் கள்ளக் கிறிஸ்தவர்கள் கெட்டால் ஜாதியிலே போய் நிற்பான். நீ எப்படி?

நாங்கள் ஒரே ஜாதி; தேவ ஜாதி. பரம பிதாவின் பிள்ளைகள். ஆமென்!

"பொய்ச் சாட்சிக்காரன் ஆக்கினைக்குத் தப்பான்; பொய்களைப் பேசுகிறவன் நாசமடைவான்" நீதி 19:9.

## நல்ல நாவு

[தொடர்ச்சி]

இச்சகம் பேசுதல் அல்லது முகஸ்துதி (Flattering)

Flattering means praising insincerely.

அதாவது உள்ளத்தில் விஷம் வைத்துக்கொண்டு, வாயில் தேன் ஒழுகுவது போல் பேசுதலாகும். தேனல்லவா என்று ஆவலாய்ச் சாப்பிட்டால், உள்ளிருந்து விஷம் தேனோடு கலந்து உயிரைக் குடிக்கும். இச்சகம் பேசுதல் அல்லது முகஸ்துதிபண்ணுதல் தூண்டிலில் பொருத்தியுள்ள மாம்சத்திற்கும், வேடனுடைய கண்ணிகளுக்குமிடையே போடப்பட்டுள்ள தீனிக்கும் ஒப்பாக இருக்கிறது. இச்சகம் பேசுகிறவர்கள் இருமனதாய்ப் பேசுகிறார்கள் (சங். 12:2). உள்ளத்தில் கேடுபாடு வைத்துக் கொண்டு, தொண்டையை பிரேதக்குழி போலாக்கி, வாயினால் மு னக்காக உயிரையே கொடுக்க ஆயத்தம் என்று பேசுகிறவர்களை கர்த்தர் குற்றவாளிகளாகத் தீர்ப்பார். தங்கள் ஆலோசனையில் விழுவார்கள் (சங். 5:9,10). சமாதானப்பலிகள் என்மேல் சுமந்தது, உன்னை சந்திக்கவே புறப்பட்டு வந்தேன் உன் முகத்தை ஆவலோடே தேடினேன். இப்பொழுது உன்னைக் கண்டுபிடித்தேன், இப்படி வசப்படுத்தும் வார்த்தைகள் வேசியின் வாயிலுண்டு (நீதி. 7:14-23). இந்தப் பேச்சு வெள்ளிப் பூச்சு பூசிய ஓட்டுக்கு ஒப்பானது (நீதி. 26:23). இச்சகப் பேச்சு இறைவனுக்கு ஏற்காது. உண்டாக்கினவர் அவனை சீக்கிரம் எடுத்துக் கொள்வார் (யோபு 32:11,22).

இருமனதாய் இச்சகம் பேசாதே!

முகஸ்துதி பண்ணாதே!

இந்தப்பேச்சு இதமானாலும் நம்பாதே!

பெருமை பேசுதல்: (Boasting)

நாவு சிறிய அவயவந்தான் ஆனல் எவ்வளவு பெருமையானவைகளைப் பேசி விடுகிறது பாருங்கள் (யாக். 3:3). தேவ ஆவியானவர் தேவ மனிதனை ஆட்கொள்ள, அவன் இருதயம் நல்விசேஷத்தினுல் பொங்க அவன் பரலோக ராஜாவைக் குறித்துக் கவிபாடி, அவரைப் புகழ்வான் (சங். 45:1,2). தன்னைக் குறித்து பெருமையாய் பேசிக் கொள்கிறவனுக்கு அவனே ஆண்டவன் (சங். 12:4). தன்னைத்தான் புகழ்கிறவன் உத்தமனல்ல. தன்னையே புகழ்ந்து கொள்கிறவன் புத்தியீனன் (2 கொரி. 11:16). பைத்தியக்காரன் பேச்சை யார் ரசிப்பார்கள். பெருமை பேசுதலை பெரியவர் பொறுக்க மாட்டார். அவன் நாவை கர்த்தர் அறுத்துப் போடுவார் (சங். 12:3). பெருமை பேசுகிறவன் சிறுமை அடைவான்.

உன்னையே நீ புகழாதே!

அடுத்தவன் உன்னை புகழட்டும்!

பிறத்தியான் புகழும்படி கிரியை செய்!

ஒருவன் சொல் தவருதவனுனல் அதாவது வாயிலிருந்து புறப்படுகிற சொல்லில் தவறு இல்லாதிருக்குமானல் அவனே பூரண புருஷன் (Perfect man).

"மரணமும், ஜீவனும் நாவின் அதிகாரத்திலிருக்கும்; அதில் பிரியப்படுகிறவர்கள் அதின் கனியைப் புசிப்பார்கள்"

நீதி. 18:21.

சிறுவர் பகுதி

# தேவாலய பக்தி வைராக்கியம்.

நாசரேத்து ஊர் அன்று விழாக்கோலம் பூண்டிருந்தது. அவ்வூரில் கிறிஸ்தவர்களும், மற்ற மார்க்கத்தைச் சேர்ந்தவர்களும் காணப்பட்டனர். அந்நாள் புறமார்க்கத்தாரின் பண்டிகை நாளாயிருந்தது. ஆதலால் எங்கும் வாண வேடிக்கைகளும், அலங்கார வளைவுகளும், பல வர்ண மின் விளக்கு வரிசைகளும் கண்ணைக் கவர்ந்து கொண்டிருந்தன மற்ற ஊர்களிலிருந்தும் மக்கள் அங்கே வந்து குவிந்த வண்ணமாக இருந்தார்கள். அலங்கரிக்கப்பட்ட ஊர்தியில் அவர்களுடைய சாமிகளை ஊர்வலமாக கொண்டு சென்ருர்கள். மக்கள் வெள்ளம் திரள், திரளாய் பின் சென்றது.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த சிறுவர்கள் எல்ருேம், நெகேமியாவும் தாங்கள் ஆராதனை செய்வதற்கு சொந்தமாக ஒரு தேவ ஆலயம் இல்லையே என்று மனம் துக்கித்துக் கொண்டிருந்தார்கள். ஆறுமாதங்களுக்கு முன்பு தேவாலயம் கட்டுவதற்கு அஸ்திபாரம் போடப்பட்டு, வேலை நிறுத்தப்பட்டிருந்தது.

அன்றைய தினம் ஞாயிறு பள்ளியில், ஆசிரியர் 2 சாமு. 7:2ம் வசனத்தை பிள்ளைகளுக்கு விளக்கிக் கொண்டிருந்தார். அந்த வசனமாவது: தாவீது ராஜா தீர்க்கதரிசியாகிய நாத்தானை நோக்கி: பாரும் கேதுரு மரங்களால் செய்யப்பட்ட வீட்டிலே நான் வாசம் பண்ணும் போது தேவனுடைய பெட்டி திரைகளின் நடுவே வாசமாயிருக்கிறதே என்றான். அருமையான பிள்ளைகளே, இதோ நமது ஊரில்

நாக்கு சொந்தமான ஓர் ஆலயம் இல்லை. வாடகை வீட்டில் ஆராதனை நடந்து கொண்டிருக்கிறது. ஆனல் நாமோ நல்ல வசதியுள்ள வீடுகளில் குடியிருக்கிறோம் அந்நாட்களிலே தாவீது ராஜா, கர்த்தருடைய ஆலயத்தை கட்டுவதில் எவ்வளவு வைராக்கியமாக இருந்தார் என்று பாருங்கள்.

எனவே தேவனுகிய கர்த்தரும் தனது தீர்க்கதரிசி மூலமாக ராஜாவை நோக்கி: இப்பொழுதும் கர்த்தர் உனக்கு ஒரு வீட்டைக் கட்டுவார் என்று அறிவிக்கச் செய்தார் (1 நாளா. 17:10). ஆகவே நீங்களும் கர்த்தருடைய ஆலயத்தை கட்டுவதற்கு வைராக்கியமாக இருங்கள், உதவி செய்யுங்கள், ஜெபம் பண்ணுங்கள் அப்பொழுது கர்த்தரும் உங்களது நடுவில் தமது வாசஸ்தலத்தை ஸ்தாபிப்பார். உங்களுடைய இல்லங்களிலும் உள்ளங்களிலும் வாசமாயிருப்பார். மேலும், பரலோகத்திலும் உங்களுக்காக அழகான மாளிகை கட்டி வைக்கப்படும் என்று ஞாயிறு பள்ளி ஆசிரியர் எடுத்துரைத்தார்.

எஸ்றாவும், நெகேமியாவும் தங்களது ஊரில் தேவாலயம் கட்டப்பட்டு முடிவு வரையிலும், எந்தவொரு பொழுதுபோக்குகளிலும் கலந்து கொள்வது இல்லை என்றும், புத்தாடைகளும் அணிவதில்லை என்றும், கிடைக்கும் பணத்தை சேமித்து வைத்து ஆலயப்பணிக்கென்று கொடுப்பது என்றும், ஆலய வேலைகளுக்காக ஒரு குறிப்பிட்ட நேரத்தை ஒதுக்கி, அதற்காக ஊக்கமாக ஜெபிப்பது என்றும், தீர்மானித்துக் கொண்டார்கள். அதை செயல்முறை படுத்தவும் தொடங்கினர்கள். எஸ்றாவும், நெகேமியாவும் வசதிபடைத்த குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். எனவே கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு விலையுயர்ந்த ஆடம்பரமான ஆடைகளை அணிவது வழக்கம். கிறிஸ்துமஸ் பண்டிகை நாள் நெருங்கிக் கொண்டிருந்தது அவர்கள் தங்கள் தங்கள் பெற்றோரிடம்: இந்த ஆண்டு கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு எனக்கு புத்தாடை வேண்டாம் அதற்காக நீங்கள் எவ்வளவு செலவு செய்ய போகிறீர்களோ, அதை என்னிடம் கொடுங்கள் நான் அதை ஆலயப் பணிக்காக சேமித்து வைக்க வேண்டும் என்றார்கள்.

கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு அநேக மக்கள் மிகவும் ஆடம்பரத்துடனும், அலங்காரத்துடனும் வந்திருந்தார்கள். ஆனல் மிகவும் சாதாரணமான உடைகளை அணிந்து கொண்டு எளிமையான கோலத்தில் வந்திருந்த எஸ்றாவையும், நெகேமியாவையும் கண்ட சபையின் போதகர் காரணம் என்னவென்று கேட்டார். அவர்களும் தாங்கள் கர்த்தருடைய ஆலயத்தை முன்னிட்டு செய்து கொண்ட தீர்மானத்தை சபையில் அறிவித்தார்கள். அவர்களது "பக்தி வைராக்கியம்" அநேகரைப் பட்சித்தது. உடனே மக்கள் யாவரும் தங்கள், தங்கள் திராணிக்குத்தக்கதாக ஆலயப் பணிக்கென்று தாராளமாக பண உதவி செய்ய மனமுவந்து முன் வந்தார்கள் நிதியும் திரட்டப்பட்டு, தேவாலயமும் விரைவிலே கட்டி முடிக்கப்பட்டது. தேவாலயப் பிரதிஷ்டை நாளும் அறிவிக்கப்பட்டது.

அவ்வூரிலுள்ள துன்மார்க்க இயக்கங்களும் அதைக் கேள்விப்பட்டன. எவ்வாறுயினும் தேவாலயப் பிரதிஷ்டையில் இடையூறுகள் செய்ய வேண்டும் என அவர்கள் திட்டமிட்டனர். அதே நாளில், தங்களது சாமிகளுக்கு விசேஷித்த பூஜை நடத்துவதற்கு ஏற்பாடும் செய்தார்கள் தேவாலயப் பிரதிஷ்டை மிகவும் மகிமையாக நடந்து கொண்டிருந்தது. துதிகளின் மத்தியில் வாசஞ் செய்வதற்காக தேவாதி தேவன் பரலோகத்திலிருந்து இறங்கி அங்கே எழுந்தருளினர்.

துன்மார்க்கர்களோ தேவாலயவீதியைச் சுற்றிலும் தூஷணமான கரகோஷங்களை

எழுப்பிக் கொண்டு ஊர்வலம் வந்தார்கள். ஒலிபெருக்கிகள் மூலமாகவும் ஊளையிட்டார்கள். அப்பொழுது திடீரென்று வானத்தில் மழை மேகங்கள் வந்து குவிந்தன. மழைக்கு ஒதுங்குவதற்காக அத்துன்மார்க்கர்கள் தங்களுடைய பிரமாண்டமான விக்கிரக கோவிலுக்குள் சென்றார்கள். அந்தோ! பரிதாபம் துன்மார்க்கர்கள் போட்ட வெளிச்சம் அவர்களுக்கு பாவமாக முடிந்தது. இடியும் மின்னலும் அவர்கள் தங்கியிருந்த விக்கிரக கோவிலின் மேல் விழுந்ததால், கோவிலும் இடிந்து விழ அங்கிருந்த துன்மார்க்கர்களும், அவர்களைச் சேர்ந்த அநேக மக்களும் கூட மரித்து போனார்கள்.

இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரின் மகிமைக்கு முன்பாக அவர்கள் நிற்கக் கூடாமல் அழிந்து போனார்கள். கர்த்தருடைய கை அவர்கள் மேலும், அவர்களது தெய்வங்கள் மேலும் பாரமாயிருந்தது (1 சாமு. 5:7). தேவ ஜனங்களுக்கோ களிப்பும், மகிழ்ச்சியும் கர்த்தரால் உண்டாயிற்று அல்லேலூயா!

அன்பான தேவனுடைய பிள்ளைகளே உங்களது ஊரில் உங்களுக்கு தேவ ஆலயம் உள்ளதா? நீங்கள் மச்சு வீடுகளில் குடியிருக்க, தேவ ஆராதனை ஓலைக்குடிலில் ஒட்டை வீட்டில் நடைபெறலாமா? அஸ்திபாரமிட்டு அநேக மாதங்கள் ஆகியும் ஆலயம் கட்டி முடிக்கப்படாததைப் பார்த்து, சத்துருவும் அவனது கூட்டத்தாரும் நமது தேவனையும், நம்மையும் ஏளனம் செய்கிற வார்த்தைகள் நமது காதுகளில் விழவில்லையா? தேவனுடைய வீட்டைக் குறித்து உங்களுக்கு பக்தி வைராக்கியம் உண்டா?

நான், கர்த்தருக்கு ஓர் ஆலயத்தை கட்டி முடிக்கும் வரைக்கும் என் கண்களுக்கு நித்திரையும், என் இமைகளுக்கு உறக்கத்தையும் வரவிடுவதில்லை என்றும், என் படுக்கையாகிய கட்டிலின் மேல் ஏறுவதுமில்லை என்றும் (சங். 132:2-4) தாவீது ராஜா சொன்னது போல நீங்களும் சொல்ல மாட்டீர்களா? பரலோகத்தின் தேவனானவர் நமக்கு காரியத்தை கை கூடி வரப்பண்ணுவார். வாருங்கள், அவருடைய பிள்ளைகளாகிய நாம் எழுந்து கர்த்தருடைய ஆலயத்தைக் கட்டுவோம். கர்த்தர் எருசலேமைக் கட்டி, தமது மகிமையில் வெளிப்படுவாராக. ஆமென்.

"சேனைகளுடைய கர்த்தரின் வீடாகிய ஆலயம் கட்டப்படும்படிக்கு அதின் அஸ்திபாரம் போடப்பட்ட நாள் முதற் கொண்டு உங்கள் கைகள் திடப்படக் கடவது என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்." சகரியா 8:9.

## ஞானஸ்நானம் பெற்று திருச்சபையோடு சேர்த்து கொள்ளப் பட்டவர்கள்:-

| நாள் | கிளை | நபர்கள் |
|---|---|---|
| 10.11.93 | குமாரபாளையம் | 8 |
| 11.11.93 | சேலம் | 19 |
| 15.11.93 | கோயம்புத்தூர் | 9 |
| 18.11.93 | நெய்வேலி | 13 |
| 25.11.93 | சென்னை | 12 |

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

3. அற்பமாய் தோன்றுகிற விசுவாசம் இத்தனை பெரிய நன்மைகளை எப்படி கொண்டுவருகிறது என்று கேட்டால் விசுவாசம் தானாய் அவைகளைக் கொடாது. இயேசு கிறிஸ்துவினிடத்திலுள்ள தேவ கிருபையே இவைகளைக் கொடுக்கிறது. விசுவாசம் அவைகளை வாங்குகிற கருவியாய் மாத்திரம் இருக்கிறது. அதை ஒரு உவமையினால் காட்டுவோம்.

ஒரு பெரிய மனிதன் நிர்பாக்கியமுள்ள எளியவர்களுக்கு நாடோறும் சகல விதமான பதார்த்தங்களை சமைத்து, அதை அவர்கள் எல்லாரையும் கிரயமின்றி சாப்பிட அழைக்கும் போது, அந்தப்படி போய் சாப்பிடுகிறவர்கள் திருப்தியடைவார்களல்லவா? அதுபோல தேவன், தங்களை இரட்சிக்கத் திராணியில்லாத பாவிகளுக்கு இரட்சகராக இயேசு கிறிஸ்துவைக் கொடுத்து அவர்களுக்கு வேண்டிய நன்மைகளை எத்தனமாக்கி வைத்துக் கொண்டு, அவைகளை ஆயத்தமாக்கி வைத்துக் கொண்டு அழைக்கிறார். வந்து எடுத்துக் கொள்ளுகிறவர்கள் அவைகள் எல்லாவற்றையும் அடைகிறார்கள். அதையேயன்றி அவர்கள் வேறொன்றையும் செய்ய வேண்டியதில்லை. அப்படி ஒன்றை செய்கிறதற்கு இடமுமில்லை.

அன்றியும் பூர்விகத்திலே இஸ்ரவேல் ஜனங்கள் தேவனுக்கு விரோதமாய் முறுமுறுத்ததற்காக கொள்ளிவாய்ச் சர்ப்பங்கள் தோன்றி அவர்களைக் கடித்து அநேகர் செத்துப் போனார்கள். மற்றவர்கள் மனஸ்தாபப்பட்டு இரக்கத்தைப் பெற்றார்கள். அப்பொழுது மோசேயானவர் வெண்கலத்தால் ஒரு சர்ப்பத்தை செய்து, அதை ஒரு கம்பத்தின் மேல் ஏற்றி வைத்து, கடிக்கப்பட்டவன் அதை நோக்கிப் பார்க்கவும் கட்டளையிட்டார். அந்தப்படியே அதை நோக்கினவர்களெவர்களோ அவர்கள் பிழைப்பார்கள்.

சிலுவையில் ஏற்றப்பட்ட கிறிஸ்துவை நோக்குகிற பாவிகள் யாவரும் நித்திய ஜீவனை அடைவார்கள். அவரை நோக்குகிறதும், அவரிடத்தில் வருகிறதும், அவரை ஏற்றுக் கொள்கிறதும் அன்பு வைக்கிறதுமே விசுவாசமாகும்.

திருஷ்டாந்தமாக, இயேசு கிறிஸ்து சொன்னது: என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் ஒருக்காலும் தாகமடையான் என்றும், என்னிடத்தில் வருகிறவனை நான் புறம்பே தள்ளுகிறதில்லை என்றும் நீங்கள் ஞான விதமாய் மனுஷ குமாரனுடைய மாம்சத்தைப் புசித்தும், அவருடைய இரத்தத்திலே பானம் பண்ணாமலிருந்தால் உங்களுக்குள் ஜீவன் இல்லை என்றும், என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம் பண்ணுகிறவனுக்கு நித்திய ஜீவன் உண்டென்றும், சர்ப்பமானது வனாந்தரத்திலே மோசேயினால் உயர்த்தப்பட்டது போல மனுஷ குமாரனும், அவரை விசுவாசித்துக் கொள்ளுகிறவன் எவனோ அவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு உயர்த்தப்பட வேண்டும் என்று சொல்லியிருக்கிறார் (யோ. 6:35,38,52-58;3:14,15).

4. மனிதனுடைய குறைவு இவ்வளவாயிருக்கிறபடியால் தேவனே சகலத்தையும் ஆயத்தம் பண்ணியிருக்க அவர் விசுவாசத்தையேயன்றிவேறொன்றையும் அவனிடத்தில் கேட்கிறதற்கு ஏதுவில்லை. நீங்கள் இத்தனை கற்பனைகளைக் கைக்கொள்ள வேண்டுமென்றும், இத்தனை வருத்தப்பட வேண்டுமென்றும், இத்தனை கருமங்களைச் செய்ய வேண்டுமென்றும் இப்படிச் செய்தால் உங்களை இரட்சிப்பேன் என்றும் சொல்வாரானால் தங்களை இரட்சிக்கிற

கிருபையை தாங்களே சம்பாதித்துக் கொள்கிறதாயிருக்குமல்லவா? அப்படியானால், கிறிஸ்து இயேசுவை தேவன் அனுப்ப வேண்டியதில்லையே. ஆகையால் பாவிகள் எந்த நன்மைகளைச் செய்தாலும், அவைகளெல்லாம் அசுத்தமாயிருக்கிறபடியால் அவர்கள் செய்த பாவங்களுக்கு இது நிகராகாது.

ஆதலால், அவர் பாவமில்லாத கிறிஸ்துவை நமக்கு நீதியாகக் கொடுத்தார். இப்படிச் செய்த பின்பு அவர்கள் அவரை விசுவாசித்துக் கொள்ளும்படி கட்டளையிடுகிறது நியாயமல்லவா! அதினாலே, பாவிகளை இரட்சிக்கிற கிருபைக்கான புகழ்ச்சி அவர்களது தேவனுக்கே கொடுப்பது நியாயம். இத்தனை பெரிய பொருளாகிய விசுவாசத்தை நம்முடைய புத்தியினாலும் பெலனாலும் அடையக்கூடுமா?

நாம் ஜென்ம பாவமும், கரும பாவமும் உள்ளவர்களாய் இருக்கிறதினாலே நித்திய ஜீவன் இல்லாமல் செத்தவர்கள் போல் இருக்கிறோம். செத்தவன் தன்னைத் தானே பிழைப்பிப்பது எப்படி அல்லது நன்மைகளையும் திவ்விய கிருபைகளையும் உணராமல் இருக்கிறவன் இந்த விருப்பங்களை தனக்குள்ளே எப்படி உண்டாக்குவான்? ஆதலால் தேவனே அவர்களை பிழைக்க, பிழைப்பிக்க வேண்டும். அவரே, அவர்களில் புதிதாய் விசுவாசத்தை எழுப்ப வேண்டும். அல்லது மறுபடியும் அவர்களை பிறப்பிக்க வேண்டும். அந்தப்படி அவரே அக்கிரியைகளை ஆவியினாலே செய்து வருகிறார்.

5. சிலர், நாம் எந்தப் பொருளை விசுவாசித்தாலும், விசுவாசத்தின்படி நடக்குமென்று எண்ணி விக்கிரகங்கள் மேல் பற்றுதலாய் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட எண்ணம் எப்படி இருக்கிறதென்றால் விசுவாசத்தில் உறுதியாயிருந்தாலும், நாம் விசுவாசிக்கிற பொருள் நமக்கு வேண்டிய நன்மையைக் கொடுக்க திராணி இல்லாததாயிருந்தால் பிரயோஜனம் இருக்க மாட்டாதே.

விசுவாசம் உண்டென்று ஒருவன் ஓட்டைப் படகை நம்பி சமுத்திரத்தில் போகத் துணிவானோ? விசுவாசத்தினாலே சாணியை சாதம் என்று ஒருவன் சாப்பிட்டால் பிரயோஜனம் உண்டோ?

ஒரு காசும் இல்லாத் தரித்திரன் எப்படி லட்ச ரூபாய் கொடுப்பான்? வல்லமையற்றவன் எப்படி திரவியம், புத்திரன், சந்தோஷம் முதலானவைகளைக் கொடுக்க முடியும்? தகுதியில்லாத பாவிகளான குருக்கள், ராஜாக்கள் முதலானோர் எப்படி மற்றவர்களை பாவத்தினின்று இரட்சிப்பார்கள்? குருடன் குருடனுக்கு வழிகாட்டக் கூடுமோ?

ஆதலால், நமக்கு வேண்டிய நன்மைகளைக் கொடுக்கத் திராணியுள்ளவராலேயன்றி மற்ற ஒருவராலும் நமக்கு நன்மை இல்லை. மேலும் சகல விதமான நன்மையும் செய்ய வல்லமையுள்ள தேவனைத் தவிர வேறொருவரும் நமக்குக் கொடுக்கத் தகாததை கொடுப்போமென்று எவ்வளவு உறுதியோடு அவர்கள் சொன்னாலும் நாம் விசுவாசித்தாலும் ஒன்றும் ஆகிறதில்லை.

ஆதலால், தேவன் தேவனுடைய சித்தத்துக் கேற்றவைகளை கொடுப்பார் என்று நாம் விசுவாசித்துக் கொள்ளலாமேயன்றி எல்லாவற்றையும் கொடுப்பார் என்று நாம் விசுவாசிக்கக் கூடாது. விசுவாசம், தேவனுடைய வசனத்திற்குட்பட்டு விசுவாசிக்கிறதே விசுவாசம் என்பதாம்.

தொடரும்.)

"விசுவாசமானது நம்பப்படுகிறவைகளின் உறுதியும், காணப்படாதவைகளின் நிச்சயமுமாயிருக்கிறது" எபி. 11:1.

# சத்திய வேதம்

[தொடர்ச்சி]

**சத்திய வேதத்தைக் குறித்துப் பலருக்குத் தெரியாத சில விஷயங்கள்:**

நீங்கள் வேதத்தை எப்படி படித்து வருகிறீர்கள்? காலைதோறும் அல்லது மாலைதோறும் ஏதாவது ஒரு பாகத்தைப் படித்து வருகிறீர்களா? சத்திய வேதம் முழுவதையும் படித்திருக்கிறீர்களா? அவ்வாறு செய்வது மிகக் கஷ்டமாகத் தோன்றினாலும் சத்திய வேதத்தின் அருமையை அறிந்து கொள்வதற்கு வேறு வழியில்லை.

எந்த புஸ்தகமாயினும் அதில் அங்கும் இங்கும் கொஞ்சம் கொஞ்சம் படிப்பதினால் அதின் பொருளை நாம் அறிந்து கொள்ள இயலாதே. மீண்டும் நாம் சத்திய வேதத்தை மிகக் கவனத்தோடு படித்தல் வேண்டும். அதுவுமின்றி, ஏதோ ஒரு ஆகமத்தையாவது அதிகாரத்தையாவது கருகலானது என்று எண்ணி அதை நாம் விட்டு விடக் கூடாது. ஏனெனில் மிகவும் அழகும் அருமையுமான அநேக வசனங்கள் கருகலான வேத பாகங்களின் மத்தியில் காணப்படுகின்றன. திருஷ்டாந்தமாக புல. 3:22-27; ஏசா. 25:9;

அது நிற்க, வேதாகமத்தின் மேலான தன்மை இன்னதென மனிதர்கள் அறிந்து கொள்வார்களேயாகில் அவர்கள் அதை ஆவலாய்ப் படிப்பார்கள். வேதாகமமானது, பழைய ஏற்பாட்டில் இஸ்ரவேல் ஜனத்தினுடைய வம்ச வரலாறும், அவைகளினூடாகக் காணப்படுகிறது. ஒரு ஜாதியினுடைய சரித்திரத்தில் பலவிதமான தவறுகளும் நற்கிரியைகளும் காணப்படலாம். தவறை இறைவன் காண்பித்துக், கண்டித்துத் தண்டித்து அதற்குத் தண்டனையளித்ததையும், நல்லதை தேவன் ஊக்குவித்ததுமான குறிப்புகளை நாம் காணமுடியும்.

சிலர் வேதாகமத்தைப் படிக்கும்போது அதில் காணப்படுகிற சில தவறான கதைகளை, சரித்திரத்தைப் பார்த்து விட்டு வேதாகமம் தவறு என்று தீர்மானித்து விடுகிறார்கள். அவ்விதமாய் செய்வதற்கு ஏதுவில்லை. ஏனென்றால், மனிதன் எழுதியிருந்தால் அவைகளில் காணப்படுகிற தவறுகளை நீக்கி அவன் திருத்தித் தன்னுடைய மதத்தை அல்லது தேவனைப் புகழ்ந்து எழுதியிருப்பான். தவறான காரியங்களை கூடுமான மட்டும் விலக்கி விட விரும்புவான். ஆனால், அவனும், அவனைச் சார்ந்திருக்கிற சமுதாயமும் எவ்விதமாய் இருக்கிறதோ அதைச் சரியென்று எண்ணியிருக்கிறவன் அதைத் தவறு என்று காட்டமாட்டான்.

வேதாகமம் அவ்விதமாக அல்ல அது தூய ஆவியானவரால் தூண்டப்பட்டு தூய மனிதர்கள் எழுதினபடியால் தவறை தவறு என்றும், சரியானதை சரி என்றும் எழுதியுள்ளார்கள். அனபடியால் அது வேதாகமம் என்பதை அறிந்து கொள்கிறோம். இந்த சரித்திர ஆகமங்களினூடே தேவனுடைய சித்தமும் அவருடைய தீர்மானமும் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. அவைகளை உணர்ந்து கொள்கிறவர்கள் வேதாகமத்தை ஆவலாய்ப் படிப்பார்கள் என்பது திண்ணம்.

உதாரணமாக, ரூத்தின் புத்தகத்தில் மிகவும் நேர்த்தியான காதல் கதை ஒன்று அடங்கியிருக்கிறது. எஸ்தர் ஆகமம் கொலையும், சதியும் நிறைந்த கதை. தானியேல் புத்தகத்தில் சில மிகவும் நேர்மையான கட்டுரைகளும், தரிசனங்களும் அடங்கியுள்ளன. ஓர் ஆளின் ஜீவிய சரித்திரத்தை படிக்க விரும்புவோர் தாவீது என்பவரின் சரிதைக்கு நிகரானதை வேறு எங்கும் காண்பது அரிது. யோபின் ஆகமம், ரோமர் நிருபம் ஆகிய நூல்க

ளில் அடங்கிய தத்துவ ஞானத்தைப் போன்று வேறு எங்கும் காணமுடியாது. அப். 27-ம் அதிகாரத்தில் எழுதியுள்ள கப்பல் யாத்திரை, அப். 26-ம் அதிகாரத்தில் எழுதியுள்ள பவுலின் பிரதிவாதம், 23-ம் சங்கீதத்தில் காணப்படும் சிறந்த செய்யுள், யோ. 17-ம் அதிகாரத்தில் காணப்படும் தூய ஜெபம் ஆகிய இவைகள் நிகரற்றவை எனக் கூறுவது தவருகாது. இப்படிப்பட்ட வேத பாகங்களை சத்தத்தோடும் தகுந்த உச்சரிப்போடும் வாசித்தாலொழிய அவைகளின் மேன்மையையும் அருமையையும் விளங்க முடியாது.

சத்திய வேதத்தைப் படித்து வருவதினால் தங்கள் ஜீவியத்தில் உண்டாகக் கூடிய சித்தி இன்னதென சரிவர அறிந்து கொள்வார்களாகில் அதை மிகவும் கவனமாய் மனுமக்கள் படிப்பர். ஆனபடியினால் இதைச் சரியாய் அறிந்து கொண்டவர்கள் சொற்ப பேர்தான் என்பதை நாம் கண்டிருக்கிறோம். ஆயினும் கடவுளின் திருமொழியானது மனிதர் செய்துள்ள அநேக முதன்மையான செயல்களுக்கு ஆதிகாரணம் என்பதற்கு சந்தேகமில்லை.

உதாரணமாக, மில்டன் என்பவருடைய அரும் பெருங்கவிகள், ஜான் பனியன் என்பவர் இயற்றிய மோட்சப் பிரயாணம், திருப்போர் முதலிய சிரேஷ்டமான நூல்கள், வேத நாயகம் சாஸ்திரியார் பாடிய பாடல்கள், கிறிஸ்தவ கம்பன் கிருஷ்ணப்பிள்ளை இயற்றிய செய்யுள்கள், பண்டித ராமாபாய் செய்தத் திருத்தொண்டு ஆகிய இவைகளுக்கு சத்திய வேத வாக்கியங்களும் பிரமாணங்களுமே ஆதாரம். சத்திய வேதம் ஏவுகிறது போல பெரிய பெரிய நூதனமும், நற்பிரயோஜனமான செய்கைகளில் முயற்சி எடுக்க வேறு எந்த நூலும் மனிதரை ஏவினதில்லை.

உலகத்தின் மாபெரும் விஞ்ஞானிகள் எல்லாரும் கிறிஸ்துவை விசுவாசித்த பக்தர்கள் என்பதை மதியுள்ளோர் மறுக்க மாட்டார்கள். இப்படியிருக்க, நாம் ஆசையாக வேத புத்தகத்தைப் படிக்கவும் சிரத்தையோடு ஆராயவும் வேண்டும். அதன் விசேஷித்த தன்மை இன்னதென்று அறிதலும் அவசியமே. இது விஷயமாய் பின் வருபவைகளை நன்கு கவனிக்க:

1. வேதாகமத்தில் ஏராளமான உவமானங்கள் அடங்கியுள்ளன. அந்தந்த உவமான கதைகளின் மூலம் நாம் கற்க வேண்டிய சத்தியம் இன்னதென நாம் சிந்தனை செய்வதே சரி. அதை விட்டு அந்தந்த உவமையின் சகல நிவிர்த்திக்கும் ஞானார்த்தம் உண்டென சாதிப்பது தவறு. மற்றப்படி பிதாவாகிய கடவுள் அநீதியுள்ள நீதிபதியாகவும் (லூக். 18:1-8) கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கடின நெஞ்சுள்ளவராகவும் (லூக். 19:11-28) எண்ணப்படுவார்கள். ஆகையால், எழுத்துக்கு எழுத்து அர்த்தமெடுக்காமால் உவமையின் மூலம் கர்த்தர் நமக்குப் போதிக்கும் ஒரு கருத்து மாத்திரம் அதில் உண்டு என்பதை அறிய வேண்டும்.

2 சத்திய வேதம் எக்காலத்துக்கும், உலகத்தின் எல்லா பாகங்களுக்கும் உரியது என்பதை நினைத்துக் கொண்டே அதைப்படிப்பது அவசியம். ஒருபாகம் ஒருவேளை நமக்கு இலகுவில் விளங்காமற் போனாலும் அது வேறொரு தேசத்தின் ஜனங்களுக்கோ அதிக விசேஷமாக இருக்கக் கூடும். அதுபோல இந்தக் காலத்தில் விளங்காத சில வேத வசனங்கள் வருங்காலத்தில் நன்கு விளங்கும் என்பது திண்ணம்.

எடுத்துக்காட்டாக, பல வேத வாக்கியங்களில் வெண்மைக்கு உவமானமாக உறைந்த மழையைக் குறித்து வாசிக்கிறோம். தென் இந்தியாவில் உறைந்த மழையில்லாமையால் இந்த உவமானம் நமக்கு சரிவர விளங்காவிடினும் வடஇந்தியாவில் உறைந்த மழை அடிக்கடி

காணப்படுகின்றமையால் அப்பாகத்தில் இந்த உவமானம் நன்கு விளங்கும் (பனிக் கட்டி)

பூர்வ காலத்தில் பூமி தட்டையாக இருப்பதாக மக்கள் நினைத்தபடியால் ஏசா. 40:22 ல் சொல்லிய பூமி உருண்டை அக் காலத்திலே அநேகமாக மக்களுக்கு விளங்கி இருக்காது. இக்காலத்திலோ அது எல்லாருக்கும் இலகுவில் விளங்கக் கூடும்.

3. சத்திய வேதத்தைப் படிக்கும் போது பின் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டியது நலம். அது யாதெனில் பல இடங்களில் கர்த்தர் என்னும் பதம் பெரிய எழுத்தில் அச்சிட்டு இருக்கிறது. அப் பதம் அவ்வாறு அச்சிடப்பட்டதின் நோக் கம் மூல பாஷையில் யேகோவா என்னும் நாமம் எந்தெந்த இடத்தில் பிரயோகிக்கப் பட்டதோ அந்த இடத்தைக் குறிப்பிடும் படியாக இப்படி அச்சிடப்பட்டுள்ளது.

4. வேதாகமத்தில் சிலபாகங்கள் ஒன் றுக்கு மேற்பட்ட இடங்களில் வருவ துண்டு. அவ்விதமாக வரும் போது அந்த எல்லாப் பாகங்களையும் ஒன்றுகச் சேர்த்து முழுக் கருத்தை அதின் சரித்தி ரத்தை அறிந்து கொள்ள வேண்டும். ஒரே ஒரு பாகத்தில் வருகிறவைகள் மாத் திரம் பூரணமானதல்ல, எல்லாம் சேர்ந்தே அது பூரணத்தைக் கொடுக்கும்.

விசேஷமாக, நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் சரித்திரத்தை நான்கு சுவிசேஷங்களில் வாசிக்கிறோம். நான்கு சுவிசேஷங்களிலும், நிருபங்களிலும் வெளிப்படுத்தின விசேஷத்திலும் கர்த்தரா கிய இயேசு கிறிஸ்துவைப் பற்றிய சரித்தி ரம் எழுதப்பட்டுள்ளது. இவைகள் எல் லாம் சேர்ந்தே இயேசு கிறிஸ்துவின் முழு சரித்திரமாகும். ஏதோ ஒன்றை அல்லது ஒரு பாகத்தை வைத்துக் கொண்டு இது தான் என்று சாதிக்க, சந்தேகிக்க, குழம்ப அவசியமில்லை. இயேசு கிறிஸ்து முழு வேதாகமத்திலும் வெளிப்படுத்தப்பட்டுள் ளார். விசேஷமாக, நான்கு சுவிசே ஷங்களிலும் நிருபங்களிலும் வெளிப்படுத் தின விசேஷத்திலும் அவரைப் பற்றி எழுதப்பட்டுள்ளது.

(தொடரும்)



"கர்த்தருடைய புஸ்தகத்திலே தேடி வாசியுங்கள்; இவைகளில் ஒன்றும் குறை யாது; இவைகளில் ஒன்றும் ஜோடில்லா திராது; அவருடைய வாய் இதைச் சொல் லிற்று; அவருடைய ஆவி அவைகளைச் சேர்க்கும்" ஏசா. :16.



**வாசகர் கவனத்திற்கு:-**

1994-ம் ஆண்டிலிருந்து உங்கள் சந்தா எண் மாற்றப்படவிருப்பதால், சந்தா, கடிதம் அனுப்புவோர் கவனமாக தங்கள் புதிய சந்தா எண்ணை அவைகளில் குறிப்பிடும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.